# கணபதி ஆயிரம்


ஆக்கியோன்

வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள்

பதிப்பாசிரியர்

திருவேற்காடு அருட்கவிச் சக்ரவர்த்தி

ஸ்ரீ தேவி கருமாரிதாச சுவாமிகள்


''உள்ளம் உடைமை உடைமை''


வெளியீடு

உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்

23, திருமலை நகர் இணைப்பு

பெருங்குடி, சென்னை-600 096

## Bibliographical Data


| | | |
|---|---|---|
| Title of the book | : | GANAPATHY AYIRAM |
| Author | : | Tandapani Swamikal |
| Publisher | : | Ulakat Tamilk Kalvi Iyakkam<br>33, Tirumalainagar Annexe.<br>Perungudi, Madras-600 096. |
| Publication Number | : | 1 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 9-11-1984 |
| Edition | : | First |
| Paper used | : | White Printing<br>16.2kg D/Demy |
| Size of the Book | : | 21 × 18 cms |
| Printing Type used | : | 10, 12 points |
| Number of Pages | : | viii+168 |
| Number of Copies | : | 1200 |
| Price | : | Rs. 15/- (Fifteen Rupees only) |
| Printers | : | Sri Gomathy Achagam,<br>7, Chinnappa Rowther Street,<br>Triplicane, Madras-5. |
| Binding | : | Card board |
| Artist | : | Eswari |
| Subject | : | Prayer songs of Thousand<br>Poems on Lord Ganapathy. |

# முன்னுரை

தண்டமிழ் வண் ணச்சரபத் தண்டபாணிப்பெருமான்
விண்டஏழாயிரம்பா மேவுமதில் கொண்ட
கணபதிக்காம் ஆயிரமாக் காணும் தொகுப்பாய்
அணைவுறஇந் நூலமைந்த தாம்

'கணபதி ஆயிரம்' என்ற இந்நூல், விநாயகப் பெருமான் மீது பாடப் பெற்றதாகும். இந்த ஆயிரம் பாடல்கள் ஒரு தொடராக யாக்கப்பட்டதல்ல. எவ்வாறெனில்,

இந்நூலாசிரியரான வண்ணச்சரபம் அருட்டிரு தண்டபாணி சுவாமிகள், தமதநுபவத்திற் கண்டறிந்த முறைப்படி ஞாயிறு முதல் சனி வரையுள்ள கிழமைகள் ஏழும் முறையே ஞாயிறு சூரியனுக்கும், திங்கள் சிவபிரானுக்கும், செவ்வாய் அம்பிகைக்கும், புதன் திருமாலுக்கும், வியாழன் கணபதிக்கும் வெள்ளி முருகப்பெருமானுக்கும், சனி பொதுக்கடவுளுக்குமாக கிழமைகள் அமைந்திருப்பதைக் கொண்டு, பல நூல்கள் துதிப்பாடலாகத் தனித்தனியாயும் தொகையாயும் பாடியுள்ளர்.

அவ்வகையில், [1]ஞாயிறன்று சூரியனுக்கு ஒரு பதிகம் பத்துப் பாட்டு, [2]திங்களன்று சிவபிரானுக்கு ஒரு பதிகம் பத்துப்பாட்டு, [3]செவ்வாயன்று அம்பிகைக்கு ஒரு பதிகம் பத்துப்பாட்டு, [4]புதனன்று திருமாலுக்கு ஒரு பதிகம் பத்துப்பாட்டு, [5]வியாழ என்று கணபதிக்கு ஒரு பதிகம் பத்துப்பாட்டு, [6]வெள்ளியன்று முருகப்பெருமானுக்கு ஒரு பதிகம் பத்துப்பாட்டு, [7]சனியன்று பொதுக்கடவுளுக்கு ஒரு பதிகம் பத்துப்பாட்டு என்ற முறையில் எழு சமயக் கடவுட்குமாகப் பாடிய பாடல்கள் 'ஏழாயிரப் பிரபந்தம் என்ற முறையில் பாடல்கள் தொகை ஏழாயிரமாகும்,

எனவே ஒவ்வொரு சமயக் கடவுட்கும் நூறுபதிகமாக ஆயிரம் பாடல் அந்த முறைப்படி வரிசையில் பாடி ஏட்டுப் புத்தகத்தில் எழுதி வைத்துள்ளனர் சுவாமிகள்.

அவற்றுள், சூரியனுக்கான பதிகம் நூற்றினைத் தனியே எடுத்தெழுதி 'ஞாயிறு ஆயிரம்' என்ற பெயரில் பதித்து முதலில் வெளியிடப் பெற்றது. இரண்டாவதாக 'திருமால் ஆயிரம்' என்ற பெயரில் ஆயிரம் பாடல்களைத் தனியே எடுத்தெழுதிப் பதித்து வெளியிடப் பெற்றது. மூன்றாவதாக முருகப்பெருமான் மீதுள்ள ஆயிரம் பாடலை திருத்தணி தேவத்தான மூலம் பதித்து முருகன் ஆயிரம் என வெளியிடப் பெற்றது. மற்றும் சிவன் ஆயிரம், சத்தி ஆயிரம், பரம்பொருள் ஆயிரம், எழுதப் பெற்றிருக்கிறது. அதோடுள்ளதே இந்த கணபதி ஆயிரமாகும். இவை தொடர்ந்து பதிப்பாகி வெளியாக வேண்டியது அன்பர்கள் கடமையாகப் புண்ணியப் பொருள் முன் வரவேண்டும்.

மேற்கண்ட மூன்று ஆயிரங்களைப் பதித்துவெளியிட்டதன்றி. முருகப்பெருமான்மீது தனித்தனி பாடலகப் பெற்றது திப்பாடல்களைத் தொகுத்துப் பதித்து வடபழனிக் கோயில் மூலமாக 'முருகன் மூவாயிரம்' என்ற பெயரில் ஒரு ஆயிரம் பாடல்கள், வெளிவந்தன. மற்றும் இரண்டு ஆயிரங்களில் ஒன்று தண்டபாணி சுவாமிகள் இயற்றியருளிய திருப்புகழ்ப்பாக்களும் அந்தாதியுமாக மேற்படி வடபழனித் திருக்கோயில் மூலம் பதிக்கப்பெற்று வெளிவரவுள்ளன.

இவற்றின் ஆசிரியரான வண்ணச்சரபம். தண்டபாணி சுவாமிகள். தமது இளம் பருவத்தில் முதலாவதாகக் கைக் கொண்டது. கணபதி வழிபாடேயாகும். இவரது தந்தை செந்திநாயகம் பிள்ளை. ஊர் திருநெல்வேலி. தந்தையின் நண்பர். சீதாராமநாய்க்கர் தந்தை இவரது சிறுவயதிலேயே, மறைந்தனர். நாயக்கர் மந்திர உபாசனையுடையவர். இவரது பூர்வ புண்ணியம் கருதிக் கணபதி மந்திரத்தை உபதேசித்து வழிபாட்டு முறையையும் கூறினர். அதன்படி வழிபாடு செய்தனர். அது சமயம் பல காட்சி காணப்பெற்றனர். கணபதி மந்திரத்துடன் இலக்குமி மந்திரத்தையும் உபதேசித்தாராம் இலக்குமி கணேசர் என்ற ஒரு பெயரும் கணபதி வழிபாட்டிலுண்டு. இவ் விவரத்தை தமத்துபவமும் வரலாறுமாகத் தாமே பாடிவைத்துள்ளன. குருபரதத்துவ நூலிற் கூறியவாற்றாலறியலாம்.

''எற்சிசு வெனக்கொள் செந்தினா யகவேட்
  கினிய சோதரனி கருறவோன்
நற்சி றப்புறும் இல்லறத் தினன்சி
  தாரா மனாநனில் பெயர்க்குரவன்
பற்சில விழுந்து முளைத்துறும் இளமைப்
  பருவ நாளையில் எனைப்பற்றியே
பொற்சிலை மிசைஞர்கள் கையினை வரைந்த
  பூட்கையின் உபாசனை புகன்றான்.''

என்ன காரணமோ அதனுடன் சேர்த்தே இலக்குமி மந்திர மொன்றும் சொன்னனன். இரண்டும் செபித்து திருவடியில் தூய் மலர் இலைதளிர் பெய்து உன்னலும் செய்தேன் என்றுகூறியதா லறியலாம். அவ்வாறு செபம் தியானம் செய்துள்ளாள் ஒன்றில் கணபதி தேவ திசையிற் காட்சி நல்கினர். அது சமயம் இவர் அண்மையிற்சென்று நோக்கினர். கணபதி திருநீற்றினைத் துதிக்கை நுனியாற்றொட்டு இவர் நெற்றியிற் பூசினர். கண்டு மகிழ்ந்தனர். தன் உபாசனை கணபதி வழிபாட்டிலிருந்து முருகன் உபாசனையிலும் பற்றுடையாராய் முருகதாசர் என்ற பெயருடன் விளங்கினர். ஒரு நாள் கணபதிப் பெருமானிடம். நீர் என் பெரியப்பா அல்லவா என்றாராம் கணபதி ஆமாம் என்று ஒப்பினராம். இது போன்ற செய்திகள் பல வரலாற்றில் வருகின்றன. இதையநுசரித்தே, திருவருள் நாட்டம் என்ற நூல் ஒன்றில் பெரியப்பாப்பத்து என்று பதிகம் ஒன்று பாடியுள்ளனர்.

திருவாமாத்தூரில் உள்ள சுவாமிகள் திருமடத்தில் அவரால் வழிபட்ட கணபதி வடிவம் பெரிய அளவில் இருக்கிறது. அவரைக் கெம்பீர விநாயகர் என்று பெயரிட்டுப் பாடியுள்ளனர். கீர்த்தனை ஒன்றில்

எடுப்பு

கெம்பீரவி நாயகரே என்சொல்
கேளும் கேளும்ஐயா மாதைக்—கெம்பீர

தொகுப்பு

தம்பியென்று வேலனைக் கூப்பிட்டேன்
சஞ்சலம் தீர்த்திடச் சாற்றும் ஐயாஅருட்—கெம்பீர

சுவாமிகள் பாடுகின்ற பதிகங்களில் ஒவ்வொரு சமயத்துக்கும் ஒவ்வொரு வகையில் (முத்திரை) அடையாளமாக எட்டு ஒன்பது பத்து என்ற எண் வரும்போது அமைத்துப் பாடுவது மரபு. அம்முறையில் இந்தக் கணபதி பதிகத்தும் எட்டாவதில் தாம்பிரவன்னி காவேரி ஆறுவாச் செய்தல் ஒன்பதாவதில், வள்ளியின் முருகப்பெருமான் திருமணம் பத்தாவதில் ஒளவை யைக் கயிலையில் விட்டது என்ற செய்திகளையமைத்துள்ளனர். இப்படி ஊர் சம்பந்தமான பதிகங்கள் பலவுண்டு.

பத்து என்ற எண்ணில் வரும் பாடல் யாவும் கணபதிக்கான வியாழனன்று ஐந்தாவது வரிசையில் பாடப்பட்டவை. ஏழு நாட்கள் கடந்த பின்பே ஒவ்வொரு கடவுட் பாடல் பாட வரும். முன் வாரத்தில் என்ன யாப்பு. என்ன கருத்து வைத்துப் பாடினோம் என்று கருதுவதில்லை. ஓடும் எழுத்தாணியும் எடுத்து எழுதப் புகுந்தால் யாப்பு பொருள் எதுகை மோனை யாவும் தானேயமையும் "**எது மனத்தெழுமோ அதனை ஓர் பதிகத் தமைப்பதென்றுணர்ந்து கொள்வீரே.** என்று ஓரிடத்திற் கூறினர். யாப்பு முதலியவற்றைத் தேடிப்பாடுவதென்றால் ஆயிரக் கணக் கான பாடல்கள் பாட முடியுமா என்பதை பாடிப் பழக்கமுள்ள புலவர்கள் அறிவார்கள். மற்றும் '**கவிதை வந்த பின்பார்த்துவப்ப தென்றன் வழக்கம் உலகீரே**' என்பர். இதனால் இவரது பாடல் சிவசுதந்தரமாக எண்ணிப்பாடுவதில்லை என்பதறியலாம்.

# முகவுரை

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அவர்கள் (19-ஆம் நூற்றாண்டு) லட்சக்கணக்கான கவிதைகளைப் பாடியுள்ளார். அதில் சில வெளிவந்துள்ளன. பல இன்னும் வெளிவர வேண்டும். அவர் ஒவ்வொரு சமயம் பற்றியும் ஏறத்தாழ ஓராயிரம் பாடல்கள் பாடியுள்ளார். தினந்தோறும் பத்துப் பாடல்கள் என்று வரையறை வைத்துக்கொண்டு நூறு நாட்களில் ஆயிரம் பாடல்களைப் பாடியுள்ளார். இதற்கு முன்பு ஞாயிறு ஆயிரம் என்ற ஒரு நூலை வெளியிடுவதற்குரிய சூழ்நிலை 'தமிழ்ப்பதிப்பக'த்திற்குக் கிடைத்தது. அதனால் அந்த நூலைப் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அதற்குப் பிறகு 'வண்ணச்சரபம்' அவர்கள் நூல்களை வெளியிடவேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டது. இருப்பினும் பொருளாதார நிலை சமுதாய நிலை, நூல்கள் விற்பனை நிலை போன்ற காரணத்தால் உடனடியாக எல்லா நூல்களையும் வெளியிடுவதற்குரிய சூழ்நிலை அமையவில்லை. இப்போது அவர் 'கணபதி' பற்றி எழுதிய ஆயிரம் பாடல்கள், நூலாக வெளிவருகிறது.

பொது நிலையில் கல்வி நிலையம் 'பட்டம் பெறுவதில்' வளர்ந்துள்ளதே தவிர அறிவைப் பெறுவதிலும், பண்பாட்டைப் பெறுவதிலும் அந்த அளவுக்கு வளர்ந்துள்ளதா என்பது ஐயமே. அதோடு தமிழில் இது வரை வெளிவந்துள்ள நூல்கள் அனைத்தும் வெளியிடப்பட வேண்டும் என்பது நோக்கம். தமிழ்த் தொண்டுக்காக 'உலகத் தமிழ்க்கல்வி இயக்கம்' என்ற ஒன்றை நண்பர்கள் சிலர் சேர்ந்து தொடங்கி உள்ளோம். அந்த இயக்கத்தின் முதல் நூலாக, 'பிள்ளையார் சுழியாக' தவத்திரு வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் எழுதிய 'கணபதி ஆயிரம்' என்ற நூல் வெளிவருகிறது. இதை வெளியிடுவதற்குப் பெரிதும் மகிழ்கின்றோம். இதுதான் உலகத்தமிழ்க்கல்வி இயக்கத்தின் முதல் நூல். இந்த நூல் வெளிவர, பொருள் நிலையில் எல்லாவகையிலும் துணைபுரிந்த தவத்திரு கருமாரி தாசர்

அவர்களுக்கு எங்களுடைய அன்பு கலந்த பணிவான வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த நூலைப் பிரதி செய்து சீர்பிரித்துத் தந்த அவர்கள் புதல்வர் முருகதாச சுவாமிகள் அவர்களுக்கும் பேரன் திரு. சங்கரலிங்கம் அவர்களுக்கும், துணைபுரிந்த திரு. கோவேந்தன் அவர்கட்கும் எங்கள் நன்றி.

இந்த நூலினை ஒரு முறை பார்த்து அச்சுப்படிகளைத் திருத்தித் தந்த டாக்டர் ச. சிவகாமி அவர்களுக்கும், செல்வி ராதா ஜெயலட்சுமிக்கும், மிக்க குறுகிய காலத்தில் சிறப்பாக அச்சிட்டுத் தந்த ஸ்ரீகோமதி அச்சக உரிமையாளர் திரு. சரவணக் குமார் அவர்களுக்கும் எங்கள் நன்றி என்றும் உரித்தாகுக. நல்ல முறையில் படம் எழுதித் தந்த ஓவியர் ஈஸ்வரி (ஆனந்தன்) அவர்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக, எல்லா நிலைகளிலும் எங்கள் செயல்களுக்குத் தோன்றாத் துணையாக இருந்து வருகின்ற எல்லாம் வல்ல இறைவன் திருவடிகளைப் பணிந்து வணங்கி அமைகின்றேன்.

அன்புள்ள

ச. வே. சுப்பிரமணியன்



கணபதி துணை

ஏழாயிரப் பிரபந்தத்துள் ஆறாவதான

# கணபதி ஆயிரம்

சிந்து(ம்)மனப் பேயுனது சேவடிக்கீழ் எந்நாளும்
வந்துபிரி யாதிருக்கும் வரந்தரவும் மாட்டாயோ
பைந்துணர்க்கொன் றையுமறுகும் பனிமதியும் புனைசடையாய்
ஐந்துகரத்(து) ஆடகவெற் பனையபெருங் கணபதியே. 1

பந்தவே தனைக்கடலிற் படிந்துமிகப் பரதவித்து
நொந்தயவேன் நின்திருக்கண் நோக்கமுறும் நாளுளதோ
செந்தகைப்பொற் கரமலியும் சிந்துரமா முகத்தெந்தாய்!
அந்தரரும் முதற்போற்றும் ஆனைமுகக் கணபதியே. 2

சத்தியப்பண் பறியாதார் தம்இணக்கத் தாற்றயங்கிப்
பத்திநல மில்லார்போற் பரிசழியச் செயலேனோ
சித்திபுத்தி என்னுமிரு சேயிழையார்க் கினியோனே!
நத்தியபே றத்தனையும் நல்கவல்ல கணபதியே. 3

இன்னம்வினைத் துயர்முட்டா தினியபயன் ஈந்தருளி
உன்னடியார் பெருங்கூட்டத் தூடுறவைத் தாண்டுகொள்வாய்
பன்னகப்பூ ணொடுநாவற் பசும்பொன்னும் புனைந்தாடும்
முன்னவனே! எத்தலத்தும் முதற்பூசைக் கணபதியே. 4

பாரணங்கு நோமாறு பலநடக்கும் கொடுநாளில்
நாரணன்போல் வாழுமிவனை நல்கிருந் துவதேனோ
காரணமும் காரியமும் கடந்துநின்ற கற்பகமே!
பூரணமாம் பிரணவத்திற் பொலிந்தபுகழ்க் கணபதியே. 5

துதிக்கைநறும் புனலாட்டித் தூநீறும் சாத்தியந்
மதிக்கவலைக் கடல்கடக்கும் வல்லபுரியா விதமியாதோ
பதித்துவத்திற் பசுத்துவம்போய்ப் பாசமறக் கலந்திருக்கும
கதிக்கொருநல் விதையாகிக் கனிந்தஅருட் கணபதியே. 6

பொய்ம்மொழிசொற் கொடுந்தேவர் புகழ்நீக்கக் கேட்டுழல்வேன்பால்
மெய்ம்மொழியொன் றுரைத்தபடி விளக்குதற்கேன்
துணிகில்லாய்!
கைம்மொழித்தா னவர்பல்லோர்க் கஞ்சமரர் தமைக்
காத்தாய்
செம்மொழிப்பா வலர்போற்றச் சிறந்தநிறக் கணபதியே. 7

நகத்தலையிற் குகன்சொல்லால் நான்மிதாடும்கற்
கிளைதொன்றால
இகத்தினர்சொல் வசையாவும் இலையாமா றென்றருள்வாய்!
சகத்திரையத் திரும்பித்த தவமன்று பெறுதிறத்தோர்
அகத்தியனுக்(கு) இரண்டுஆறன் றளித்த தரும் கணபதியே. 8

கந்தனொரு குறப்பேதை காதல்கடந் துயக்காப்பான்
அந்தவனத் துறும்சித்தி அறையுமெனக் கருளாயோ
சிந்தனைசெய் வார்கனவிற் றிளங்களிறாச் செல்வானே!
இந்தணிசெஞ் சடைச்செல்வான் எனக்குலவும் கணபதியே. 9

கொவ்வைநறும் கனியிதழார் கொடுக்குநறும் கோட்டியினாற்
கௌவைபடும் பாழ்மனத்தென் கவித்தொடையல்
புனையாயோ
தெவ்வைபடும் வெண்கோட்டோர் செழும்பவளக் கிரிபோல்வாய்
ஔவையனை யார்மனமே அறியுமிசைக் கணபதியே. 10

## 2-ஆம் பத்து

கும்பமதக் களிறாகிச் சிவனொருக்கால் இமயக்
குவட்டிலிளம் பிடிமகிழக் கூடும்நாள் உதித்துத்
தம்பமென வழிபடுவார்க் கிடையூறு முற்றும்
தவிர்த்தருள்வான் எந்தநகர்ச் சந்திதொறும் உறைவாய்

உம்பர்புகழ்ச் சமரசமெனு நாமமுடை யாரி
ஒருநெறிதொட் டொழுகிடுவார்க் குறுகண்வினைத் தோங்கும்
செம்பவளப் பனைபோலும் நுதிக்கைநுனி யதனால்
திருநீறென் னுதற்கணிந்த செயல்விளக்கி யருளே, 11

விரிப்பருமெய்ப் புகழுணர்ந்த மெய்யடியார் பேசோபாய்
விளம்புமொரு மொழிவிளங் கேழ்பெறுக ளாயக்
கிரிப்பெருக்க மெய்ப்பல்வுண் டிகளடைத்தும் போற்றிக்
கெழுமணர்ப்பச் சருகிடுவார் கிளைக்குநன் புரிவாம்
நரிப்புறுதி வினைச்சிறியேன் மனவெளியில் நூர்காய்
நன்கவிர்ந்து யான் அன்றுகொல்? என்றன்முறைப்பாங் கேற்றுச்
சிரிப்பிலகு நால்வாயால் ஆமாமென் றோதித்
திருநீறென் னுதற்கணிந்த செயல்விளக்கி யருளே. 12

தெவ்வேமிக் கமைதரலிற் பரதவித்து வாடிச்
சிறிதிசையு மினத்தினரும் சிதறிடக்கண் டேங்கி
வெவ்வேள்கைக் கணைக்காற்றா தினமகளிர்க் குருகி
மிடிக்கவலிற் றயங்களலை வெருட்டுவது முறையோ
கைவேழம் எனப்பலகாற் கனவில்வரு வோனே!
கணங்கள்முழு மையும்வணங்கக் கவின்றவிநா யகனே
செவ்வேற்கைத் தந்தையின்முன் னுதித்தபெரி யப்பா!
திருநீறென் னுதற்கணிந்த செயல்விளக்கி யருளே. 13

முந்துமொரு நாளருணைச் சிகரியெதிர் தோன்றி
மொழிந்தவிநம் மறந்தனையோ முன்னியுள்ளாய் கொல்லோ
நொந்துநமி யேனுமெனைச் சார்ந்தவரும் வாடி
நுடங்கும்வகை யறிந்துமருள் நோக்கம்வைக்கின் றிலையே
இந்துமுடிந்து ஆத்தியணிந் தறிவறிந்தோர் கயிலைச்(கு)
இளவரசென் றேத்தமகிழ்ந் தெங்கும்வளர் இறைவா!
சிந்துரவாள் நுதல்வலவைக் குவப்புதவும் கையால்
திருநீறென் னுதற்கணிந்த செயல்விளக்கி யருளே. 14

கருத்தாப மறல்விழைவார் மதித்தபிர ணவமே
காணியாக் கொண்டுறையும் கடகரிமா முகவா!
குருத்தீபந் தவிர்ந்திருள்சிற் றறைபொருமென் நெஞ்சிற்
குலவிநீ யுரைத்தமொழி குறித்துமயர் கின்றேன்
நிருத்தேசன் தானுமுதல் வழிபடல்விட் டதனால்
நெட்டுயிர்த்துத் தட்டழிய நெடுங்கடல்சூழ் புவியாம்
திருத்தேர்அச் சிறப்புரிந்த பெருமைகுன்றி டாமல்
திருநீறென் னுதற்கணிந்த செயல்விளக்கி யருளே. 15

காவிமலர்க் கண்மடவார் கலவிமுத லாகக்
கழறுமூன் றேடணைப்பாழ்ங் காட்டிலுழன் றாலும்
ஆவிகட்குன் அருளலதோர் தஞ்சமிலா உண்மை
அறிந்திலனோ எனைப்பலவா றலைக்கைமுறை யேயோ?
கோவிலெங்கும் முதற்பூசை கொண்டமர்முன் னவனே!
கொடியனேன் கோடானு கோடிபலத் தியற்றும்
தீவினைப்பேய் உனிற்பெரிய தெனும்வசையெய் தாமல்
திருநீறென் னுதற்கணிந்த செயல்விளக்கி யருளே. 16

பவளநிறக் குன்றெனமும் மதத்தருவி பாயப்
பாவியேன் மனவெளியிற் பாராத படியேஎன்
தவமுதிர்முற் காட்சிதரில் உனைத்தடுப்பார் உளரோ
சத்தியமல் லானநின் றன்எதிர்சொற் றுளனோ
குவடுறழ்வெங் கயன்கமலன் அனலன்முத லோரைக்
கொன்றுவிண்ணோர் துயர்தீர்த்துக் குலவுகண பதியே!
சிவனறிய மேருவிலோர் கதைவரைந்த கையாற்
திருநீறென் னுதற்கணிந்த செயல்விளக்கி யருளே. 17

நம்புமவர்க் காவனவும் செய்துனைவை யாட
நாடுமென்னைப் பலர்கூடி நகைநகற் கின்றால்
வெம்புதுயர் விளைத்தனையேல் இனிச்சகிக்க வசமோ
விதிப்படிநிற் பூசைசெயல் விடுத்துமயன் றேனோ
பம்புபுனற் காவிரியிந் திரனுயுமா றளித்துப்
பலவாறு தொழுமலயப் பருப்பதமா முனிக்குச்
செம்புநதி யளித்தபுகழ் மருவுபுழைக் கையால்
திருநீறென் னுதற்கணிந்த செயல்விளக்கி யருளே. 18

வண்டர்குல மறக்கயமுன் கொலையெனு(ம்)மா பாவம்
மகிதலத்தில் வாதொழிந்து மலைதொறும்போ யாடி
விண்டலத்தோர் களுமதிப்பத் திகழ்ந்துன்எழிற் றாளில்
விரவினன்றித் திருத்தியுரு வேட்கையருளினையே
பண்டருங்கா னத்துமறைப் பாவைமய லெய்திப்
பனிமலர்வேள் சமர்பெருந்துப் பன்னிருகை முருகோன்
தெண்டனிடக் கண்டருளும் கருணைபொய்த்தி டாமல்
திருநீறென் னுதற்கணிந்த செயல்விளக்கி யருளே. 19

காரணமொன் றுள்ளதென்றுன் தம்பிசொன்ன வண்ணம்
காட்டுதற்குச் சோம்பியெங்கோ கரந்துகொண்டான் அடியேன்
பாரகத்துப் பலரேசப் பெரிதுழைத்து நொந்தேன்
பகவன்மகட் கீந்தபெரும் பரிசுவிழைந் தடுத்தேன்

சாரமுண ராரிடத்தும் தமிழ்கொடுபோய் இரந்தேன்
தவிக்கின்றேன் நீயுமெனைத் தள்ளிவிட நினையேல்
சீரருட்சத் தியமொடென்றன் மனமறிய நீநின்
திருநீறென் னுதற்கணிந்த செயல்விளக்கி யருளே. 20

## 3-ஆம் பத்து

கொடியவ னாவலின் வந்தநாள்
கொன்றிலை யால்மிடி கொண்டுபல்
படிறர்கள் பாலினும் ஏகியே
பைம்பொன்இ ரந்துப தைத்துளேன்
நெடியவன் என்றுது லங்குசீர்
நீதர வல்லைகொல் நேடுமெய்
அடியவர் இச்சைவ ழிச்செல்பேர்
அருள்மலி கணபதி யப்பனே. 21

காலகன் மங்கள் கடந்தமெய்க்
கருணைபொ ழிந்துபல் கதைகள்மா
ஞாலமொ ழிந்திடல் போலஎன்
நல்லிசை யும்பக ரச்செய்வாய்
மூலமு தற்பொரு ளாகியே
முற்புரி பூசைகொள் வாய்முனாள்
ஆலம ருந்திய தம்பிரான்
அருளிய கணபதி யப்பனே. 22

மானைநி கர்த்த விழிப்பெணார்
மயல்முத லாகிய வம்புதோய்ந்து
ஊனை உயிர்க்குயர் என்றுளார்
உடனுழல் வேனை ஒறுத்திடேல்
வானைநி லத்தொட எந்ததால்
மால்பயில் ஆடகம் வெளவினாய்!
ஆனைமு கத்துழல் வெற்பைநேர்
அழகிய கணபதி யப்பனே. 23

கொந்துறு பன்மலர் அள்ளிநின்
கோகன கப்பதம் ஈந்திடார்
நொந்துவ ருந்திடல் போலநான்
நூறுது யர்ப்படல் நீதியோ
பைந்துணர் மிக்குறு கற்பகம்
பார்த்துளம் நாணுறு பண்பறா
ஐந்துக ரத்துகிர் வரையெனா
அவிர்தரு கணபதி யப்பனே. 24

பாகுறழ் முத்தமி ழிற்பல்பாப்
பகர்தரும் என்னது பாழ்மனம்
சோகுநி கர்த்தபொன் வாஞ்சையாற்
சுழல்வதொ ழித்தொரு சொற்சொல்வாய்!
வேகும்அ ழற்புரை தானவன்
மெய்க்கதி எய்தவி ழுங்கியோர்
ஆகுவ யப்பரி கொண்டநாள்
அகமகிழ் கணபதி யப்பனே. 25

செக்கடி யாதிய புன்தலத்
திற்பலர் செய்திடு பூசையும்
தக்கன வேயென ஒப்பும்நீ
தமியன்மொ ழித்தொடை தள்வையோ.
முக்கணும் மும்மத முங்கொள்வாய்!
மூவலில் நான்மறை முன்சொல்மூன்(று)
அக்கரம் மன்னிய தாரகத் (து)
அமர்தரு கணபதி யப்பனே. 26

வஞ்சக மற்றும னத்தினால்
மாழைவ ரைச்சிறு துண்டுதந்(து)
ஒஞ்சல்ஒ ழித்திடெ னச்சொன்னேன்
ஊர்முழு தேசல் உஞற்றினாய்!
குஞ்சர வத்திர மோடெனுட்
குலவியி மைப்பிலர் கொள்ளொணா
அஞ்சல் அளித்தினி தந்தநாள்
ஆண்டுள கணபதி யப்பனே. 27

பொன்பொரு செம்புகர் ஆதியாம்
பொற்பும் நினைத்திலர் போலநான்
புன்பொருள் வாதனை எய்தல்போய்ப்
போதந லம்பெறல் எற்றையோ ?
தென்பொதி யைக்கிரி நாடியே
செல்லுழி கண்டு தொழத் திகழ்ந்(து)
அன்பொட கத்திய னுக்கிரண்(டு)
ஆறருள் கணபதி யப்பனே. 28

கயிலைம லைத்தலை நாளும்வாழ்
கண்ணுத லார்இர தம்தடுத்(து)
எயில்சுடு மாறரு ளும்செய்தாய்
என்தொழி லிற்றடை எய்தலேன்

மயில்நிகர் வள்ளிவ லிந்துதன்
மார்பணை யச்செயல் வெளிவியே
அயிலவன் ஆடலும் ஆனையாய்
அங்குசெல் கணபதி யப்பனே. 29

செவ்வை[illegible] வாய்பல பனுவல்நின்
சீரருள் கருதுபு செப்பினேன்
இவ்வைய கத்தினர் அறியும்ஓர்
ஈடும்அ ளித்திலை என்செய்வேன்
கொவ்வை இதழ்ச்சிறு பாவைதன்
கோனொடு சேரனும் நாணு மாண்(பு)
ஔவை துதிக்குமோர் அகவல்வேட்
டன்றருள் கணபதி யப்பனே. 30

## 4-ஆம் பத்து

கற்றவர் போன் றவிர் கயமைக் கிழவரும்
நிந்தைசெயக் கயங்கும் என்னை
நற்றவரிற் கூட்டியுண்மை ஞானமொடு
சித்தியெட்டும் நல்கு வாயோ
பொற்கைப்பூம் புகர்வேழ முகமுடையாய் !
எங்குமுதற் பூசை கொள்வாய் !
பெற்றமுகைப் பானுமன்பிற் பேணாமகிழ்
வுறும் பெரிய பிள்ளையாரே. 31

குருச்சாபத் தாற்றளர்ந்த மதியமுய்யச்
சடைக்கணிந்த கொள்கை நாடி
மருச்சாலும் மலர்சொரிந்து வழிபடுவேற்
கொருநலமும் வழங்காய் கொல்லோ
திருச்சாறும் மருமத்தான் கோரணிக்கூத்
துவந்தருள்முன் செய்தாய்! திண்மைப்
பெருச்சாளி வாகனமூர்ந் தெங்குமுலா
வியபெரிய பிள்ளை யாரே. 32

கோழைமனத் தார்சிலர்முன் பெறும் பேறும்
அரிதாகிக் குலைவேன் பல்கால்
மாழை வரைத் துண்டருள்என் றுணையிரக்கச்
செய்தவிதி வாழ்வி யாதோ.
ஏழைபங்க னாதியபல் வானவரும்
தானவரும் யாவும் மேவும்
பேழைவயிற் றம்மானே! பிழையிலரே
தொழும்பெரிய பிள்ளை யாரே. 33

தண்டமிழால் வடபுதுவை ஆணவீ
தியிற்பரவும் தமிய னேனை
நண்டருந்தும் கிழவர்மிக் கிகழவிட்டாய் !
இதுவுமொரு ஞாய மேயோ ?
மண்டலத்து நால்வகையோ னிற்பிறந்து
வளர்ஏழு வகைய வாய
பிண்டமும்பல் கோடியண்டப் பெருக்கும்நிறைந்
தவிர்பெரிய பிள்ளை யாரே. 34

மன்னரெல்லாம் நீசமெய்திம் மகிதலங்கோ
வெனஅலறி வருந்தும் நாளில்
நின்னருட்பே றிச்சைகொள்ளும் எனைச்சிறிதுன்
திருவுளத்தில் நினையாய் கொல்லோ
பன்னகப்பூண் நெடுங்கனகப் பணியுமணிந்
தாடுமெந்தாய்! பல்நூல் போற்றும்
பின்னமும்அ பின்னமுமாம் சித்திபுத்தி
புணர்பெரிய பிள்ளை யாரே. 35

ஒருதேங்காய் சந்நிதியிற் சிதறவுடைப்
பேன்எனும்சொல் உரைக்கின் றார்க்கும்
அருமாந்த பயனளிப்பாய் அருந்தமிழாற்
றுதிக்குமெனக் கருளாய் கொல்லோ
திருவாங்கை யைந்துடையாய் சக்கரத்தோன்
உய்ந்ததெண்ணிச் சதுர்த்தி நாளிற்
பெருநோன்புற் றார்க்கெளியாய் பிழைபொறுத்தாண்
டருள்பெரிய பிள்ளை யாரே. 36

மாதரசி யாய்ப்பச்சை வல்லபைப்பெண்
ணிடங்குலவ வந்து நான்இப்
பூதலத்தில் திருமால்போற் புசழ்பெறற்காம்
உதவியின்னே புரிய வேண்டும்
சூதன்முதற் சீடர்பலர் உய்யவந்த
மாமுனிவன் சொலுமோர் நூலைப்
பீதகமே ருவிற்பொறித்தாய்! பிஞ்ஞகன்போல்
திகழ்பெரிய பிள்ளை யாரே. 37

குறுமுனிவற்கு ஆறிரண்டு கொடுத்ததுண்டம
யாகிலென்கற் கூபத் தூடோர்
சிறுநதியா யினும் உதிக்கச் செயல் வேண்டும்
இன்றெனில்யான் திருந்தி எய்தேன்

மறுகுதொறும் சந்திதொறும் நன்மையினும்
தீமையினும் வசித்துத் தொண்டர்
பெறுநலமெல் லாம்கொடுக்கும் பேரருள்வாய்ந்
தொளிர்பெரிய பிள்ளை யாரே. 38

செச்சைமலர்த் தார்புனைவேள் விரும்பியநாள்
அரும்புனத்திற் சென்றாய்க் கென்றன்
இச்சைமுடித் திடவிதிவோ இகத்தபரக்
கிரியையுமேற் றில்லாய் கொல்லோ
விச்சைமுற்றும் எளிதருளும் வேழமுகக்
கணபதியே! மின்னார் தங்கைப்
பிச்சையுண்பார்! பெருமான்கொள்! பெரும்பயனா
வரும்பெரிய பிள்ளை யாரே. 39

பட்டுடுத்தூர் தொறும் உலவிப் பாடல்விற்ற
கிழவியுய்யப் பரிந்தன் றாண்டாய்
கொட்டுமுகில் போற்பலபாட் டுனைக்கருதிப்
பகரெனைக் கைக்கொள்ளாய் கொல்லோ
மட்டுறுமுப் பழந்தேங்காய் இளநீர்செங்
கரும்புசுண்டல் வருக்கம் தோசை
பிட்டுவடை மோதகம்சக் கரையருந்தி
மகிழ்பெரிய பிள்ளை யாரே. 40

## 5-ஆம் பத்து

ஆதிய நா தியென் அடிமுடிநீ
யன்றியி லாமை அறிந்துளநான்
நீதியி லார்குடை நிழலின்வாய்
நிற்பதொ ழிக்க நினைந்திலையே!
பாதிம திச்சடை யோடுலவும்
பவளநி றக்களி றாமுதல்வா!
மேதினி யாந்தேர் சீர்பெறுவான்
விமலன் வணங்கும் விநாயகனே. 41

எள்ளும வர்க்கொரா இலக்காகி
இங்கடி யேன்அயர் கின்றேனே
அள்ளும்வெ ளைறென் நுதற்கிடைந்
அன்றுத ரித்தத யர்த்தனையோ
கள்ளும்அ வர்க்குள் ஒருத்தனெனக்
கரடிகு லத்துக் காவலவன்
விள்ளுறு நிந்தைய றத்திருமால்
மேனாள் பணியும் விநாயகனே 42

ஆதவன் ஆதிய முச்சுடரும்
அப்பக மாநிகழ் ஆனைமுகப்
போதகன் என்றுனை நம்பியநான்
புண்பட விட்டிடல் புண்ணியமோ
நாதமொர் ஏழு[illegible] நெறியாறும்
ஞானவி நோதமும் நண்ணியநல்
வேதம்வி தித்தவன் முற்பகர்சொல்
மெய்ப்பொரு ளானவி நாயகனே. 43

நாயுண வுண்பவர் இன்புறும்நாள்
நானுல கத்தொரு நரன்என்னத்
தாயுத ரத்தில் உதித்ததனால்
தண்ணருள் நுண்துளி தாராயோ
பேயுடன் ஆடிய பிஞ்ஞகனார்
பெற்றும கிழ்ந்த பெரும்பேறே!
வேயுறு வெய்திய இந்திரர்தம்
வெப்பமொ ழிக்கும்வி நாயகனே. 44

எண்கணன் அன்றுவ ரைந்தமைதீ(து)
என்னினும் நின்னருள் எய்திடில் யான்
வண்கம லாதனை கேள்வனைநேர்
வாழ்வுபொ றுத்தகம் மகிழேனோ
திண்க லுடான சமித்தாகச்
சேரம திதத்தி னந்திரைசால்
வெண்கட லாரமு தந்தரவே
விண்ணவர் போற்றும் விநாயகனே. 45

பாரத மன்றுவ ரைந்ததனாற்
பைம்பொன்வ ரைக்கணு திர்ந்தபொடிப
போரத னிற்சிறி தேனுமிந்நாள்
போற்றுமெ னக்குத வத்தருமே
காரண மூலமுதற் பொருளாய்க்
கார்நிற ஆகு உகைப்பதனால்
வீரமி கும்கண நாதரெலாம்
மெச்சிவ ணங்கும் விநாயகனே. 46

சக்கரை முப்பழ மாதியநின்
சந்நிதி யிற்கிரி தானெனவிட்(டு)
அக்கர மோதிய வர்க்கொரிபேறு
ஆரவ ளிக்கில்அ கங்குளிர்வேன்

நிக்கரே லோர்களும் நன்மையினும்
தீமையி னும்பணி தெய்வமெனா
மிக்கபு சுண்டம காமுனிநேர்
மேலவர் தேறும் விநாயகனே. 47

கயல்விழி மங்கையர் வலைமனதோர்
கல்மலை யிற்கிணை றொன்று செய்தேன்
அயலவர் நிந்தைநொ றுத்துள்ளேன்
அமுதுறழ் நீரத னிற்றருவாய்!
நயனுறு பொன்னியு டன்பொருநை
நல்கிய பேரருள் நாடியதால்
வியன்மல யாசல மால்வரைவாழ்
வித்தகன் நத்தும் விநாயகனே. 48

சீலமொர் எள்ளள வேனுமில்லார்
செய்துயர் கொண்டு திகைக்கின்றேன்
பாலது கூறினை அந்தருசம்
பாருல குந்தெரி யப்புரிவாய்!
நீலவி ழிக்குற மான்மயலால்
நெஞ்சம்வ ருந்திநி னைந்தந்நாள்
வேலன்வ ணங்கல் உணர்ந்தங்கோர்
வேழமெ னச்செல்வி நாயகனே. 49

தெள்ளிய செந்தமிழ் நல்கியநீ
சித்திய ளித்திலை சீர்கெட்டேன்
உள்ளிய வாவினை யாடல் செய்தே
உன்சர ணத்து ளுறக்கொள்வாய்!
துள்ளிய மாவொடு களிறூர்வார்
துன்புற அன்றொரு தூயவனை
வெள்ளிவ ரைத்தலை மேல்அந்நாள்
விட்டது திக்கை விநாயகனே. 50

## 6-ஆம் பத்து

காழகம் வெறுத்த சாரணர் கலகம்
கழிந்துமுன் மதுரையிற் கவின்ற
ஊழடும் வெண்ணீற் றொளிமழுங் கிடல்தீர்த்து
உயர்த்தலே உன்வழிமிக் குழைத்தேன்
வீழரிக் கருங்கண் உமைமண வாளன்
வியன்நவம் தரும்விநா யகனே!
வேழமா முகத்தொ டென்எதிர் தோன்றி
விக்கினம் தவிர்த்தருள் விரைந்தே. 51

புண்ணியம் குறைந்து பாவமிக் குயர்ந்து
புவிமகள் அழுதுயர் போக்க
எண்ணிய தமியேன் எண்ணில்பல் இடையூற்
றினிற்றுயர் எய்தலும் இயல்போ?
தண்ணில வெறிக்கு[illegible] முடிக் களிறே
சாதநோன்பு யாதுமில் சழக்கார்
வெண்ணிறத் தரக்கர் கருங்குடை நிழலமர்
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 52

கூடிமலர்க் கடுக்கை யாதிய சிவன்போற்
களிந்தணிந் தாகுலூர் களிறே
அடியவர் பலரும் ஒருப்படல் விழைந்தே
அருந்தவம் முயன்றுளேன் அந்தோ!
இடியொலி விளவும் அரவமொத் தொடுங்கி
ஏங்கிடத் துயர்செயல் ஏனோ
மிடியெனப் பகரப் படுகொடும் பேயாம்
விக்கினம் தீர்த்தருள் விழைந்தே. 53

ஆதியென் றகிலத் தறிவுளார் அறிய
அனைவரும் முதற்றொழ அமர்ந்தாய்!
காதிட விடுவான் நிமித்தம்வந் தொருநாள்
கருணைநீ ராடல்பொய்க் கதையோ
தீதில்பே ராடல் இயற்றிமெய் வீட்டிற்
சேர்தல்போற் செப்புமா றுணர்ந்து
மேதினி மாந்தர் இகழ்பெறும் வசையாம்
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 54

சத்தநான் மறையின் முதலெழுத்தாய
தாரகம் கருதுமெய்த் தவருள்
மத்தகக் களிறா வந்துவந் தாடி
வரமெலாம் தரும்பெரு வாழ்வே!
முத்தமிழ்ச் சுவைதேர்ந் தமைவுறாச் சிறுவா!
முனிவர்கோன் திருவருள் முன்னும்
வித்தகப் புலவர் தமையிகழ்ந் திடநேர்
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 55

பெண்ணவர் இகழ்ந்த பீடுடைத் தவரும்
பெரிதுதே விழைதரும் பிறரும்
நண்ணல்கண் டருளி நகர்தொறும் சந்து
நடுத்திகழ் ஞானவா ரணமே!

கண்ணகல் ஞாலம் முழுதுய அருட்பேர்
காட்டலே கருதுமென் றன்பால்
விண்ணவர் தாமும் வெருவுறத் தொடர்ந்த
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 56

முப்புடைக் காய்ஒன் றுடைப்பலன் றிரந்தார்
முன்னிய பேறெனக் கருளி
ஒப்புயர் வின்றி யொளிர்க வாதிபனே!
உனைத்தொழு திந்தமட் டுய்ந்தேன்
செப்புசெந் தமிழாற் சிறந்தவே டத்தாற்
சிந்தனை நலத்தினாற் செறிந்த
மெய்ப்புகழ்த் திருப்பாற் கடல்நடு விடம்போல்
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 57

மழைமதத் தருவி சொறிதரு பவள
வரைபொரு பெரியவா னவனே!
குழையிரட் டியசீ ரொடுதிகழ்ந் தெனது
குளத்தில்நீ றணிந்திலாய் கொல்லோ
புழையுறு கரத்தால் இருநதி பொதியைப்
புகழ்முனிக் கருள்நலம் புகல்வேன்
விழைதரு கருங்கற் கிணற்றில்நீர் வருத்தி
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 58

சேலுலாம் நெடுங்கண் வல்லவ தனையோர்
திருக்கரத் தணைத்துநின் றாடிச்
சாலும்ஊண் அமைப்பார் விருப்பெலாம் கொடுக்கும்
தந்திமா முகப்பெருந் தலைவா!
மாலுறா வருந்தப் படுத்துமோர் குறப்பெண்
வலிதுவந் தணையும்வாழ் அந்நாள்
வேலுளாற் களித்தாங்(கு) இந்தநாள் எனைச்சூழ்
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 59

களம்படு கறையார் முதற்றரு மகவாக்
கழறுநர் தம்மையும் கருதற்(கு)
உளம்படா முதலென் றுணர்ந்துளார் தமையும்
ஒருங்கருள் உம்பலா மொருவா!
வளம்பெறு மறைநூற் பொருளெலாம் சுருக்கி
வகுத்தருள் ஔவைபோல் வாயால்
விளம்புமா றுஞற்ற அருள்புரிந் தின்னே
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 60

## 7-ஆம் பத்து

இந்த மாநிலத் துள்ள தொண்டர்கள் யாரு மோர்குரு வாகியே
அந்த பத்தினர் தாமும் வெள்குற வாடும்நாள் வருந்
தாய்கொலோ
செந்த மிழ்க்குறு மாமுனி க்கருள் சிந்து ரானை தெய்வமே!
நந்த மேந்திய கைய னாதியர் நாடு சீர்க்கண நாதனே. 61

உன்ன தோர்துதிக் கையி னிர் முழுக் குற்றும் ஊழ்வினை
யோவுறாது
என்ன காரணம் என்செய் வேன்இனி எவ்வ னுய்குவன் ஐயகோ
பன்ன காதிப னாவிபோயதிற் பட்ட பாடுணர்ந் தாண்டதோர்
நன்ன லம்தெரி வார்க ளேமிக நம்பி வாழ்கண நாதனே. 62

போன கங்குறித் துள்ள வாறு புரிக்கும் ஆர்வமும் எய்திடாது
ஈன முற்றனன் அன்று நீபகர்ந் திட்ட வாய்மைபொய்த்
தேகுமோ
கான வேதமோ டாக மங்கள் கடைத்த லத்தினு மன்ற மெஞ்
ஞான மும்மத நீர்பொ ழிந்தவிர் நாக மாங்கண நாதனே. 63

அஞ்சல் நீதரல் நாடி யாடி அயர்ந்த நெஞ்சிடை அன்பிலாக்
கொஞ்ச மானிடர் பந்தம் வந்து குலாவ விட்டவர் ஆர்கொலோ
செஞ்ச டைக்கண் நிலாவும் நீர்முதற் செப்பு கின்றவும்
சேர்த்தலால்
நஞ்ச முண்டபி ரானை நேரும்ந லங்கு லாம்கண நாதனே. 64

கள்ளு மூனும் அருந்தும நீசர் கருங்கு டைத்துயர் தீர்வதே
உள்ளும் வரூதனை தந்த நியதொ ழிக்கு மாறுண ராய்கொலோ
எள்ளும் வெல்லமும் வைத்த மோதகமேமு னாள்உண இட்டுளார்
நள்ளும் வாழ்வளித் தூர்கள் தோறுற நாணுறாக்கண
நாதனே. 65

ஏக மூர்த்தமு னாதுகோலம்ன னாஉணர்ந்துமிவ் வேழையேன்
சோகமாற்றுகி லாய் ஐயோ பெருஞ் சோம்பலிற்றிளைத்
தாய்கொலோ
மாக மேற்சிரம் நீடநின்று வயங்குபன்மணி வாய்ந்தவாய்
நாகமார்த்த வயிற்றின்மத்தியில் ஞாயிறார் கண நாதனே. 66

எக்கணத்தினும் நீயிசைக்க இயங்குமாறுணர் வேனைஏன்
மக்களிற்கடை யாக்கினாய்அருள்! வாழ்வுளாரொடு கூட்டுவாய்!
செக்கடிக்கணும் இந்திராதியர் இற்றியாலயந் தும்தினம்
நக்கசீரொடு மொக்கலோவரும் நான்றவாய்க்கண நாதனே. 67

கதியும்நம்பினர்க் கியநாடுறு காதலோனையோர் கற்கிணற்று
அதிகவாதனை செய்துளாய்அதில் அழுதவாறுதிக் கச்செய்துஆள்
பொதியவெற்பொடு சமையமால்வரை புகழ்பெறும்படி
புணரிதோய்
நதியிரண்டுமுன் உலகெலாமுய நல்குதீர்க்கண நாதனே. 68

திங்கர்யாவரும் மாய்வுறும்சமர் செய்யவேமிகச் சிந்தியா
ஏங்கவிட்டனை யெந்தநாளெனக் கேற்றபேறினி தீவையோ
கோங்கரும்புறழ் கொங்கையங்குறக் கோதைமால்கொடு
குன்றிவிழ்
ஞாங்கர்வேளுய அன்றுபோய்வரு நன்மைசேர்கண நாதனே. 69

ஆரியன்திரு மாலனார்புகழ் ஆர்வம்நாடும்என் னன்னையிப்
பாரில்மானிடர் ஒப்பவேனுமோர் பண்பளித்திலை
என்செய்வேன்
சீரியைந்தசொல் வல்லபங்கொடு தெய்வமென்று திகழ்ந்ததோர்
நாரியைக்கயி லாயம்விட்டவி நாயகா!கண நாதனே. 70

## 8-ஆம் பத்து

முந்துறு நின்புக ழேமிகப் பாடி
 முனிவர்தம் தாட்பொடி முடியுறச் சூடிப்
பந்துறழ் மென்முலை யார்தரு மோகப்
 பற்றற நாடுமென் பாட்டணி யாமோ
சிந்துர மாமுக முமபிறை சூடும்
 செஞ்சடை யாகிய சிறும்றி லாவும்
ஐந்துகைக் குன்றமொப் பர்திருக் கோலம்
 அனுதினம் நினைப்பவர்க் கருள்கண பதியே. 71

எத்தனை யோகன வுத்தமர்க் கண்(டு)
 இன்புறும் என்மனத் தேசில வேளை
பித்தமெ னத்தகு தீயவும் தோற்றிப்
 பேதலிக் கச்செயும் பிழையினன் ஆரோ
மத்தமெ ருக்கர வம்புலி கொன்றை
 வானதி கூவிளம் வாய்ந்தவிர் சென்னி
அத்தனந் நாள்புரத் தார்மிசை யூர்தேர்
 அச்சிறச் செய்துபின் னருள்கண பதியே. 72

கலைமகள் ஆதிய புலவரும் கேட்டுக்
 களிப்புறத் தகுந்தமிழ்க் கவிசொலக் கேட்டும்
புலையர்தம் மனையினும் பெரிதுறும் பாழ்த்த
 பொன்வினை யாலெனைப் புலர்த்திடல் முறையோ

மலைமகள் தனைச்சென் மணம்செயும் போது
மறைவிதிப் படியயன் வழிபட இருந்தாய்!
அலைகடற் கடைந்தவன் றமரர்மிக் கஞ்ச
ஆலமிட் டமுதுபின் அருள்கண பதியே. 73

காரண மொன்றுள்ள தாகஎன் நெஞ்சுட்
கவின்தர உணர்த்தின கனிமிகப் பெற்றேன்
பூரண ஞானமும் சித்தியோர் எட்டும்
பொருத்திலை யால்மிகப் புலருகின் றேன்காண்
வாரண மாமுகப் பவளவெற் பதுபோல்
மாதவத் தோர்பெரு மனந்தொறும் திரிந்தே
ஆரண ஆகமம் ஆதிய நூலின்
அணிமுகத் தவிர்ந்தருள் அருள்கண பதியே. 74

பஞ்சவத் திரமுடைப் பண்ணவன் முதலோர்
பகரும்நின் புகழ்வளம் பாடிநின் றாடார்
நெஞ்சகம் இன்புறக் கண்டுமிக் கிடைந்தேன்
நீயொருக் காலவண் நிகழ்த்தல்பொய் யாமோ
கஞ்சமுற் றோன்தனி மார்பினில் வந்தும்
கண்ணிமை யார்குலம் கலங்குற வாட்டும்
அஞ்சனக் குவடுறழ் பேருருக் காட்டும்
ஆகுவின் மேல்எழுந் தருள்கண பதியே. 75

நின்திருப் பூசனை செய்திலன் ஆய
நீசர்தம் கிணற்றினும் நீர்வரு முலகிற்
கன்றிநின் றேங்குமென் கற்கிணற் றொருநீர்க்
கால்வரும் அளவும்நின் கருணைமெய்ப் படுமோ
பொன்றிகழ் பூமல்ஆத்திமென் தழையாற்
புரியுமென் அருச்சனை போதவும் கொண்டாய்
அன்றிக லோன்எனைக் கொல்லவிட் டிடலும்
அமரருக் கரும்பயன் அருள்கண பதியே. 76

கூழில தாம்நிலத் திறைகொளும் பொல்லார்
குடைநிழற் சூட்டிடை குமுறுகின் றேனைப்
பாழியங் கூற்றும்வந் துறுக்கிடப் பாரேல்
பத்தர்க ளோடுநின் பணிசெய்யப் பணித்துஆள்!
கேழிணர் சொரிந்துநல் லுண்டிமிக் கமைத்துக்
கெஞ்சுகின் றாரிடை கிளர்மணி விளக்கே!
ஆழிஅங் காடிய மால்பெறக் கொடுத்தே
அகிலமெல் லாமுய்ய அருள்கண பதியே. 77

சகத்திரை யத்தினும் போய்விளை யாடித்
தானவர் யேரறத் தடிந்துவிண் ணவரூர்
யகத்துவம் பேசிட வாழ்வது குறிக்கும்
வாஞ்சையென் போல்பவர் வகித்திடற் பாற்றோ
நகத்துணை போலவிர்ந் திடையற நெருங்கும்
நகில்வல் லவைமுதல் நங்கையர் மோகா!
அகத்திய மாமுனி யுவப்புற அந்நாள்
அமுதுறழ் ஆறிரண் டருள்கண பதியே. 78

மோனைதப் பிச்சுவை குன்றிய பாடல்
மொழிந்தவர் சிலரும்முன் முத்தியெய் துலகில்
ஏனைய கவிமழை பொழிதரு பல்லோர்
இடையவிட் டாய்தமிழ் இச்சையற் றதுவோ?
தேனைவிட் டுப்பினைந் துதவிய மாவை
தின்றுளம் மறுகிய சேய்மனம் மகிழ
ஆனையைப் போற்கருங் கானகத் தேகி
அணிக்குற மகள்புணர்ப் பருள்கண பதியே. 79

திருந்திழை வனிதையர் ஆசையில் மூழ்கிச்
சிந்தைநொந் தாலும்நின் திருவடி நிழலிற்
பொருந்துறும் ஆவல்விட் டேனிலன் கண்டாய்!
பூரியர் வசையறப் புரிந்தெனைப் புரப்பாய்!
கருந்தடங் கட்சிறு மங்கைதன் மணத்திற்
காவலர் சிலர்பனங் கனிபெறப் பாடும்
அருந்தமிழ்க் கிழவிவெண் கயிலையி லேகி
ஆர்வமுற் றிடஇனி தருள்கண பதியே. 80

## 9-ஆம் பத்து

காழரைப்பா றபமனைய மூடர் பாலும்
கவிப்பனுவல் விலைகூறும் கலக்கம் தீர்ந்து
வாழவைப்பாய் எனப்பெரிதும் நாடும் என்னை
மறுக்கமுறப் படுத்துகின்றாய் வம்பீ தன்றோ
சூழறிவாம் முளைமுளைத்த இளமை தொட்டுன்
தொழும்புசெய்த பயனிதுவோ துதிக்கைச் சீர்சால்
வேழமுகத் துடனாடும் முதல்வா! இன்னே
விக்கினந்தீர்த் தெனையாள விரும்பு வாயே. 81

கடிக்கவுள்மா மதம்சொரிசீர் ஆதி தோன்றக்
கனவில்வந்த சத்தியம்பொய்க் கதையா காமல்
அடிக்கடிஎண் ணியபடிசித் தாடி நின்பேர்
அருட்கடலின் மூழ்குநலம் அளிக்கொண் ணாதோ

பொடிக்கவினார் திருமேனிப் பரமன் செய்த
புண்ணியத்தின் முதற்பயனாம் புகர்ப்பொற் குன்றே!
மிடிக்கனலும் கொடுங்காமப் பிணியு மான
விக்கினந்தீர்த் தெனையாள விரும்பு வாயே. 82

பையரவால் இறுக்கும்வயி றேந்து முக்கட்
பவளமலை யனையானே பரிந்து நீமுன்
ஐயமறப் பகர்ந்தமொழி பழுதா மாகில்
அகிலமகள் எவ் வணுய்வாள் அந்தோ அந்தோ
செய்யமடா லயங்களமைத் துணவும் தானைத்
திரளும்மற்று வேண்டுபவும் சிறப்பநல்கும்
மெய்யடியார் பணிபுரிய வொட்டா துற்ற
விக்கினந்தீர்த் தெனையாள விரும்பு வாயே. 83

கீறுமதிப் பிளவலதோர் இணைமற் றில்லாக்
கிம்புரிக்கோ டுடைப்பவளக் கிரிபோல் வானே!
ஆறுசம யமும்உனது பிரண வத்தால்
அமைந்தவுண்மை உணர்ந்துமிவ்வா றயர்ந்தேன் கண்டாய்
மீறுமுண வனந்தம்நின்முன்(பு) இட்டுள் அன்பால்
வெண்தூமம் ஆதியும்நூல் விதியிற் காட்டும்
வீறுதவும் செயல்விழைதல் அறிவா யன்றோ
விக்கினந்தீர்த் தெனையாள விரும்பு வாயே. 84

வண்ணநறுங் கனிவாய்வல் லவைப்பெண் ணோர்பால்
வயங்குறக்கூத் தாடும் எந்தாய்!மனக்கண் ணோவாப்
புண்ணடைந்த தினிச்சகிக்க முடியா துண்மை
புகன்றிட்டேன் ஒருதேங்காய் புடைக்கின் றோர்க்கும்
எண்ணமுற்றச் செயும்கருணை யென்மட் டின்றோ
இசைத்தமிழாற் றுதிக்கும்நலம் ஈதல் வீணோ
விண்ணவரும் மண்ணவரும் உய்கை வேட்டேன்
விக்கினந்தீர்த் தெனையாள விரும்பு வாயே. 85

பத்தர்களுக் கெளியதென உணர்ந்தோர் போற்றும்
பலவூர்ச்சந் தியினும்வைகும் பழைய தேவே!
இத்தருணம் நன்றுநன்றீ தறிவாய் இன்னும்
யான்இனத்தோ டின்னலெய்தி இடையச் செய்யேல்
மத்தகவெற் பெனநனவிற் றோற்றும் காட்சி
வானவர்க்கே தகுதியென்னில் வழுத்தீர் ஞான
வித்தகசற் குருவடிவாச் சேவை நல்கி
விக்கினந்தீர்த் தெனையாள விரும்பு வாயே. 86

குதிரைநிணம் ஆதியும்நின் றுவந்தற் கொல்காக்
குலத்தேவர் தங்களுக்கும் கொடுத்த காட்டு)
பதிகமிகப் பகர்ந்தேத்திப் பைம்புற் கெல்லும்
பான்மையுமஞ் சுறுமெனக்கேன் பாலி யாயோ?
மதிதவழ்செஞ் சடைப்பவளக் களிற்றுச் சென்னி
வாய்ந்தகண பதியே!பன் மறைநூல் சொன்ன
விதியும்விலக் கும்கடந்த அருளா லின்னே
விக்கினந்தீர்த் தெனையாள விரும்பு வாயே. 87

சகத்திரையத் தினரும்முதல் வணங்க நின்ற
தந்திமுகப் பெருமானே! தமிழ்முன் செய்த
அகத்தியனுக் கிரண்டுநதி யளித்த துண்மை
ஆமாகி லதுகொடுநின் னாடல் சொல்வேன்
இகத்தினர்முற் கற்கிணற்றில் நீருற் றெய்தா(து)
ஏங்கவிடல் நீதிகொல்லோ இகழ்வார்க் கொல்கி
மிகத்தியங்கல் அறியாயோ விரைந்திப் போதே
விக்கினந்தீர்த் தெனையாள விரும்பு வாயே. 88

அன்றுதிரு வெண்ணீறென் னுதலிற் றீட்டி
அடியனேன் வினவுமுறை அதையேற் றாமாம
என்றுரைத்த உண்மைமறந் தனையோ இவ்வா(று)
இடைதரக்கண் டிருப்பதென்னோ ஏன்ற காட்டிற்
குன்றுடையான் இரந்ததினும் இழிந்த ஞாயம்
கூறுகின்றேன் கொல்லோபல் கொடியார் தம்மை
வென்றுபுகழ் படைத்தபெரி யப்பா! முப்பால்
விக்கினந்தீர்த் தெனையாள விரும்பு வாயே. 89

கொலைகொடிதென் றுரைத்தகிழப் பாலைக் கீந்த
கொழுங்கருணைத் துளியாரும் கொல்வா றோன்பின்
நிலைபெறக்காண் பதுவிழைவேற் கருள்குன் றில்லாய்
நெடிதுயிர்க்கின் றேனுள்ளும் நீயின் றேயோ
மலையிலொரு கதைவரைந்த பெரியாய்! எங்கும்
மணத்தினரும் பிணத்தினரும் வணங்கச் செல்வாய்!
விலையில்நவ மணிபோலும் கோட்க ளாதி
விக்கினந்தீர்த் தெனையாள விரும்பு வாயே. 90

## 10-ஆம் பத்து

தேனைநி கர்த்தசொல்லால் உனைத் தினமும்போற்றிசைப்பேன்
மானையொப் பாம்விழியார் தரும் மயக்கம் தீர்த்தருள்வாய்!
மேனைமகட்கினியார் செயும் விரத மெய்ப்பயனாம்
ஆனைமு கத்தரசே! அடல் ஆகு வாகனனே. 91

தந்துறழ் நுண்ணிடையார் மயற் சாக ரத்திடைவீழ்ந்(து)
இந்துபு ரந்திளையா தருள் ஏற்றமள னக்கருள்வாய்!
செந்துவர் வெற்பனையாய்! தருச் சேகரம்தளர்சீர்
ஐந்துக ரத்தமுதே! அணி ஆகு வாகனனே. 92

செத்தவ ரிற்சிலர்மீட் டெழச் செயலும் வேட்டுளநான்
இத்தரை மானிடரும் பெரி திகழ வாடல்நன்றோ?
முத்தமிழ் மாமுனிக்கோர் வர முன் எம் நல்கியவா!
அத்தனும் பூசனைசெய் திடும் ஆகு வாகனனே. 93

கொன்றுபு லால்நுகர்வோர் பெரும் குழுவெல் லாமழும்போர்
என்றுசெ யப்பெறுவேன் என ஏங்கல் ஓர்ந்திலையோ
மன்றுடையார் மகனே! அழல் வடிவத் தானவனை
அன்றுவி ழுங்கிவிண்ணோர்க் கருள் ஆகு வாகனனே. 94

பம்புக டற்புவியோர் படும் பாடு கண்டயர்நான்
வெம்புகு ணச்சமனால் உயிர் விடச்செ யாதருள்வாய்!
செம்புலித் தோலுடுத்தார் பதச் சேவை பெற்றிடுமா(று)
அம்புவி யுட்புகுமால் பொரும் ஆகு வாகனனே. 95

என்னை யொருபொருளாச் சிலர் எண்ணவும் செய்துளநீ
முன்னைவி னைப்பயனால் மனம்முறியக் காண்பாயேன்!
பொன்னையும் பூவையும்நேர் புகர் பூத்த பொற்புடையாய்
அன்னைமு லைத்துணைநேர் சிரத் தாகு வாகனனே. 96

முன்னம்என் பாவொருவர் சகமொழிந்து ளாய்அதனைப(று)
இன்னமெய் தப்புரியா திவண் இருக்கும் ஞாயமென்னோ
பன்னகக் கோவலறப் பெரும் பாத லம்புகல்கண்(டு)
அன்னம்உ யர்த்தவன்மால் வெருள் ஆகு வாகனனே. 97

தேறிய மேலவர்போற் றிகழ்தேசு பெற்றொளிரநான்
மாறில்சித் தாடாமே இவண் வருந்தல் என்றொழிப்பாய்!
நீறிடு மாதவர்கோன் என நிலவு வானிமித்தம்
ஆறிரண் டன்றளித்தாய்! தனி ஆகு வாகனனே. 98

நாயினும் கீழவர்பாற் பொருள் நசையி னாற்புகுவேன்
வாயிசைக் கும்தமிழ்ப்பாக் களை மகிழ்வினிற் கொள்வாய்!
சேயிரங் கித்தொழும்நாள் குறச் சிறுமி யின்பமிட்டாய்
ஆயிரம் வல்லிடிபோல் முழங்(கு) ஆகு வாகனனே. 99

கொவ்வை நறுங்கனிவாய் இதழ் குலவும் வல்லவையோ(டு)
இவ்வைய கத்தொருக்கால் எனக்கு எதிரிற் றோற்றுவையோ
கௌவைமுற் றும் தவிர்ப்பாய் பல கணங்கட் கோரிறைவா!
ஔவையன் னார்உணர்சீர் பெறும் ஆகு வாகனனே. 100

## 11-ஆம் பத்து

ஓகைமலிந்து உம்பரும்இம் பருமுற் பூசை
உஞற்றிடக்கொண் டவரவர்க்காம் உறுதி காட்டும்
வாகைமத மாமுகப்பண் ணவனே! நின்வாய்
வலிதெனக்கன் றுரைத்தமொழி வம்பாம் கொல்லோ!
சோகைநிகர் பொருளாசை வசத்த னாகிச்
சூழன்றாலும் நவம்புரியும் துணிவுள் ளாருக்(கு)
ஈகைபுரிந் திடப்பெரிதும் கருதி வாடும்
என்முயற்சிக் கிடையூறேன் இழைக்கின் றாயே. 101

பாவமிகு மானிடர்முப் புடைக்காய் ஒன்று
பரிந்துரைப்பேன் எனப்பகர்ந்து பணிந்திட் டாலும்
ஆவல்முடித் தருளிநகர்ச் சந்தி தோறும்
அமர்ந்தருளும் ஐந்துகரத் தப்பா! இப்பார்
நாவலந்தீ வினிலுதித்த முனிவர் யாரும்
நண்ணாத பேறிதென நன்கு தேர்ந்தே
யாவரும்கொன் றருந்தாமை நிறுவ வேண்டும்
என்முயற்சிக் கிடையூறே னிழைக்கின் றாயே. 102

நிகரறுநான் மறைத்தலைத்தா ரகத்தில் நாளும்
நின்றாடும் கணபதியே! நீசர் பல்லோர்
தகரைவதைப் பதன்றிச்சூ லாடும் கீறும்
தன்மையையும் இன்னமென்னாற் சகிக்கப் போமோ
மகமதிற்கொல் கொலையினையும் நீக்கி அண்ட
வானவருக்கும் ஊனருந்தா வாழ்க்கை நல்கி
இகதலத்திற் பிறவாவீ டடைதல் வேண்டும்
என்முயற்சிக் கிடையூறே னிழைக்கின் றாயே. 103

பண்ணவர்மன் னவர்பிலத்தோர் எவரா னாலும்
பலபலஉண் டிகள்படைத்துப் பணிவா ராயின்
நண்ணவல்ல பேறனைத்தும் நல்கி யின்சொல்
நவின்றருளி நகைமலரும் நால்வாய்க் குன்றே!

வண்ணநறுந் தமிழ்ப்புலவர் தாமும் தூய
மாதவரும் கவிகூர மன்னர் நாண
எண்ணரும்சீத் தாடிநின்னிற் சேர நாடும்
என்முயற்சிக் கிடையூறே விளைக்கின் றாயே. 104

கூற்றனிகர் தானவரை கொல்வான் வின் [illegible]
குலந்துதிக்கும் குஞ்சரமே! கொடிய மாயையர்
சேற்றமிழ்ந்தி னாலுமுன்னை மறந்த துண்டோ
செக்கடிப்பின் னாக்கினும்என் செஞ்சொற் றீதோ
ஆற்றலொன்றா யினுமெனக்கேன் அளிக்கின் றில்லாய்
ஐயகோ உலகிகழா தாண்டு கொண்டாய்!
ஏற்றமுறு பூசனைமிக் கியற்றி டேனோ
என்முயற்சிக் கிடையூறே விளைக்கின் றாயே. 105

ஆறுமதி கொன்றையணிந் தாடக் கண்டும்
அரன்கயிலைக் கிளவரசென் றறையா தாரும்
பேறுசில பெறக்கொடுத்தாய் எனையா ளாமற்
பேதுறக் காண்கின் றாய்இப் பெற்றி யெற்றோ
கீறுமிளம் பிறைக்கோடொன் றேந்தும் எந்தாய்!
கிளருனருட் டுளிசிறிது கிடைக்கும் என்றே
ஏறுறழ்பொல் லார்பலரைப் பகைத்தேன் இந்நாள்
என்முயற்சிக் கிடையூறே விளைக்கின் றாயே. 106

தளவநகைச் சிறுமியர்கள் மோக முன்னாச்
சாற்றுறுமே டலைமூன்றும் தணக்கின் றில்லேன்
களவுறுபாழ் மனவெளியிற் பல்காற் றோன்றும்
கருவணை பொய்த்தால் எவ்வனுய்வேன் கைவிடாதே!
குளநடுவிற் கண்ணுறு பொற் களிறே! முன்னம்
கும்படார் தொழிலழிக்கும் குணக்குன் றே! நின்
இளவல்மொழிப் படிகருங்கற் கிணறு கெல்லும்
என்முயற்சிக் கிடையூறே விளைக்கின் றாயே. 107

தந்திமுகப் பண்ணவனே தலைவ னென்றும்
தவமுடையார் வேட்கைநல்கும் தருக்கள் போலும்
ஐந்திருங்கைக் கணபதியே ஆகு ஏறும்
அப்பனே வல்லவைப்பெண் அகலா வாழ்வே!
கந்திமலர சோணாட்டோர் நதியும் செஞ்சொற்
கனிதமிழ்நாட் டொருநதியும் காட்டி மேனாள்
இந்திரனைக் கும்பனையாண் டமைசொற் றேத்தும்
என் முயற்சிக் கிடையூறே விளைக்கின் றாயே. 108

தொழிற்றுவக்கு வார்முதலிற் றொழுஞ்சீர் வாய்ந்த
    தும்பிமுகப் பெருமான் துணைத்தாள் வாஞ்சை
கழித்தவர்போன்று யான்வருந்தக் கண்டா யந்தோ?
    கடைக்கணருள் சிறிதெனுளம் களிக்கச் செய்து ஆள்!
பழிப்பவர்க[illegible]ாதுகுகன் புனத்தில் அந்நாள்
    பாவை[illegible]ற் றொழுதிறைஞ்ச[illegible]ந்தாங் கேகி
எழிற் குறமான் தருமோகப் பிணிதீர்த் தாண்டாய்!
    என் முயற்சிக் கிடையூறு விளைக்கின் றாயே. 109

மயக்கமறு கருவடிவே யாம்நின் பொற்றாள்
    வணங்கிமிகப் போற்றிசைத்து மாழை வேண்டும்
தயக்கமுந்தீர்த் திலையெனையில் வாறு வாட்டத்
    தருமமோ இனியேனும் தயைசெய் தாள் வாய்!
கயற்கண்மட மங்கையர்க்கும் புலவோ ருக்கும்
    கலக்கமில்மா தவத்திவர்க்கும் கண்ணே போலும்
இயற்கிழவி யொருத்தியைத்தொல் கயிலை சேர்த்தாய்!
    என்முயற்சிக் கிடையூறு விளைக்கின் றாயே. 110

## 12—ஆம் பத்து

காவுடையான் பெருவாழ்வும் கழிவாம்என் றுணர்ந்தபின்
பூவுலகிற் புல்லரிடம் புகுந்திரக்கத் தரும் கொல்லோ
மாவுருப்பும் தேவுருப்பும் வன்பூதத் துருப்புமா
மூவுருவு முடைத்தாகு முதற்பூசைத் தெய்வமே. 111

பக்குவம்சற் றேனுமில்லாப் பாமரர்பாற் பழகியே
மிக்குழலச் செயும்பாழ்த்த வினையொழில தெற்றையோ
இக்குடன்முப் புடைக்காயும் எள்ளுண்டை யாதியும்
மொக்குமெழிற் கரிமுகத்து முதற்பூசைத் தெய்வமே. 112

ஐம்பெரும்பூ தமும்நின் னாலாயவிதம் அறிந்தும்நான்
இம்பரிற்பற்பலரிடம் சென் றிரந்துழலற் கிசைவனோ
கொம்பையொடித் தொருகதைபொற் குவட்டின்மிசை வரை தரும்
மொய்ம்பொருநா லொடுதோன்றும் முதற்பூசைத் தெய்வமே. 113

குண்டரா தியர்தாமும் கண்டுந்தப் படுபொலேன்
அண்டவா னருமேத்தும் அருள்நலம்பெற் றமை வனோ
வண்டவா விடமலரும் மலர்த்தொகையுள் தலைதோய்
முண்டகா தனன் மறையின் முதற்பூசைத் தெய்வமே. 114

மிகுந்தநலம் இவ்வுலகின் மிசைபுரிய முயலும் நான்
தகுந்தபயன் அடையாமல் தட்டழிய விடுவதேன்
தொகுந் தருவர்க் கொமன்போலும் தோள்வலிபெற் றுயர்ந்தகார்
முகுந்தன்முத லோர்பரவும் முதற்பூசைத் தெய்வமே. 115

மெய்ப்புலவர் பலர்வாட வெறுமாற்ற மிகப்பகர்
பொய்ப்புலையர் களிகூரும் பொல்லாங்கென் றொழியுமோ
மைப்புயல்நேர் முயலகன்மேல் வலத்தாள்வைத் தாடுவான்
முப்புரந்தீ யிடப்போற்றும் முதற்பூசைத் தெய்வமே. 116

சத்தவிதச் சுருதிமறைச் சமரசந்தேர்ந் துவக்கும்நான்
பித்தனெனப் பலரேசப் பிழைபடுதல் முறைகொலோ
தத்தம்வினை முற்றிநலம் தரும்பொருட்டாற் சந்ததம்
முத்தரொடு பெத்தர் தொழும் முதற்பூசைத் தெய்வமே, 117

நனியருட்பே றுறநாடி நான்வருந்தல் அறிந்தும்நீ
மனிதர்புகழ்ந் திடும்சிறிய வாழ்வும்வழங் கிலையையோ
இனியபுனற் காவிரியும் எழிற்பொருநை யாறுமுன்
முனியரசுக் கீந்தருளும் முதற்பூசைத் தெய்வமே. 118

அருகர்பவுத் தரும்சகியா அநியாயப் புலையர்மேற்
பெருகஇக ழுறுமென்னைப் பேணிலை யாய்கொலோ
குருகலறக் கவண்கலெறி கோல்வளைக்கைக் குறத்தியை
முருகன்மகிழ் வுறப்புணர்த்தும் முதற்பூசைத் தெய்வமே, 119

இகத்திலொரு பேறேனும் ஈகிலையே ஈடிலா
மகத்துவம்சேர் கதியாண்டு வழங்கிடல்மெய் யாங்கொலோ
பகட்டுமுகத் தொடுதோன்றிப் பாடல்வல கிழவியை
முகட்டுமலைத் தலைஉய்த்த முதற்பூசைத் தெய்வமே. 120

## 13-ஆம் பத்து

ஓர்வர முழும் பெறலின்றி உலகினரோடுழல் வேனுக்(கு)
ஆர்வமிகக்கொடுத்துன்மெய் யடியவரோடுற வைத்(து) ஆள்
கார்வருசீர் இமவெற்பிற் கங்கையினொடுமுன் வந்த
பார்வதியாள் முதலீன்ற பவளநிறக்கண பதியே. 121

எச்சில்விழைந் துழல்நாய் போல் இங்குழல் என்னது பாடல்
நச்சினை யாதும்நல்காமே நமன்கையி லேகவும் பண்ணேல்
கச்சியின் மால்செயும்ஆடற் கண்டுடன் சக்கரமீந்தாய்!
பச்சிலை யிட்டவருக்கும்பதந்தரு சீர்க்கணபதியே. 122

செல்வர்தம் வாயில்தொறேகிச் சிறுமையின்றமை தீர்த்தென்
சொல்வழி மேருவிற்பேர்த்தோர் நுண்டரு ளாவிதம்யாதோ?
கல்வரைப் பாவைதன்பாலா! கார்நிறத் தானவர்க்கொல்வான்
பல்வகை யாயுதம் தாங்கும் பதினொருகைக்கண பதியே. 123

சகளமும் நிட்களந்தானும் சத்திய மென்றுணராமல்
இகல்மதவா திகளேபோன்று யானும் வருந்திடல் முறையோ
மகரமு லாவுமுந்நீர்க்கண் வல்லவை யிக்கிருந் திடுவ தப்
பகரொரு மூவர்களான பன்னியர் சேர்கண பதியே. 124

அனகர்ப ராவியசீர்த்தி அமைதரு மாரதற் காகச்
சனகம னைக்கிடைபோந்நீர் சாற்றுமென் னையப்புரந்தள்ளேல்
கனகவ ரைத்தலைபற்றிக் காலொடு போர்பொரவல்ல
பனகமொன் றைக்கொடுகட்டும் பண்டிகொள் ளும்கணபதியே.
125

சீதர னாதியர்போலும் திறல்பெற நாடிய சிறியேன்
பூதல மானிடர்பாலும் போயிரந் தெய்ப்புறப் போமோ
வேதமு யிர்க்கொலைசெய்யும் விதியும்வி திக்கும்என் றொப்பும்
பாதகர் தாமும் முற்போற்றிப் பணியும்ம காகண பதியே. 126

நெஞ்சறி யத்தமியேன்பால் நீயுரைத் திட்டவை யெல்லாம்
வஞ்சக மாகில்முன்பல்லோர் வாழ்வுறச் செய்தல்மெய் யாமோ
குஞ்சர மாமுகத்தப்பா! கொன்றையஞ் செஞ்சடைக் குழகா
பஞ்சவி தத்தருநாணப் பயன்தரு கைக்கண பதியே. 127

பொன்னியு டன்பொருநையுமுன் பொதியைமு னிக்கரு
ளினையேல்
என்னிருங் கற்கிணற்றூடோர் எழில்நதி வந்துறச்செய்வாய்!
நன்னிலை யாளருமென்னை நாயனை யார்களும் ஒதும்
பன்னிரு பேதமுந்தா னாப் பரவுத னிக்கணபதியே. 128

கரவுறு நெஞ்சினர் தம்பாற் கைவிரி யாதருட் காட்சி
தரநினை கின்றிலையதனால் தட்டழிந் தேன்எனைத்
தடுத்து ஆள்!
சரவணன் வேண்டியபோதோர் மதயவ்வந் தன்பொடுதழுவப்
பரணரு கோர்களி றாகிப் பண்ணுசெல் லும்கணபதியே. 129

கருப்புவிற் காமனைவென்றுன் கண்ணருள் வாரியின்மூழ்கி
இருப்புலக் கைச்சமனாடா(நு) யானுனைச் சேர்வதென்
றியம்பாய்!
விருப்பொடு பூசனைசெய்த மெய்த்தவப் பாவையை வெள்ளிப்
பருப்பதச் சென்னியிலுய்த்த பனைநெடுங் கைக்கணபதியே. 130

## 14-ஆம் பத்து

பொருது தானவர்ப் பொன்றவென் றாகுவாம்
விருது கொண்ட விநாயக மூர்த்தியே!
நிருதிதிக்கிடை நித்தமும் நின்னுருக்
கருது மென்னைநின் கண்கொடு காண்டியே. 131

இலங்கு செஞ்சடை யிற்சிவன் என்னவே
அலங்கல் ஆத்தி அணிந்தசெவ் ஆனையே
மலங்கல் செய்பல வாதனை மீறலாற்
கலங்கும் என்னைநீ கண்கொடு காண்டியே. 132

அருணை யூர்ச்சிக ரிக்கரு கன்றொர்மெய்ப்
பொருள்மொ ழிந்த புகர்முகப் புங்கவா!
தருணம் ஈது சகலர்எய் தாத்தனி
கருணை யால்எனைக் கண்கொடு காண்டியே. 133

தவல ரும்புகழ்ச் சங்கரன் சத்திபாற்
பவள வெற்பின்மு தற்றரு பண்ணவா!
புவன மாயையிற் புண்படும் புன்மையேன்
கவலை தீர்தரக் கண்கொடு காண்டியே. 134

மாசில் சீர்பொலி வல்லவை தன்னுடன்
ஆசில் ஆடல் அனுதினம் ஆடுவாய்!
ஏசில் அன்பர் இனத்தொடு சேரவெற்
காசில் மெய்யருட் கண்கொடு காண்டியே. 135

ஆத வன்றன் அகட்டுற நீடியோர்
போத கத்திற் புவிக்கண் உலாவுவாய்!
நீத மில்லவர் நீற நினைத்துளேற்
காதல் கூர்ந்தருட் கண்கொடு காண்டியே. 136

விடையு ளான்பணி வெஃகி விடுத்ததேர்த்
தடைசெய் தாண்ட தளிப்பெருந் தெய்வமே!
அடைய லார்க்குளம் அஞ்சி யழுங்குறும்
கடைய னேனைநின் கண்கொடு காண்டியே. 137

பொதியை வெற்புடைப் புண்ணியன் நன்னுயிர்
நதியி ரண்டருள் ஞானவி நாயகா!
பதித னேன்தொடும் பாறையில் நீர்வரக்
கதிர்முற் சொன்னமுக் கண்கொடு காண்டியே. 138

தம்பி உய்வுறத் தண்புனத் திற்குறக்
கொம்பி னைப்புணர்த் தும்குணக் குன்றமே!
நம்பி யேத்தி நலம்பெற நாடுமென்
கம்பி தம்கெடக் கண்கொடு காண்டியே. 139

ஔவை தன்னை அணிக்கயி லைக்கண்விட்(டு)
இவ்வை யம்சொல் லிசைப்பெருக் குஎய்தினாய்!
தௌவை சேர்முகத் தார்வசையால் வரும்
கௌவை தீரதரக் கண்கொடு காண்டியே. 140

## 15-ஆம் பத்து

கள்ளைப் போலும் சொல்லார் ஆசைக் கடல்மூழ்கி
வெள்ளைத் திங்கட் குடையோன் அம்பால் மெலியா(து ஆள்
கிள்ளைப் புள்ளே யனையாள் பங்கிற் கிளர்ஈசன்
பிள்ளைத் தன்மைப் பெற்றோர் தம்மிற் பெரியோனே. 141

வேதம் விதித்தோன் ஆதியர் சொல்லே மிகநம்பும்
போதமெய் துற்றும் புல்லரும் எள்ளப் புலர்வேனோ
ததாகி யாதித்தலையணி நல்கும் தந்தைக்காப்
பீதக வெற்பிற் பாரதம் எழுதும் பெரியோனே. 142

தறையொடு வானும் சீர்பெற நாடும் தமியேனுட்
குறைதவி ராயேற் சிறுவர்செய் தொண்டும் கொளல் மெய்யோ
சிறைவலி நீடும் சிம்புளு ருக்கொள் சிவனேபோற்
பிறையணி செம்பொற் சடையணி கொள்ளும் பெரியோனே.
143

பற்றலர் தம்புன் குடைநிழ லின்கீழ்ப் படுமென்னைப்
பொற்றரை யோரும் புகழ்தர வைக்கும் பொழுதுண்டோ
கற்றவர் கற்போர் முற்றமர் ஞானக் களிறே! வெண்
பெற்றம்இ வர்ந்தார் முற்றரு கொற்றப் பெரியோனே. 144

மேருவ ரைத்துண் டொன்றருள் என்னா மிகவேண்டற்
பாருல கெள்ளக் கண்டனை ஈதோர் பழியன்றோ
சீருறு பிள்ளைப் பிறையொடு மாரன் சிலைபோலும்
பீருவுடைக்கார்! வல்லவை தோள்சேர் பெரியோனே. 145

கொட்டுமி முற்றிக் கும்பம மைத்துக் குளிர்பல்பூ
இட்டுனை நாடிப் பூசனை செய்பே றியாயோ
மட்டுறு பற்பல் கனிவகை தோசை வடைகண்டல்
பிட்டுமு தற்றெற் றுண்டிகள் மொக்கும் பெரியோனே. 146

கோழைம னத்துக் குண்டரும் ஏசக் குலைவேனுக்(கு)
ஊழையும் வெல்லும் திறமுறு மெய்ப்பே றுதவாயோ
கூழைவ ளர்த்துக் களைகளை பாண்மைக் குரவோர்சூழ்
பேழைவ யிற்றுப் பெருமலை போலும் பெரியோனே. 147

அருகர் பவுத்தர்க் குமா[illegible] சொல்லார் அமர்வெல்வான்
உருகுமெனோடன் றோகிய மெய்பொய்த் தொழிவாமோ
ஒருகை யிடைக்கொண் டுதறியை உண்டான் உள்ளன்பாற்
பெருகுமி ரண்டா றுதவிய தொன்மைப் பெரியோனே. 148

ஐவகை வெம்பேய் போர்செய வாடுற் றலைவேனும்
தெய்வம துண்டென் பவர்முழு தெண்ணத் திகழ்வேனோ
மைவளர் தோகைச் சிகியிவர் செவ்வேள் வனமுடோர்
பெய்வளை மோகத் துய்வகை செய்யும் பெரியோனே. 149

ஆடுமு தற்பல் லுயிர்வதை செய்வார் அழியாமுன்
வீடுத விற்சே ரேன்எனும் ஆண்மை வீணாமோ
பாடுமி யற்பா வாலிரு தறியிற் பழம்நல்கும்
பீடுறு நல்லாள் நாடுது திக்கைப் பெரியோனே. 150

## 16-ஆம் பத்து

நொந்து புலம்பி நுடங்கும் தமியேன்முன்
வந்து கருணை மழைபொழிய மாட்டாயா
இந்து முடிப்பாய் எவர்க்குமுதற் பூசைகொள்வாய்!
ஐந்து கரங்காட்டும் ஆனைமுகத் தம்மானே. 151

ஏதிலர்தம் தெய்வமும்நீ என்றே எளிதுணர்ந்து
மாதிரத்தோர் கூறும் வசைபடஏன் செய்கின்றாய்!
தீதிலருட் கண்மூன்றும் செம்புகரும் சேர்தரத்தோன்(று)
ஆதி முதற்பொருளாம் ஆனைமுகத் தம்மானே. 152

காரணமொன் றுள்ளதெனக் கந்தன் கழறுமொழி
சீரணம்போற் றோன்றத் திகைக்கின்றேன் தீர்த்தருள்வாய்
நாரணன்றன் உந்தி நடுத் தோன்றும் நான்முகன் சொல்
ஆரணமும் முற்போற்றும் ஆனைமுகத் தம்மானே. 153

ஒன்றெனப்பல் கோடியென ஓயாத வாதமிட்டுக்
கன்றிளைஞர் தம்மிற் கழிவுபடக் கண்டொழியேல்
குன்றெனமுற் றோன்றிக் கொடுந்தகுவர் கூட்டமொல்க
அன்றெனக்கா மாற்ற(ப்) றுவன் ஆனைமுகத் தம்மானே. 154

உள்ளக்கண் காண வொளிர்நீ புகலிலுள்ள
கள்ளக்கண் முன்னொருக்காற் காட்சிதரல் கூடாதோ
வள்ளல் தகைசிவனும் மாதரியும் மாசிலன்பால்
அள்ளக் களிகூரும் ஆனைமுகத் தம்மானே. 155

பொன்பார வெற்பிற் பொறிக்கும்கால் போய பொடி
என்பாற் சிறிதளித்தால் இக்கலியால் எய்ப்பேனோ
தின்பார்க் கினியநல்கிச் சிற்றறுகாற் பூசைசெய்யும்
அன்பர்க் களிதருளும் ஆனைமுகத் தம்மானே. 156

ஏழிசைத்திம் பாடல் இயற்றலன்றி மற்றறியேன்
பாழில் அழிந்தாற் பழியுன்னை எய்ப் பற்றாதோ
நாழியிரண் டாலறம்செய் நங்கையுறும் நல்லூரில்
ஆழியம்மான் எய்தநல்கும் ஆனைமுகத் தம்மானே. 157

நீறிலங்கு நெற்றியுளார் நெஞ்சமுற்றும் இன்புறற்காம்
பேறிகத்தே நல்கியென்னைப் பேணவல்லா யல்லாயோ
மாறில்பொன்னூர்க் காவலற்கும் மாதவர்நம் கோமாற்கும்
ஆறிரண்டன் றீந்தருளும் ஆனைமுகத் தம்மானே. 158

நஞ்சிருக்கும் பாம்பிறைகும் நன்மைமிக நல்கியநீ
கெஞ்சியசொற் பாடலிசை கேட்டெனையாட் கொள்ளாயோ
செஞ்சிகிப்புள் ளூர்வானைச் சிற்றேனற் செல்விமன(து)
அஞ்சியதாற் சேரமுற்போம் ஆனைமுகத் தம்மானே. 159

கௌவைமுற்றும் தீரக் கருணைபுரிந் தாலடியேன்
இவ்வையத் துள்ளநல்லோர்க் கேற்றனசெய்வே னலவோ
கொவ்வையிதழ் மானனார் குலதெய்வ மாக்குலவும்
ஔவையன்னா ரேயறியும் ஆனைமுகத் தம்மானே. 160

## 17-ஆம் பத்து

வன்கணரொருதேங் காய்நின் வாயின்முன் உடைத்திட் டாலும்
நன்கருள் புரியும் கீர்த்தி ஞானவா ரணப்பி ரானே!
நின்கழல் கருதிப் போற்றி நெடிதுளம் வருந்திக் கெஞ்சும்
என்கலிப் பிணிதீர்த் தாள்கைக் கெள்ளள விரங்கு வாயே. 161

புள்ளலம் புறுபூங் கொன்றைப் புரிசடைப் புகர்க்குன்
றேபோன்(று)
அள்ளில்வா ரிதிப்பார் முற்றும் அனுதினம் வணங்க வாழ்வாய்!
கள்ளநெஞ் சகத்துப் பொல்லார் கணம்தினம் களித்துப் பேசும்
எள்ளல்முற் றொழித்தற் கின்னே எள்ளள விரங்குவாயே. 162

முக்குணம் கடந்த மோன முடிப்புணர் முனிவர் போற்றப்
பக்குவர்க் கருளும் செம்பொற் பகட்டுமா முகத்தம் மானே
தெக்குளார் செகுத்த நோன்றாட் சிவன்தவ நிலையும் தீர்க்கும்
இக்குவிற் சமர்தீர்த் தாள எள்ளள விரங்கு வாயே. 163

பன்னகத் திறைவன் போற்றப் பருவரல் முழுதும் தீர்த்துத்
தன்னது வயிற்றின் மீதும் தரித்தருள் தயைமிக் குற்றாய்!
பொன்னவா அதனால் வாடிப் புகழிறந் துழலும்புன்மை
இன்னமும தழையா வண்ணம் எள்ளள விரங்கு வாயே. 164

வேதமா திய நூல் போற்ற விளங்குவ தன்றி யிந்தப்
பூதலத் தூர்கள் தோறும் பொலிதரு புகர்ப்பொற் குன்றே
நீதமோர் சிறிதும் தேறா நீசர்புன் குடைக்கீழ் நிற்கும்
ஏதமுற் றொழிக்க வேண்டி எள்ளள விரங்கு வாயே. 165

பண்ணவர் பலரும் வாழப் பகட்டுமா முகத்தோ டுற்றுத்
தண்ணளி மாரி பெய்யும் தனிமுதற் கடவு ளானே!
மண்ணகத் துயிர்கள் எல்லாம் வாழ்வது குறித்து நோற்பேன்
எண்ணமுற் றறிவா யன்றோ எள்ளள விரங்கு வாயே. 166

அகத்தொடு புறத்தும் நீடும் ஆனைமா முகத்தப் பா! நின்
மகத்துவம் அறியார் போன்றே மாழ்கிநான் வருந்த லாமோ
முகத்தின்முன் புகழ்ந்து பின்போய் மொழிக்கனல் சொரியும்
முடத்(து)
இகத்தினர் மதிப்பச் செய்யான் எள்ளள விரங்கு வாயே. 167

கருமணி வரைநேர் ஆகுக் கவின்கொடி உயர்த்த காமர்
மருவுமுன் னவனே ஞான வல்லவைக் குயிர்போல் வானே
திருமலி தமிழ்க்கோ மாற்கும் சேணிறை தமக்கும் அந்நாள்
இருநதி யளித்தாய்! என்மீது எள்ளள விரங்குவாயே. 168

வானக மளவு கீர்த்தி மருவநான் வகுத்த கூபத்(து)
ஈனமில் கங்கை யாறெனாள் றெழச்செயும் வலியில் லாயோ
கானவர் மகளை வேட்ட காமுகக் குமரன் உய்வான்
ஏனலிற் களிறாய்ச் சென்றாய் எள்ளள விரங்கு வாயே. 169

பௌவநீர்ப் புவியோர்க் கெல்லாம் பாட்டியாம் ஒருத்தி
தன்னைத்
தவ்வநீர்க் கயிலை வெற்பின் தலைவிடும் சமர்த்துள் ளானே!
நௌவலந் தீவிற் பல்லோர் நகத்தளர் நாயேன் றானும்
எவ்வமில் புகழ்தோய்ந் துய்தற் கெள்ளள விரங்கு வாயே. 170

## 18-ஆம் பத்து

பாழதே பரமென் றிகல்பவர் தம்பாற்
 பத்தர் தாம் கருதிய படிவம்
விழலும் அதன்பண் பாமெனப் புகன்று
 மெலியுமா றுணர்ந்திலாய் கொல்லோ
வாழகத் திடத்தும் சாமனைக் கண்ணும்
 மகிழ்ந்துபூ சனைகொள்வா னவனே!
வேழமா முகத்தோ டாகுவிற் றிகழ்ந்துயான்
 விரும்பிய பயனருள் விரைந்தே. 171

பெண்ணர சமர்ந்த பாதியார் தவத்தாற்
 பெறமுதல் வரும்பெரும் பிள்ளாய்!
கண்ணகல் ஞாலத் தறத்திர ளாய
 காலிகட் கன்றொடு கொன்றீர்ந்(து)
உண்ணவால் அரக்கர் இனத்திடை சேர்ந்தார்
 உரம்கசந் தொல்கும்நான் உலவா
விண்ணவர் தாமும் வியப்புறத் தினமும்
 விரும்பிய பயனருள் விரைந்தே. 172

பாட்டுமா விகைக்கா அருள்புரி பான்மைப்
 பலவகைத் தேவரும் இறந்த
கேட்டுநாள் உதித்துப் பரதவித் திடும்நான்
 கிளத்துசொற் சிறிதும்ஓர்ந் திலையோ
கோட்டுவா ரணமா முகப்பெரு மானே
 குனித்தவிற் கொலைத்தொழிற் குறித்த
வேட்டுவர் தாமும் புலைதவிர்ந் துயற்கா
 விரும்பிய பயனருள் விரைந்தே. 173

அண்டகோ டிகளாம் மோதக முழுதுண்டு
 அருமறைப் பிரணவத் தமர்ந்தும்
தொண்டர்நா டியவா சிற்றுருக் கொண்டும்
 துலங்கெழிற் றும்பிமா முகவா!
எண்டரு மணங்கார் மனங்கொதித் தொல்க
 இடைச்சியர் இளமுலை தழுவி
வெண்டயிர் கவர்ந்தோன் தானும்மெச் சிடநான்
 விரும்பிய பயனருள் விழைந்தே. 174

மத்தகக் களிற்று முகத்தொர்தா னவனை
 வயங்கொள்ஆ குலிற்சமைத் தேறிப்
புத்தகத் தலைதோ றவிர்ந்துமுற் பூசைப்
 புகழ்பெறும் புண்ணியப் பொருளே!

சத்தகத் தவந்தோய் தமிழ்க்கலித் திரளாற்
சருவசித் தியும்செயத் தக்க
வித்தகப் புலவ ரொடுநிகழ் தரநான்
விரும்பிய பயனருள் விரைந்தே. 175

நாரிபங்குடையார் நடுவுள்நீ ரெரிய
நகைக்குமுன் வெளிர்கடல் புனைபார்த்(து)
தெரினச் சிறுத்தும் பூசைகொண் டுவந்தாய்!
திற்றிகள் அளவறச் செறித்துச்
சிரியம் கறங்கத் தேவரும் வியப்பத்
தீபதூ பங்கொடுத் துனதாள்
வேரிநாண் மலரால் அருச்சனை செயவே
விரும்பிய பயனருள் விரைந்தே. 176

புண்ணிய முயலும் அவரெனப் பாவம்
புரிபவர் தாமுமுற் போற்றும்
நண்ணிய புகழ்தோய் செழும்புகர்க் களிறே!
சிறியனேன் உவப்புறச் சிலகால்
நண்ணிநீ நவின்ற மொழிபிழை படுமோ
நானிலப் பரப்பெலாம் நவைதீர்
வெண்ணிறத் திருநீற் றொளிவிளைத் திடவே
விரும்பிய பயனருள் விரைந்தே. 177

பூதல முடுத்த புணரியுண் டுமிழும்
பொதியைநா தனும்புரந் தரனும்
ஏதமில் விசையோ டின்புற மேனாள்
இருநதி யளித்ததோர் இபமே!
மூதறி வினர்போற் றிசைக்கும்நின் துணையாம்
முருகவேள் மொழிவழி முயன்று
மேதகு கருங்கற் கிணற்றில்நீர் பெறவே
விரும்பிய பயனருள் விரைந்தே. 178

பாடலாற் பலருய்ந் தனரெனப் பார்சொல்
பழமொழி பற்றுமென் றன்னை
ஓடதால் இரப்பா ரொடும்இல் லறத்தால்
உளைபவ ரொடுமுய்த் தனையே
நாடலோர்ந் தொருநாள் ஞாங்கர்வேட்கு அமரர்
நாயகன் தருமகள் இருந்தும்
வேடமான் புணர்ப்பும் அளித்துளாய் தமியேன்
விரும்பிய பயனருள் விரைந்தே. 179

இக்கினும் இனிய மொழிப்பயன் கொள்ளா(து)
இகழ்ந்திடும் ஈனருக் கொல்கிச்
சுக்கிரன் அடியா ரினும்பொலார் குடைக்கீழ்ச்
சுழலல்தீர்த் திடத்துணிந் திலையே
கொக்கில்வெண் ணரைதோய் கிழவிலாய்த் தமிழ்ப்பாக்
கொண்டுவீ டளித்தருஞ் சரமே!
விக்கின முழுதும் தவிர்த்தெனக் கின்றே
விரும்பிய பயனருள் விரைந்தே. 180

## 19 ஆம் பத்து

பெரியாரொடு சிறியாரிகழ் பிழைமிக்குறு பேயேன்
கிரியாதனன் மிசைகெல்லிய கிணறென்றலிர் தருமோ
வரியார் அர(வு)அறுகுஆர் புனல் மதிகொன்றைவ ணைந்து
கரியானனம் உடனாடிய கணநாயக னாரே. 181

ஊரார்வசை பகரப்பெரி துழலும்சிறி யேனை
நாராயணன் முதலோர்புகழ் நாளொன்றுநி யாதோ
வாரார்முலை கொடுபோர்பொரு வலைவைப்பிடி யுடனோர்
காராகுவின் மிசையேறிய கணநாயக னாரே. 182

பனகாதிபன் அகம்நோவது பாறத்திரு வருள்செய்
கனமென்அள வினும்மங்கிடல் கலியின்பெரு வலியோ
புனல்வேண்டுபு கற்கெல்லிய பொல்லேனது நெஞ்சக்
கனலூட்டல் வேழத்தவிர் கணநாயக னாரே. 183

மேருத்தலை யொருதுண்டு விரைந்தெய்த விரந்தேன்
பாருட்பல ரேசச்செயல் பாவக்குண மன்றோ
சூருற்றிமை யவர்மாய்வுறு தொன்னாள் மழைபெய்யும்
காருட்கட மதநீர்பொழி கணநாயக னாரே. 184

இகமுடுறு துயர் தீர்க்கவும் எண்ணீர் எனில்முன்னாள்
பகர்வாசகம் முழுதும்பிழை படுமென்றறி யீரோ
புகர்சொற்படி முயலும்சில பொல்லார்விழி முன்னும்
ககனந்தட விடநீடுறு கணநாயக னாரே. 185

கொன்றேயிரை நுகர்பாதகர் குடையிற்றள வுறும்நான்
என்றேஉம தருளாடலின் இன்புற்றிடு வேனோ
*அன்றேதமில் அருணைக்கிடை யடியேன்எதிர் ஆனைக்
கன்றேயெனும் வடிவாவரு கணநாயக னாரே. 186

பலசந்தமும் அவிர்த்தமிழ் பாடும்திற முற்றும்
நலசந்தனையும் கொல்பவர் நடைதோறலை வேரோ
குலசந்தன வெற்பிற்கொரு கோமான்என முன்னோர்
கலசந்தர வருவானுணர் கணநாயக னாரே. 187

*நல்அசந்தனையும்-நல்ஆடுகளையும்

தவிசேறினர் புரிபற்பல தவறும்களை வதனாற்
புவியோரொடு வானோர்புகழ் புகரியல வீரோ
நவில்காவிரி யொடுதாம்பிர நதியும்தரு நன்மைக்
கவியால்மொழி பவர்காண்டகு கணநாயக னாரே. 188

பானற்பொரு கண்ணாரது பற்றொன்றும்அ றேனுக்(கு)
ஈனக்கலி தருவாதனை யிறுமாறருள் வீரோ
வானத்தினர் சேனைத்தலை வன்துய்பற மலைசார்
கானத்தொரு களிறாமிளிர் கணநாயக னாரே. 189

பயிலாகம வேதத்திகல் படிறர்க்குமுன் அருள்நீர்
வெயிலோன்எதிர் வந்தென்வினை வேரைக்களை யீரோ
மயிலாம்உரு வம்போய்நரை மலிகொக்குரு வானாட்
கயிலாயம தனில்விட்டருள் கணநாயக னாரே. 190

## 20-ஆம் பத்து

ஏழைத்தன முற்றவர் தம்மொ டிளைத் துளேற்கோர்
மாழைக்கிரித் துண்டளித் தால்மறுப் பாருளாரோ
கூழைப்பல வின்கனி யாதிய கோடிகொள்ளும்
பேழைக்கிளை யாம்பெரும் பண்டிகொள் பிள்ளையாரே. 191

கற்றார்பல ரும்கலிப் புண்படக் கல்வியில்லா
மற்றார்உவக் கும்படி செய்யுமோர் வம்பனாரோ
முற்றாமுலைப் பார்வதி யாரை முயங்கித் தன்னைப்
பெற்றார்புரி பூசையுங் கொண்டுயர் பிள்ளையாரே. 192

குறையேநினைத் தேங்கும்இப் பாழ்மிடிக் கோரம்நீங்கக்
கறைதிர்களிச் சீருறு மாறெனைக் கைக்கொளீரோ
இறையோனெனக் கொன்றையும் தும்பையும் எண்ணில்பாம்பும்
பிறைநீர்அறு காத்தியும் சூடிய பிள்ளையாரே. 193

கழையாம்சிலைக் கைம்மதன் அம்பினிற் கன்றினேற்குத்
தழைபேரருட் சித்தியினாசையும் தந்ததாரோ
புழைதோய்துதிக் கைப்புன லாட்டுப்பு போற்றுவார்தம்
பிழைதீர்த்தரு ளும்தனி வல்லமைப் பிள்ளையாரே. 194

வெந்தானவர் ஆதியர் அஞ்சலி ளாம்பட்டுரில்
நந்தாவனத் திற்சொலலும் நும்சொலை நம்பொணாதோ
செந்தாமரை யானுவல் நான்மறைத் தேவர்யார்க்கும்
பிந்தாதுமுந் தும்புகழ்ச் சாகரப் பிள்ளையாரே. 195

விரசக்குறை மேமலிந் தம்புவி வெம்பச் செய்யும்
அரசர்க்கெம னாந்தவ முற்றூறும் ஆர்வம் ஈவீர்!
கரசக்கரத் தானொடு நான்முகன் கண்டும்தேறாப்
பிரசக்கடுக் கைச்சடை யான்முதற் பிள்ளையாரே. 196

ஆடாதிய கொன்றுநின் பாரை யடக்கிடாமுன்
விடானது கிட்டினும் வேண்டலர் வீணர்தாமோ
பாடாமறை கூறெழு கோடியும் பற்றிநிற்கும்
பீடார்முதல் மந்திரத் துள்ஒளிர் பிள்ளையாரே. 197

காரானைமு கத்தொடு வந்தொர் கனாவிலோர்நாள்
சீராரும்வெண் ணற்றையென் நெற்றியிற் றீட்டினீரோ
கூரார்குலி சத்தனும் கும்பனும் கும்பிட்டேத்தப்
பேராறிரண் டன்றளித் தாண்டருள் பிள்ளையாரே. 198

உறங்கச்சலி யாநெடு மாலுய ஓதஞாலம்
பிறங்கப்புரி யாடல்சொல் வேன்தனைப் பேணிடீரோ
குறங்கற்றுள கோதையை வேலவன் கூடியுய்யப்
பிறங்கரு கோர்களி றாயினீர் பிள்ளையாரே. 199

அரியாதியர் மெச்சும் மெய்ச் சித்தி அவாவு மென்னை
மரியாது பிறந்துழ லாது (உ)முள் வைக்கவேண்டும்
பொரியாதிய உண்டியிட் டன்பொடு போற்றித்தாழும்
பெரியாளைவெள் ளிக்கிரி மேல் விடும் பிள்ளையாரே. 200

## 21-ஆம் பத்து

பத்தர்வி ரும்புமினா ரதுபாலும் தூதேகும்
பித்தன்மு தற்றருமோர்-பெரும் பிள்ளையாமிறைவா!
மத்தக மாமுகத்தோ டென்உள் வந்து நெற்றியில்நின்
கைத்தல நீறணிந்தாய் அணுக் கருணை செய்வாயே. 201

செவிய சைத்தொளிர்—சிர் பெறு செம்பொன் மால்வரை போற்
புவியில் ஊர்தோறும் முதற் பூசை கொள்வானே!
குவியும் நெஞ்சிலதா லருட் கூறொன் றும்தெரியாக்
கவிஞர் என்னாமே அணுக் கருணை செய்வாயே. 202

சீத நாள் மலரால் மிகத் தினமும் பூசை செய்வார்
பாத கந்தவிர்த்—தாண்டருள் பகட்டு மாமுகவா!
ஏத மேவிளைக்கத் தகும் ஏட னைப்பிணிமேற்
காதல் கொள்ளாமே-அணுக்-கருணை செய்வாயே. 203

இலங்கும் வெண்மருப்பால் முனிஇ யம்பும் நூலெழுதித்
தலங்கள் எல்லாம் போற்-றி-சை-தழைக்க வாழ்தலைவா!
மலங்கு லாங்கடலே நிகர்-மனமும் வன்மிடியாற்
கலங்கி வாடாமே அணுக் கருணை செய்வாயே. 204

ஏம னைத்தடிந்தான்-முதல்-ஏறுந் தேர்முறித்தும்
கோம ளப்புலவோர்-புகழ்-கூற வாழ்குழகா!
தாம வாளிகளால்-மிகத்-தயங்கச் சந்ததமும்
காமன் எய்யாமே-அணுக்-கருணை செய்வாயே. 205

எண்கன் னார் வசையால்-மிக-ஏங்கும் நான்இமையா
வண்கண் வானோரும்-புகழ்-வாழ்க்கை எய்தேனோ
உண்கண் வல்லவையார்-மகிழ்-வுறுநல் லாடல்செய்வாய்
கண்க ளால்எனக்கோர்-அணுக்-கருணை செய்வாயே. 206

செங்கை யேற்றலையா-தருட்-சீலர் போல்வார்க்கும்
அங்கை யால்விழைபே றளித் தார்வ மெய்தேனோ
கொங்கை யோர்பாகத்-தவிர்-கோலத் தாதையைப்போற்
கங்கை யும்புனைநீ-அணுக்-கருணை செய்வாயே. 207

விதிதன் மைந்தனுக்கும்-சத-வேள்வி நாயகற்கும்
நதிகள் ஓரிரண்டீந்து-அருள்-ஞான வாரிதியே!
பதிதர் எள்ளாமே-பல-பலசித் தாடியப்பாற்
கதியும் எய்தேனோ-அணுக் கருணைசெய்வாயே. 208

வானத் திற்புலவோர்-பெரு-வாழ்வும் தாழ்வெனவே
ஞானச் சீர்பெறுவா-ரொடு-நானும் சேரேனோ
ஏனற் காவல்கொள்வாள்-தனை-இளவல் கூடியுய்வான்
கானத் தூடவிர்ந்தாய்-அணுக்-கருணை செய்வாயே. 209

எயிலைச் சுட்டானும்-கடல்-இடைகுன் றிட்டானும்
பயில்சொற் பெற்றடியேன்-அகல்-பாரி னும்திகழ்வேன்
மயிலைப் போலுமினார்-பலர்-வணங்கும் தேவானாட்
கயிலை மீதுவிட்டாய்-அணுக்-கருணை செய்வாயே. 210

## 22-ஆம் பத்து

தேனைநேர் தமிழால் தினந்தினம் சிறியேன்
செப்புபல் கவியும் தீயன தாமோ
மோனையும் எதுகை யாதியும் பிறழ்
மொழிந்தசில் புலவோர் மொய்ம்புமெய் திலனே

யானைமா முகமும் ஐந்துகை களும்கொண்(டு)
ஆகுவா கனத்தில் அமர்விநா யகனே!
மேனையார் மருகன் விழைபவும் விழைந்தேன்
விக்கின முழுதும் விலக்கியாண் டருளே. 211

வண்டுலாம் கடுக்கை மதியொடு முடித்து
வல்லவை மகிழும் மாநடம் புரிவாய்!
பண்டுநா னறியத் திருவுருக் காட்டிப்
பக்குவம் விளைத்த பண்புவம் பாமோ
தொண்டுசெய் துய்ந்தார் திருவடி மலர்மென்
துகள்சிரத் தணிசீர் தோய்தரப் பெறலால்
விண்டுநேர் வலிபெற் றிடமுயல் கையினேர்
விக்கின முழுதும் விலக்கியாண் டருளே. 212

கேள்வியிற் பெரியார் உணர்கய முனியாய்க்
கிளர்பிர ணவத்துட் கெழுவுமுன் னவனே!
வாள்விழிச் சிறுமி மார்மயல் கடக்கும்
வலியிலேன் எனினும் மதமெலாம் கடந்துன்
தாள்விழைந் தருளே வடிவமா மறையின்
தன்மைநன் கறியாச் சைமினி யுரைத்த
வேள்வியிற் கொலையும் களையவேட் டிலனோ
விக்கின முழுதும் விலக்கியாண் டருளே. 213

பூதல ககன பாதலத் தெவரும்
பூசைமுன் னாற்றும் புகழ்கொள்புங் கவனே!
நீதயை மிகையாற் பகர்ந்தசொற் பிழைத்தால்
நிகமஆ கமத்தின் நிசங்கள் பொய் யாவோ
காதகர் வெருள உருத்தொறுத் துலவாக்
கருணையிற் றோய்ப்பக் கருதினேன் அறிவாய்!
வேதநூல் முனிநீ யாதலின் இன்னே
விக்கின முழுதும் விலக்கியாண் டருளே. 214

கரதலத் துறுமாங் கனிப்பயன் உணர்ந்தும்
கனகமா வினர்போற் கலங்கிவா டுவனோ
அரதனப் பூணோ டுஆலவெம் பணியும்
அணிந்துநின் றாடும் ஆனைமா முகவா!
சரதமோர் சிறிதும் இல்லவர் வாழ்க்கை
சகித்திடாத் துயரம் தழைவுறத் தளர்ந்தேன்
விரதமா யிரமும் வீண்படா தருளால்
விக்கின முழுதும் விலக்கியாண் டருளே. 215

முத்தமிழ்க் கவியால் வழுத்திநா டோறும்
முகிழ்மலர் சொரிந்து முன்தொழும் எனக்கு
மெய்த்தவர் பேறும் விண்ணுளார் திருவும்
மீளிமார் புகழும் விரும்புபண் பளித்தாய்!
இத்தனை தூரம் முயன்றுமொன் றறியேன்
இன்னமும் இரங்கா திருந்திடேல் அந்தோ
வித்தக வேழ முகக்கண பதியே!
விக்கின முழுதும் விலக்கியாண் டருளே. 216

பாண்டில்அச் சிறுத்துச் சிவன்பணி கொண்டாய்!
பாற்கடல் மதிக்கும் பண்ணவர்த் தகைந்தாய்!
ஆண்டியல் தடையும் நின்னவென் றுயாரும்
இசைத்துளார் உனைநான் இறைஞ்சிலேன் கொல்லோ
ஏண்டிகழ் கயமா முகப்பெரு மானே!
ஏமமா யினும்என் னிச்சைமட் டளித்தால்
வேண்டிய உணவிட் டுபசரி யேனோ
விக்கின முழுதும் விலக்கியாண் டருளே. 217

நாறும்நான் மலரோன் முதல்தரு முனிவன்
நலமுற மகவான் நந்தனம் தழைப்ப
ஆறுதந் தருள்நின் கருணையென் னளவில்
அழியு மோ எனக்கேன்அறல் அளிக்கில்லாய்!
நீறுமண்அணிவார் இருவர்தம் பொதுவில்
நிலவும்வாரணமே நெஞ்சமிக் குலைய
வேறுவே றியற்கைத் தாய் எனைச் சூழும்
விக்கின முழுதும் விலக்கியாண் டருளே. 218

நண்ணிலார் ஒருதேங் காய்உடைக் குவதா
நவிலினும் அருளி நகைசெய்நால் வாய்நீ
விண்ணிலாள் வருந்தக் குறமடக் குருகும்
வேலனும் களிப்ப விரைந்தரு ளினையாற்
கண்ணிலா வுலகத் தினில்எதிர் காலக்
கதைசொல்நூற் படியென் கற்கிணற் றிடைநின்
வெண்ணிலாச் சடைநீர் உதித்தெழக் கொடுத்தே
விக்கின முழுதும் விலக்கியாண் டருளே. 219

தையலார் குலத்தே வரமொரு கிழவி
தனைத்துதிக் கையாற் றவளமால் வரைமேல்

உய்யவிட் டருளும் உனைமிகத் துதித்தும்
    உலகர்வாய் வசையால் உள(ம்)மிக உழன்றேன்
பையரா அரசும் உய்வுறப் புரந்த
    பண்டுநாள் இன்றோ பவளவான்கரிநின்
மெய்யருட் கண்ணாற் சிறிதெனைப் பார்த்தே
    வினை முழுதும் விலக்கியாண் டருளே. 220

## 23—ஆம் பத்து

பாழுபவாகமலிந்து அத னால்வரு பருவரல் முழுதும் தீர்த்(து)
ஊழுந விற்பெரி தென்பவர் தம்மைம றுக்கும்உ ரந்தருவாய்
மேழக மேநிகர் வானவர் தானை—வெ ருண்டுலையப்பொருகார்
வேழமு கத்தவு ணன்தனை அன்றடும் வென்றிவி நாயகனே. 221

மேழகம்—செம்மாரியாடு

அங்கண்நி லத்தில் அயின்றிடு பேறும் அரும்பய னாம்மிடியாற்
சங்கட மிக்குழல் வேன்நுவல் கின்ற தமிழ்த்துதி சூடுதியோ
செங்கம லத்தினள் கேள்வன் முதற்பகர் தேவர்தொ ழத்திகழ்சீர்
வெங்கனலோ துவ ரோஎன நீடெழில் மேனிவி நாயகனே. 222

சத்தநெ றிப்பொது மைக்குண முற்றுமொர் தன்மைபி
டித்திகலும்
சித்தமு டைச்சிறி யோரும்ந கத்தகு தீமையு றச்செயலேன்
முத்தமிழ் வெற்பிறை வற்புகழ் நட்புறு மோனமு னிக்கணமாம்
வித்தகர் யாவரும் முற்றொழு சீர்கொடு வீறுவி நாயகனே. 223

அளவறு தொண்டர்மு னார்வமு றச்செய் அருந்தமிழ்
என்னைஇவா(று)
உளமெலி யும்படி விட்டதே னோஅருள் உண்மைபி
ழைத்ததுவோ
குளமரு வும்கணு டன்புக ரும்பெறு குஞ்சரமாய் ஒருநாள்
விளநக ரத்திலெ னக்கினி தாம்மொழி விண்டவி நாயகனே. 224

சத்திய ஞானமி லாதவர் புன்குடை தாரணி கொண்டுழும் நாள்
எய்த்திடை யும்படி என்னைவி டுத்தவர் யார்கொல்
இசைத்தருள்வாய்
அத்திமு கத்தர சே!யடல் அங்கையில் அங்குச பாச
முள்ளாய்!
வித்திலி லங்குறு தாரக மூடுவி ளங்கும்வி நாயகனே. 225

ஆதியும் மற்றைய நாதியு முன்றனை யன்றியி லாநிசமோர்ந்(து)
ஓதிவ ணங்கியும் என்னையி வண்ணம்உலைத்திடல் நீதிகொலோ
பாதிம திச்சடி லக்களி றேசிவ பாலக ரில்தலைவா!
மேதினி யூர்ப்பல சந்திதொ றும்தினம் மேவும்வி நாயகனே. 226

வையமி கழ்ந்துள கற்கிண றொன்றிடை மாநதி வந்தெழலால்
ஐயரும் என்னைவி யந்துசொ லச்செயும் ஆண்மையு
னக்கிலையோ
பையர வத்திறை உய்வகை செய்துயர் பண்டியி னும்புனைவாய்!
மெய்யடி யார்க்குறும் விக்கின முற்றும் விலக்கும்வி நாயகனே.
227

பண்டிரு மாநதி நல்கினை இன்றிப் பாறையி லோர்நதிதந்(து)
எண்டிசை யோர்களும் முன்றுந திக்கிறைஎன்றபு கழ்புனைவாய்!
வண்டிறை கொன்றையி னோடறு கும்புனை வார்சடை
வாரணமே
வெண்டிரு நீறுமண் ணிட்டவர் முற்றும் விரும்பும் விநாயகனே.
228

கந்தன் விரும்பிய வண்ணம் அவிர்ந்து கருங்குற மாதனைசீர்
தந்தது சத்திய மாகில்என் இன்னல் தணந்தரு ளற்றிசைவாய்
அந்தர ஆறுசெல் கின்றவர் யாரும் அகங்குளி ரும்படிமுன்
விந்தம டக்கிய மாமுனி யாதியர் வேண்டும்வி நாயகனே. 229

புள்ளிய தோலுடை யாரருள் கொண்டுபு ரிந்தபெருந்தவசால்
தெள்ளமு கத்தொடு வந்தனை யென்துயர் தீர்ப்பது னக்கரிதோ
உள்ளிய வண்ணமெ லாய்ஔவோர் பாடல்கொ டொல்லை
முடித்தவளை
வெள்ளிவ ரைத்தலை யன்றொரு கைவழி யிட்டவி நாயகனே.
230

தெள்ளி—யானை

## 24—ஆம் பத்து

நம்பிவ முத்துமென் றன்னொடு சின்மொழி நவின்று முள்ளாயே
வம்பிசைக்கும்புலை மானிடர் வாயின் மறுக்கக்காண்பானேன்
செம்பியன் பாண்டியன் சேரனன் னார்கொடைத்
திறமும்செய்யாயோ
தும்பிமு கக்கண நாயக நிற்கிந்தச் சோம்ப லாகாதே. 2 1

முந்தியொர் நாள்துதிக் கைப்புன லாட்டினை முதிரு
மெய்யருளாற்
பிந்திவெண் ணீறுத ரித்தனை யெற்கொரு பெருமை நல்காயோ
அந்திம திச்சடை யான்மக னாகிஅதணிந்தும் ஆடல்பொய்யோ
தொந்திவ யிற்றுவி நாயகநிற் கிந்தச் சோம்பலாகாதே. 232

மண்டலத் தூர்பல சந்திதொ றும்தினம் வைகி மாசறுசீர்த்
தொண்டரொ டுண்டிய ளிப்பவர்க்கின்பருள் தொழில்கை
விட்டனையோ
எண்டரு பாடல்அ ணிந்திரக்கின் றஎற்கு யாதும் நல்கிலையே
துண்டம ருப்பணி கைப்பர நிற்கிந்த சோம்ப லாகாதே. 233

மாயவ னாடல்கண் டக்கணம் சக்கரம் வழங்கும் வாரணமே!
பாயச மெள்ளுண்டை மோதக மாதிப டைத்துப் போற்றிடவே
நேயமி குத்துழு யன்றஎன் றன்னை யும் நிரப்பில் விட்டனையே
தூயம றைத்தலை மேவிய நிற்கிந்தச் சோம்ப லாகாதே. 234

குல்லைம லர்ப்பெருங் காடும்வெட் கும்படி குலவும் குஞ்சரமே!
நெல்லைந கர்த்திரு கோயிலி லன்றொளிர் நிசமும்
பொய்த்திடுமோ
இல்லைஎன் னாதெவர்க் கும்கொடுத் துப்புகழ் எய்தக்
கொண்டுளதாம்
தொல்லையு தாரம்எங் குற்றது நிற்கிந்தச் சோம்ப லாகாதே.
235

கோட்டினைக் கொண்டொரு குன்றில்ஐத் தாமறை கோட்டும்
கொற்றமுள்ளோய்
தோட்டிருந் தாமரைப் பண்ணவன் கைப்பொறி தொடைக்க
வல்லையன்றோ
மாட்டிவர் வாரிடத்து அன்னைஅ றம்செயும் மலர்க்கை
தோய்வனவாம்
தோட்டியும் பாசமும் பற்றிய நிற்கிந்தச் சோம்பலாகாதே. 236
கோட்டுதல்—எழுதல்

கல்லினை யன்னம னத்தினர் கைக்கொடை கருதி
வாடுகின்றேற்(கு)
அல்லியந் தாமரைச் செந்திரு வின்பமும் அருள வல்லாயோ
நல்லிப மாமுகத் தாதியப் பரமறை நான்கும் ஆகமமும்
சொல்லிட எங்குமுற் பூசைகொள் நிற்கிந்தச் சோம்ப
லாகாதே. 237

அன்றுயிர் கொலைபுலை வேள்விவல் லாற்குமோர் ஆறு
நல்கினைதென்
குன்றுடை யாற்கும ளித்தனை கற்பெருங் கூப மொன்றால்யான்
வன்துயர் எய்தல்பொ றுத்திருக் கின்றனை வல்லவை
பங்குடையாய்
துன்றுமெஞ் ஞானம தம்பொழிநிற்கிந்தச் சோம்ப லாகதே. 238

முக்கணு டைச் செழுஞ் செக்கரொக் கும் கரி முகத்துமுன்
னவ னே!
அக்கடத் திற்குகன் சொற்படி சென்றுமோர் ஆர்வம்
நல்கிலையோ!
இக்கணத் தக்கினி யிற்கிக் கத்தரு மென்றற் கேன்
இரங்காய்!
தொக்கக ணாதிபர் சூழ்தரு நிற்கிந்தச் சோம்ப லாகாதே. 239

கண்டுறழ் வண்டமிழ் ஔவையைக் கைக்கொடு கயிலைமீது
விட்டாய்;
வண்டுணு! மாமத நீர்சொரிந் தென்சிறு மனக்கண் காண
வந்தும்
இண்டுறு கூந்தலிற் சிக்குற விட்டதென் இகழும்
வானுமுய்வான்
தொண்டுசெய் கின்றஎன் மட்டினும் நிற்கிந்தச் சோம்ப
லாகாதே. 240

## 25ஆம் பத்து

கல்லோ டுறழ்என்! கடுநெஞ் சிடைசேர்
அல்லோ வஅருட் பொலிவென் றருள்வாய்!
நல்லோர் பரஞானியர்யோ கியர்மெய்ச்
சொல்லோர் உணர்தூ யகணா திபனே. 241

பாவத் தொழிலே முயல்பா தகரிற்
சாவத் தணவா தருள்தந் தெனையாள்!
காவற் றொழில்மால் கமலத் தன்முதல்
தேவர்க் கருள்சே யகணா திபனே. 242

கள்ளம் பொலிகா முகரிற் கடையேன்
உள்ளம் தனில்வந் தொளிர்நாள் உளதோ?
தெள்ளன் புறுசீ ரியர்தோர் மதநீர்
வெள்ளம் பொரவிட் டகணா திபனே. 243

போர்ச்சங் கைமுயன் றுழல்பொய்ப் புலவோர்
கார்ச்சஞ் சலமீ தல்கழித் தருள்வாய்!
சீர்ச்சந் திரசே கரவே ழமெனா
ஊர்ச்சந் திதொறுற் றகணா திபனே. 244

மாகுற் றம்நிதம் செயும்வம் பினென்வாய்ப்
பாகுப் புரைபா டல்விழைந் திலையோ
சோகுத் திரள்சூழ் சிவனார்தர வந் (து)
ஆகுப் பரியாண் டகணா திபனே. 245

பலதுட் டர்பறந் தழியக் கறுவும்
புலமைத் தொழில் போதமு டன்தருவாய்
கலவைத் திரளார் கவின்மா முலைதோய்
வலவைப் பிடிவெள வுகணா திபனே. 246

மானோ டுறழ்கண் ணியர்மால் கொள்ளுக்கன்
ஞானோ தயமாம் ஒருநா ளிலையோ
ஏனோர் செயிடுக் கணுறுஞ் செயலால்
வானோர் தினம்வாழ்த் துகணா திபனே. 247

கதியின் தடையன் றதொர்கற் கின்று (டு)
அதிர்தண் புனலா றுவரப் புரிவாய்!
பொதியந் திகழ்சை யமுறும் புகழ்நேர்
நதியின் துறைநல் குகணா திபனே. 248

சந்தக் கவியே நனிசாற் றுமொழக் (கு)
இந்தத் துயரீ குவதேன் உரையாய்
அந்தக் குறமின் வலிதங் கணை வீர்
கந்தற் கருள்செய் தகணாதி பனே. 249

வெயிலிற் சுடும்வெம் மிடிவே தனை தீர்த் (து)
எயிலொத் தெனைஎன் றும்வளைந் தருள்வாய்!
குயில்வெட் குரண் டமனாளை அநாள்
கயிலைத் தலைசேர்த் தகணா திபனே 250

## 26ஆம் பத்து

குஞ்சர முகத்தொரு கிரியெனத் தோன்றிக்
குளிர்மதத் தருவியின் கோலமும் காட்டி
வஞ்சமில் கருணையந் துதிக்கைநன் னீரால்
மனமுழு தாட்டியும் மாசொழித் தில்லாய்:

அஞ்சன விழிச்சிலை யருள்முதற் பாலா!
ஆகுவின் கொடியுயர்த் தகிலமுற் றாள்வாய்!
சஞ்சல மலிதர வந்துவந் தடருந்
தடைமுழு தொழித்தென்னைத் தாங்கிக்கொள்
வாயே. 251

பொற்குவ டதன்மிசை ஒருபெருங் கதையைப்
பொறித்திக பரம்புகழ் பொற்புறப் பெற்றாய்!
எற்கினி தாம்பயன் அருள்கைதிற் கரிதோ?
இன்னமும் சோதனை ஏன்செய்கின் றாயோ?

தெற்கினற் செகுத்துயிர் சித்தன்மெய்த் தவத்தாற்
சிமையமைப் பிடிதரு செந்நிறக் கன்றே!
சற்குரு பரன்றிரு வுருக்கொடு தோன்றித்
தடைமுழு தொழித்தென்னைத் தாங்கிக்கொள்
வாயே. 252

இந்திர னுய்வுறக் காகமொத் துருக்கொண் (டு)
ஏகியும் மீண்டனை யானுயச் செயற்காத்
தந்திரம் யாதொன்றும் முயன்றிட வேண்டாம்
தலையில்நின் பதத்துணை தரித்திடிற் போதும்
மந்திர முதற்பிர ணவத் துறை வானே!
மாசுணம் தரித்தவிர் வயிற்றருண் மலையே
சந்திர சேகர சடைத்தலைக் கரசே!
தடைமுழு தொழித் தென்னைத் தாங்கிக்
கொள் வாயே. 253

எவ்வகைத் தேவரும் தணக்கரும் இடையூ (று)
யாவையும் தீர்த்தருள் ஈடுடை யாய்என் (று)
இவ்வகி லத்துள நூல்முழு தோதல்
என்னள வினும்பிழைத் திடில்எவண் உய்வேன்
செவ்வழற் கிரிபொரு சிந்துரக் களிறாய்ச்
சிந்தையிற் றோற்றலில் சேவைதந் தென்றும்
தவ்வரும் திருவருட் கடற்றுளி பெய்தே
தடைமுழு தொழித் தென்னைத் தாங்கிக்
கொள் வாயே. 254

அகத்திய முனிமுத லாம்பெரி யோர்தம்
அவையினும் புகுந்துநின் அருள்வளம் பாடிச்
சுகத்தலை முனிவன்நன் னிலையினின் றுன்னைத்
தோய்தர நாடுமெய்த் தொண்டுதந் தனையே
பகத்துறை வானைவெல் வலிதரல் அரிதோ
பவளவெற் புறழ்கண பதிப்பெரு மானே!
சகத்துறு மாந்தரும் இகழ்ந்திடச் சூழும்
தடைமுழு தொழித்தென்னைத் தாங்கிக்கொள் வாயே. 255

எங்கெவர் எத்தொழிற் செய்திடும் போதும்
ஏத்திடும் நின்னடி யிணைகுறித் துளநான்
இங்கெனில் நாள்முயன் றுள்ளவை தாமும்
ஏற்றமெய் தாதுறல் யார்செயும் கொடிதோ
பொங்கெழிற் புகர்முகப் போதக முதல்வா!
பூமகள் அழுந்துயர் போக்கிடற் பொருட்டாற்
சங்கெடுத் தானிகர் வாழ்வுறல் வேட்டேன்
தடைமுழு தொழித்தென்னைத் தாங்கிக்கொள் வாயே. 256

ஆவொடு மேடமும் ஆதிய பிறவும்
அரிந்துவெந் துண்பவர் அனைவரும் அழிவான்
பாவொடு மலரும்நின் பதத்துணைக் கிணடும்நான்
பரிசழிந் திடச்செயல் பாவமன் றேயோ
காவொடு மயங்குகைக் கணபதி யப்பா!
கருதிய படிபல காட்சியும் பெற்றுச்
சாவொடு பிறப்பறு கதிபெறக் குறித்தேன்
தடைமுழு தொழித்தென்னைத் தாங்கிக்கொள் வாயே. 257

பஞ்சினும் மெல்லடிப் பாவையர் மோகப்
பரவையிற் குளிக்குமென் பண்புகண் டிகமேல்
நஞ்சினும் கொடுவிழி அகலிகை தன்னை
நயந்தகள் வனுக்குமோர் நதியருளினையே
வெஞ்சினத் தானவ மேடம்உண் டாற்கு
வேண்டிய வாறருள் வேழப்பி ரானே!
சஞ்சிதம் ஆதிய வினைப்பெரும் பிணக்காம்
தடைமுழு தொழித்தென்னைத் தாங்கிக்கொள் வாயே. 258

எண்ணிய வாறொரு வேடமின் தன்னோர்
ஏனலிற் போய்க்குகன் இன்புற அருளும்
புண்ணிய முதல்வநின் திருவடி போற்றிப்
பொருப்பிடை யகழும்என் புகழ்ப்பெருங் கிணற்றில்
திண்ணிய மாலவன் அடியவர் இருவர்
செவிப்புலம் விளவுறச் செப்பயவாறே
தண்ணிய திருநதி வருதலைத் தடுக்கும்
தடைமுழு தொழித்தென்னைத் தாங்கிக்கொள் வாயே. 259

மிருகமொப் பாம்பல மானிடர் வாழும்
மேதினித் தலைமிக வெட்கியுட் குறவே
அருகரிற் றீயரை வெல்வலி யிரந்தேன்
அங்குச பாசங்கொள் ஆனையப் பா! முன்
ஒருகவிக் கிழவியைக் கருணையின் மிகையால்
உமைமண வாளன், மிக் குழைத்தவர் தமக்கே
தருகயி லையில்விடல் சத்திய மானால்
தடைமுழு தொழித்தென்னைத் தாங்கிக்கொள் வாயே. 260

## 27-ஆம் பத்து

எத்திக் கும்புகழ் பெறுவேட் டிறைஞ்சுமென் றனக்கோர்
சித்திப் பண்புமீ கின்றிலாய் என்செய்வேன் திகைத்தேன்
தித்திக் கின்றலுண் ஆயிரம் வகைப்படச் செறிக்கும்
பத்தித் தொண்டுளார் விழைவமுற் றருள்கண பதியே. 261

வினைக்கண் மாழ்குறும் உயிர்த்திர ளொடுமிக மெலிவேற்(கு)
அனைத்து லோகமும் மகிக்கும்வாழ் வளிக்கவல் லாயோ
நினைக்கு மன்புறு தொண்டர்கள் நெஞ்சிடை நிதமும்
புனைக்கை மாமுகக் களிறென வருகண பதியே. 262

ஆல முண்டவன் ஆதியர் அறைந்தவர் சகம்கட்
சால நம்பியின் புறுமெனக் குறுகனார் தரலோ
கால வாதனை தவிர்த்தெனைப் புரப்பதுன் கடன்காண்
பால லோசனப் பவளவெற் புறழ்கண பதியே. 263

சங்க வாணரும் பெறலரும் தமிழ்த்திறம் தந்தும்
அங்கண் ஞாலமீ தலமரச் செயல்அருட் கழகோ
தங்கம் வெள்ளிவேட் டயர்வுறா நலமினே தாராய்!
பங்க யாதனன் அறிவரும் புகழ்க்கண பதியே. 264

என்னி னைப்பிடை இருண்மலம் தொடர்வுறாது இனிதாண்(டு)
உன்னி லோர்பொரு ளாம்எனக் கூட்டுமா றுன்னாய்!
கன்னி வல்லவை சித்திபுத் தியென நூல் கழறும்
பன்னி மாரொரு மூவர்தோள் புணர்கண பதியே. 265

வீர வீரர்கண் டுவப்புறுந் திறலொடு விளங்கிப்
பூர வாகனத் தினள்நிகர் புகழுறப் புரப்பாய்!
கோர மூடமற் றுயர்முனி வரன்முன்னாள் கூறும்
பார தம்பொறித் திடும்மருப் புடைக்கண பதியே. 266

கஞ்ச நாள்மலரவன்விதிப் பிழைப்பறக் களைந்துன்
செஞ்ச ரோருகத் தாள்தொழும் அடியரிற் சேர்ப்பாய்
அஞ்ச லிந்தம ரரைப்புரந் தவுணரை அடலாற்
பஞ்ச தாருவும் நாணும்ஐங் கரக்கண பதியே. 267

ஊரில் யாவரும் உணருமென் கற்கிண றுலவா
நீரி னாலுயர் வுறும்படி யணுத்துணை நிற்பாய்!
காரி லூர்பவன் கலச மாமுனியுளங் களிப்பப்
பாரி லன்றிரு நதிகளீந் துளகண பதியே. 268

இகப ரங்களுக் காநலங் கருதிமிக் கிளைக்கும்
அகம றிந்துமிச் சோதனை செய்வதேன் அந்தோ
குகனு வப்புறக் குறமகள் கூடுதற் குறித்தோர்
பகடு ருக்கொடு பரவரு குறுகண பதியே. 269

தேவை யாவும்நல் குதிரையெனத் தொழுமென்மேற் றீயோர்
நாவை யேவியெள் ளூறச்செய லாங்கொலோ நவிலாய்
கோவை கானிடைக் கூழ்விடும் அயதிமேற் கூறும்
பாவை யைக்கயி லாயமேல் விடும்கண பதியே. 270

## 28-ஆம் பத்து

ஊடிய மாதரொத் துள்ளமெய் யடியவர் உள்ளந்தொறும்
ஆடிய துணைப்பதத் தாளையப் பா!எழில் ஐங்கரனே!
பாடிய பனுவலின் பயன்தரு வாயெனப் பற்றிநித்தம்
நேடிய என்மனக் குறிப்பையோர் அணுத்துணை
நினைகுவாயே. 271

ஆறணி யும்சடை யான்புரி நவத்தில்வந் தங்குசத்தால்
வீறணி யும்பல தானவர்ச் செகுத்தருள் விநாயகனே!
ஏறணி கொன்றுணும் ஈனர்தம் குடைநிழ லெரியிற்சூழ்
நீறணி கின்றவர் மாழ்குறுங் கொடுமையை நினைகுவாயே. 272

கண்டிகை யொடுதிரு நீறணி தொண்டர்தங் கட்கெல்லாமும்
உண்டிமிக் கமைத்துமுற் பூசைசெய் திடமகிழ் ஒப்பிலானே!
பண்டிதர் போற்றிகழ் பாமரர் வசைக்கனற் பட்டென்நெஞ்சம்
ஞெண்டி ணிக்குறுகுரங் காமெனக் குதித்தலை நினைகுவாயே.
273

ஆதியென் பார்க்கவ ணாகும்அநாதியென் றறிகுவார்முற்
சோதிகு லாந்துவர்க் கிரியென ஆகுவிற் றோன்றுவானே!
போதிலுள் ளான்சிவன் வியாசன்முன் னாம்பல புலவர்கூறும்
நீதியெல் லாம்தலை கீழ்ப்பட நிகழ்தலை நினைகுவாயே. 274

வாசவன் ஆதிய வானவர் வாழ்வையும் வம்பென்றோர்ந்து
பாசம் விண் டோர்க்கருள் பழுத்தவிர் கயமுகப் பண்ணவனே!
பூசனைச் செல்வம தேயுயர் வெனமுயல் புண்ணியரும்
நீசர்கைக் கீழ்ப்படும் பிழைமுழு தறும்படி நினைகுவாயே. 275

மைதழைத் துறுமிடற் றோன்மகன் றானெனும் வண்மைவேட்டு
வைதசந் திரனையும் தலைமிசை தாங்கிய வாரணமே!
செய்தலொன் றும்தெரி யேன்இசைப் பாடல்கள் தீதென்னாதே
நெய்தரு கொன்றையும் தும்பையும் போன்மென
நினைகுவாயே. 276

வேணியந் தாதையும்மால்முதற் றேவரும் வேண்டல்வேண்டிப்
பூணினத் துடன்அர வணிதரு புகர்முகப் புண்ணியா! நின்
பாணியென் பாறைவன் கூபத்தின் நனிவரப் பண்ணியின்னே
நீணிலத் தேரர்வசை தீர்த்திடச் சிறிதுளம் இனிநினைகுவாயே.
277

திருமலி பொதியையின் நாதனும் வானகச் செல்வன்றானும்
இருநதி யானுயச் செயும்துதிக் கைகொளும் எந்தை கோவே!
அருமைய தின்பிர ணவம்பகர் அறுவர்க்கும் அன்பனாநல்
திருமல ஞானமும் சித்தியும் தோய்தர நினைகுவாயே. 278

பஞ்சமில் அருணையின் கோபுர முகப்பில்லன்பால்
வந்தோர்சொல்
தஞ்சமென் றோதிய தன்றியும் தேற்றிய தந்தியப்பா!
வஞ்சகக் குறமகள் மால்கொளும் வேளுய வாழ்வித்தாங்கென்
நெஞ்சகம் இன்புறக் காம்வகை செயும்படி நினைகுவாயே 279

அகளமெஞ் ஞானசித் தாடியிவ் வுலகைவெல் ஔவையாரைச்
சகளாித் தாந்தமெய்க் கதிபெறக் கயிலையின் தலைவிட்டோனே!
உகளமதாய்ச் சுக துக்கமுண் டாம்பயி ரொத்துநீடும்
நிகளவல் வினையறக் களைந்தென்னை யாட்கொள்ள
நினைகுவாயே. 280

## 29-ஆம் பத்து

மானையொப் பாம்விழி மங்கையர் மால்கொடு
பூனையிற் குன்றும்இப் புன்மையென் றீர்வையோ
தேனையொக் கும்துதி செய்பவர் சிந்தையூ(டு)
ஆனையொத் துத்திகழ் ஐங்கரத் தெய்வமே. 281

சாகுதல் நன்றெனத் தக்கத ரித்திரம்
போகுதற் கான பொருட்குவை நல்குவாய்!
யோகுடை மாதவர் உன்னிடும் தோறுமோர்
ஆகுவின் மேல்வரும் ஐங்கரத் தெய்வமே. 282

மங்குலும் வெள்க வழங்கிடும் வாழ்க்கைவேட்(டு)
இங்குபல் லோர்முன் இரக்க விட்டாயையோ
கங்குல் நிறத்துஅன கண்டுவக் கக்கவின்
அங்குச பாசங்கொள்ஐங்கரத் தெய்வமே. 283

காதலொழிந்து கருத்துரு கித்தொழும்
மாதவ ரூடனை வைக்கஎன் றெண்ணுவாய்!
பூதகன் ஆதியர் போற்றநின் னுந்தியில்
ஆதர வைக்கொளும் ஐங்காரத் தெய்வமே. 284

மேருவிற் றுண்டு விழைந்திரந் தேனைஇப்
பாருல கோர்கள் பழித்திடச் செய்ததேன்?
காருல வாத்திருக் கண்டன்முன் னாப்பகர்
ஆரும் வணங்கிடும் ஐங்கரத் தெய்வமே. 285

என்னது கற்கிணற் றின்புனலா(று) உதித்(து)
ஒன்னலர் ஒல்கு மொருதினம் ஓதுவாய்!
பன்னகங் கட்டிய பண்டியப் பாதனை
அன்னவர் இன்றிய ஐங்கரத் தெய்வமே. 286

புற்புத மன்ன புணர்முலைப் பூவையர்
கற்புறழ் மேன்மையெக் காலமெற் கிவையோ?
சொற்புல வோரொடு தொண்டரும் இன்புறும்
அற்புத லீலைசெய் ஐங்கரத் தெய்வமே. 287

தேறிய சித்தர் சிகாமணி யென்னுமெய்ப்
பேறிரப் பேனுளம் பேதுறச் செய்வதேன்?
மாறில்சொற் கும்பனும் வாசவ னும்பெற
ஆறிரண் டன்றருள் ஐங்கரன் தெய்வமே. 288

நீறு புனைந்த நிமல யோகியர்க்(கு)
ஊறுசெய் வாரை ஒறுப்பவன் யாவனோ
வீறு குறக்கொடி வேட்கையிற் சிக்கிய
ஆறுமு கன்தொழும் ஐங்கரத் தெய்வமே. 289

கௌவையின் மூழ்கக் கலந்தடு தீவினைத்
தெவ்வையட் டின்புறச் சீரருள் நல்குவாய்!
இவ்வையத் தாடல்கள் எண்ணில செய்துயர்
ஔவையன் னார்உணர் ஐங்கரத் தெய்வமே. 290

## 30-ஆம் பத்து

மாலைநிறச் சிவனாரும்மைப் புயல்நேர்உமையும்
வாரணம்போ லுருவெய்தி மருவியஅக் கணமே
காலையிற்சூ ரியனேபோற் கவின்றருபோ தகமே!
கருணையளப் பரிதாய கணபதிநா யகமே!
மூலையிற்போ யழுமதத்தோர் கருமம்முடிக் கின்ற
முன்னிஉன்னை வணங்குமவர் முயன்றுதவிக் கின்றார்
வேலையுடைப் பாருலகிற் றொழில்புரிவார் தம்பால்
விக்கினந்தீர்த் தலும்செயலும் வேறெவர்கொண்
டனரே. 291

உன்னைவணங் குபுதுவக்கும் ஆலயமா திகளைமிக்(கு)
ஊறுபட்டுக் கிடக்கின்ற வூன்அரக்கு விற்பான்
பொன்னைநம்பி முயல்கடைகள் முதலியன எல்லாம்
பொருக்கெனவே முடிக்கின்ற புதுமைவிலை யாமால்

அன்னைமகிழ் வுறக்கரத்தில் அங்குசபா சங்கொண்(டு)
அருட்டாதை களிகூர அம்புலிக்கீற் றவிரும்
மின்னைநிகர் சடைக்கற்றை காட்டும்விநா யகனே!
விக்கினந்தீர்த் தலும்செயலும் வேறெவர்கொண்
டனரே. 292

மாதவரா தியர்க்குணவிட் டுபசரிக்கை குறித்(து)ஓர்
மடங்கட்டத் துவக்கியதால் மனமிகநொந் துள்ளேன்
காதகர்நிற் கொரு தேங்காய் தானும்உடை யாராய்க்
கவின்மாட கூடமிகக் கட்டிமுடிக் கின்றார்
போதகமாத் திருவருணைக் கோபுரத்தின் முகப்பிற்
பொலிந்துநின் றோர்உறுதி மொழிபுகன்றகண பதியே!
வேதமுதல் ஆகமங்கள் விளம்பியநின் தொழிலாம்
விக்கினம்தீர்ப் பதும் செயலும் வேறெவர்கொண்
டனரே. 293

முடைநிறைக்கும் வயிறுடையார் முன்னியவை யெல்லாம்
முடிந்துவரு கின்றனநின் முண்டகத்தாள் கருதித்
தடையறுநல் லுண்டிமிகப் படைத்திறைஞ்சு கின்றோர்
சலித்துழல்கின் றார்கள்இந்தச் சதிவிளைத்த தேனோ
கடையுகத்தின் கொடுமையெனில் அந்துனிலும் வலிதோ
கவுரியொடும் கந்தனொடும் ககனமிசை நாளும்
விடையுகைத்தோன் தேரினையும் முறித்தபெரி யோனே!
விக்கினம்தீர்ப் பதும்செயலும் வேறெவர்கொண்
டனரே. 294

கடம்பொழிவா ரணமுகத்தோர் கனல்வரையே போல்வாய்
கற்பகங்கள்மனம் நாணும்கரங் கள்ஐந்துள் ளானே!
படம்பொலிபாம் பரசுயிர்போம் ததியினும்சென் றாண்ட
பழங்கருணை முற்றுமிந்நாள் பாறியது கொல்லோ
நடம்புரிநின் தாள்கருதும் நான்வருந்த லாமோ?
நாயினைநின் பாருமிக நகைக்கின்றார் அந்தோ!
விடம்பெருபாற் கடற்பிறக்கச் செய்ததும்பொய்க் கதையோ
விக்கினம்தீர்ப் பதும்செயலும் வேறெவர்கொண்
டனரே. 295

ஆறுபுனை செஞ்சடைக்கா டாதியபல் சீரால்
ஆனேபோற் குலவுமெழில் ஆனைமுகத் தப்பா!
நீறுமிகப் புனைந்தடியார் பதத்துகளும் தலைமேல்
நிதத்தரித்தும் என்வினைப்பேய் நீங்கிலதேன் அந்தோ!

ஈறுசெய விடும்பொல்லான் நிமித்தம்வந்தான் போன்றன்(று)
எதிர்தோன்றி யிமையவரும் என்மனமும் அறிய
வீறுதுதிக் கைப்புனலாட் டியபயனு மின்றோ
விக்கினம்தீர்ப் பதும்செயலும் வேறெவர்கொண்
டனரே. 296

அளவில்பல் வானவரும் தானவரும் போற்ற
அருள்புரிவ தன்றிநிலத் தமர்தருமாந் தருக்குங்
களவிலனல் மிழற்றியருள் களிற்றுமுகத் தரசே!
கனகவரைத் துண்டிரந்த காலம்வஞ்ச விளைத்தாய்!
துளவணிந்தான் துயில்மலிந்த கொடுமைநினைத் தவன்கைத்
தொழில்விழையும் தமியேனுட் சோர்வடையா வண்ணம்
விளநகரில் தேற்றியதோர் மொழிசரத மானால்
விக்கினந்தீர்த் தலும்செயலும் வேறெவர் கொண்
டனரே. 297

தண்ணீர்வேண் டியமகவான் தனக்கும்முனிக் கோமான்
தனக்குமிரு நதியுதவும் தந்திமுகத் தலைவா!
கண்ணீர்மல் கிடக்கருங்கற் கினைறொன்றால் தமியேன்
கலங்கும்விதம் முழுதறிந்தும் கருணைபுரிந் திலையே
உண்ணீடும் பேரன்பால் உனைப்பூசை புரியா(து)
உஞற்றிடநான் துவக்கியதோ வூறுபடு வானேன்
வெண்ணறுன் கரத்தால்அன் றெனக்களிக்கி லாயோ
விக்கினந்தீர்த் தலும்செயலும் வேறெவர்கொண்
டனரே. 298

ஞாலமளித் திடும்பெரிய சக்கரமாற் கொருக்கால்
நல்கியகைக் கணபதியாம் ஞானமணி விளக்கே!
சீலமிலார் அரசாளக் கொலைபுலைதீர் நல்லோர்
திடுக்கமுறக் காண்பதனாற் றிருத்தியுனக் குளதோ?
மூலபர னெனத்தேறித் திருவாத்தி இலையால்
முன்புரிபூ சனைப்பயன்தான் முற்றுறவேண் டாமோ
வேலன்மணம் முடித்தவிதம் மொழிந்திடும்என் னளவில்
விக்கினந்தீர்த் தலும்செயலும் வேறெவர்கொண்
டனரே. 299

கோதில்மறைச் சுருக்கமொழி தருகிழவி கயிலைக்
குன்றிலுற விடுத்தருளுங் குஞ்சரமா முகவா!
வாதிடுவார்க் கறவுபுகழ் விழையுமெனை வீணா
மாழைமயக் காற்றளர்த்தி மறைந்திருக்கை முறையோ

போதினன்கைவிதி கொடிதேயெனினும் எனையாண்டுன்
பொன்னடியிற் புகுமாறு புரிந்தருள வேண்டும்
வீதிதொறும் நீயிருந்து பூசைகொண்டும் பலவாம்
விக்கினந்தீர்ப் பதும்செயலும் வேறெவர்கொண்
டனரே. 300

## 31-ஆம் பத்து

கமலையை யேநிகர் கன்னியர் மாலிடை கன்றியே
சமரச ஞானமி ழந்துத விப்பது தக்கதோ
அமரர்கு ழாமுதல் அன்பர்க ளுய்திற ம்ஆய்ந்துசெய்
விமலவி னோதம்வி டாதவி நாயக வேழமே. 301

தப்பித மாவன ஆயிர கோடிசெய் தன்மையேன்
ஒப்பில்சு காநுப வத்திடை தோய்தலும் உள்ளதோ
பொய்ப்பிட காகமர் சாரணர் ஆதியர் போர்வெல்சீர்
விப்பிரர் வேதமு தற்சொல்வி நாயக வேழமே. 302

ஐயமு ருஅநு பூதிய ளித்திலை ஆதலால்
மையல்ம னத்தினர் பாலுமி ரந்து வருந்திலேன்
தையல்ஒ ருத்தியி டத்துற வெள்விடை தன்னிலூர்
மெய்யரு ளாளன் அளித்த விநாயக வேழமே. 303

பொன்திரள் பெற்றவ ரேயுயர் வெய்துமிப் பூமியிற்
கன்றிவ ருந்துமெ னக்கரு ளக்கரு தாய்கொலோ
தின்றிட வேண்டுவ நல்குநின் றார்வினை தீர்த்துளாய்
வென்றிகொள் அங்குச பாசவி நாயக வேழமே. 304

பஞ்சைம னத்தினர் தாமுவப்புறு பாரில்என்
நெஞ்சையி வண்ணம்மெ லிந்திடச் செய்தலும் நீதியோ
அஞ்சைய டக்கும்அ ருந்தவ ரேயறிந் தறைவதாம்
விஞ்சைமு தற்பொருள் ஆனவி நாயக வேழமே. 305

கூறுத மிழ்த்துதி யன்றிமற் றோர்தொழிற் கொண்டில்லேன்
தேறும திப்பெரி யோரொடு சேர்ந்துயச் செய்வையோ
நாறும லர்க்குழல் வல்லவை இன்புற நாளுமே
வீறுந டம்புரி கின்றவி நாயக வேழமே. 306

செம்புக ர்ஆனைமாதிய தோன்றஎன் சிந்தைவந்(து)
அம்புது திக்கையி னுற்பொலிந் தாட்டல்பொ யாகுமோ
நம்புமும் பர்க்கிதம் நாடி யார் கொம்பத னால்அநாள்
வெம்புக யாசுரந் கொன்றவி நாயக வேழமே. 307

மைந்நகப் பாறையிற் கூபம்வெட்டித்தளர் வம்பனேன்
செந்நல மெய்தவொர் ஆறத னின்றெழச் செய்குவாய்!
முந்நவை தீர்ந்தவர் கோனுடன் இந்திரன் முன்உய்வான்
மெய்ந்நதி யோரிரண் டுந்தவி நாயக வேழமே. 308

திக்கினர் முற்றறி யக்குக வேள்குறச் சிறுமியால்
மிக்கிடை யாதருள் வீறுசொல் வேணைக்கை விட்டிடேல்
சுக்கிரன் சொற்றுறி யாதுபொன் அன்புகல் சொற்கொள்வார்
விக்கின முற்றுந் தவிர்க்கும் விநாயக வேழமே. 309

கள்ளிணர் சிந்திநிற் பூசைசெய் யக்கொளும் காதலும்
தெள்ளிதில் முற்றஅ ளித்திலை என்றருள் செய்வையோ
உள்ளிய வண்ணமொர் பாடலிற் செய்திறத் தொருத்தியை
வெள்ளிவ ரைத்தலை உய்த்தவி நாயக வேழமே. 310

## 32-ஆம் பத்து

ஈமநடமா டியபெருமான்
　　எழிற்றேர் முறித்தும் இசைகொண்டாய்!
தேமன்முகத்ததோர் களிற்றுருவாய்ச்
　　சிறியேன் மனத்துள் திகழ்ந்தனையால்
நாம நெடுநீர்ப் பார்விரும்பும்
　　நலஞ்செய் தலது நான் மகிழேன்
காமர் பொலியும் நின்திருக்கட்
　　கருணைத் துளியொன் றருள்வாயே. 311

கிடைக்கு மவற்றைத் தடுத்திடலும்
　　கிடையா தவற்றைக் கொடுத்திடலும்
உடைக்குஞ் சரமா முகத்திறைவா!
　　உன்கைத் திருநீ றணிபெருமை
படைக்கும் தமியேன் இவ்வாறு
　　பலநா ளுழலப் படுங்கொல்லோ
கடைக்கண் வழியே நனிபொழியும்
　　கருணைத் துளியொன் றருள்வாயே. 312

புலிப்பே ருரியொன் றணிந்தானும்
　　போற்றும் தலைமைப் புகழ்ப்பிள்ளாய்!
வலிப்பேர் யாக்கைக் கயமாப்பல்
　　வதளி வரலும் வம்பாமோ
சலிப்பே விளைத்துத் தவம்குலைத்துத்
　　தமிழும் கசக்கும் சதிசெயும்பாழ்ங்
கலிப்பேய்! நடுங்கி யோடஇன்னே
　　கருணைத் துளியொன் றருள்வாயே. 313

குழல்இன் னிசைநேர் மொழிவலவை
    கூடக் குலவும் குளிர்சேவை
பழகு மனத்தார் தமையாதும்
    பழிவந் தணுகாப் படிசெய்வாய்!
அழலின் வடிவாம் மலைச்சாரல்
    அணிப்பொற் சிகரி யதன்முகப்பிற்
கழறு மொழிசத் தியமானாற்
    கருணைத் துளியொன் றருள்வாயே. 314

சில முடையார் பலர்முதல்
    தினம்போற் றிடுமோர் சிந்துரமா
மூல முதலே! நீயொருக்கால்
    மொழிந்த மொழியே முன்னுகின்றேன்
ஆல மௌச்சீற் றெழுந்துருமும்
    ஆகுப் பரியில் அவிர்ந்தென்னைக்
கால பயமும் அணுகாதுன்
    கருணைத் துளியொன் றருள்வாயே. 315

செங்கைத் திரள்கூப் பிடச்சலியாத்
    தேவர்க் கிகலாந் தீயோன்மேற்
அங்கைத் தவள மருப்பெறிசீர்
    அறைவேன் அலமந் திடலாமோ
மங்கைக் கொருபங் களித்தபிரான்
    மகவாய் அவன்போல் மதியணியும்
கங்கைச் சடிலக் களிறே! நின்
    கருணைத் துளியொன் றருள்வாயே. 316

மிக்கார் பதப்பூச் சொரிமகர
    மிலைச்சுந் தமியேன் விளம்புதுதி
செக்கார் படைக்கும் உண்டியினும்
    தீதென் றிகழ்ந்தாற் போலிருந்தாய்:
உக்கா ரியும்மோ தகமலையும்
    ஒக்கும் பிறவும் ஒருங்கருந்திக்
கைக்கா முதன்மைக் கணபதிநின்
    கருணைத் துளியொன் றருள்வாயே. 317

எண்மூன் றிகல்தீர் குறுமுனிக்கும்
    இந்தி ரனுக்கும் இரங்கியநீ
பண்மூன் றிசைக்கும் எனைநெடுநாள்
    பாறைக் கிணற்றாற் படுத்துவதேன்?

பெண்மூன் றுடையாய் யாவரினும்
பெரியாய்! தொழுவார் பிழையொழிக்கும்
கண்மூன் றுடைப்பொன் மலைபோல்வாய்
கருணைத் துளியொன் றருள்வாயே. 318

பண்டு களக வரையிடத்தோர்
பருந்துன் டுதவென் றிரந்ததற்கு
நண்டும் அருந்தும் இழிகுலத்து
நரர்வாய் வசைதந் ததுநலமோ
விண்டு புகழும் விதிர்வேலால்
வேடக் கொடியாள் மிகவருந்தல்
கண்டும் வலிதிற் புணர்வித்தாய்!
கருணைத் துளியொன் றருள்வாயே. 319

மயிலைப் பொருவும் மடநல்லார்
வாஞ்சை முதல்மூவே டணையாம்
வெயிலைத் தணந்துன் பதநிழற்பால்
விடுப்ப தரிதாம் எனலாமோ
சயிலைக் கிரியார் தம்மெதிர்போய்த்
தாள்நீட் டிடவோர் கிழவிதனைக்
கயிலைக் கிரியின் மிசைவிடுத்தாய்!
கருணைத் துளியொன் றருள்வாயே. 320

## 33-ஆம் பத்து

அக்கொடி எம்பிறைக் கோடும் அணிமார்பத் தாடுபுணர்
மைக்கொடி கண்களி கூரவந் தாடும் மழகளிறே!
இக்கொடிமை யாருலகும் சீர்பெறச்சிந் தித்துளநான்
இக்கொடிய கலிப்புண்பா டினிச்சகிக்க முடியாதே. 321

தானநெடுங் களிறாகித் தனைநினைவார் மனத்தேகி
ஞானமணி விளக்கேற்றும் நலம்பொலிவி நாயகனே!
ஆனனந்தம் வதைத்துண்டங் டகங்கரிக்க அஞ்சாத
ஈனர்கொடுங் கோன்இகழ்ச்சி இனிச்சகிக்க முடியாதே. 322

பன்னாகத் தாலிறுக்கும் பருவயிற்றெம் பெருமானே!
உன்னாணை உலகுயற்காம் உதவிசெயல் விழைகின்றேன்
பொன்னாசை கொளும்பேயாற் புலரவிட்டுப் பார்க்கின்றாய்!
என்னாவிப் பெருந்துயரம் இனிச்சகிக்க முடியாதே. 323

அரங்கிளர்கண் வல்லவையும் ஆன்றசித்தி புத்தியுமாம்
தரங்கெழுமுச் சக்திபுணர் தந்திமுகத் தம்மானே!
உரங்கிளத்தும் ஒன்னலர்க்கும் உள்ளுடைகின் றேன்ஒருசற்(று)
இரங்கிரங்கென் வினைப் போகம் இனிச்சகிக்க முடியாதே. 324

முக்கணுடைக் கயமுகத்து முன்னவநீ யங்கொருக்கால்
அக்கனவில் மனங்குளிர அறைந்தமொழி மறப்பாயோ
மக்களினம் போல்விருகர் வசைக்கனற்கு டுறுகின்றேன்
இக்கணம்வந் தெனைக்கா!கா! இனிச்சகிக்க முடியாதே. 325

வள்ளலருள் மகவாயும் வயிறாரப் படைக்கின்றார்
உள்ளம்விழை வனசெய்தே ஊர்ச்சந்தி தோறுறைவாய்!
கள்ளமிலா அருள்எனக்கோர் கடுகளவெள் ளளவேனும்
எள்ளலறத் தந்திலைஅந் தினிச்சகிக்க முடியாதே. 326

மட்டின்மதத் தூற்றெடுக்கும் வாரணமாய்த் துதிக்கைந்நீர்
கொட்டியென்னை முழுக்காட்டும் குளிர்கருணைப் பயனின்றோ
குட்டியசென் னியர்வேட்கை கொடுத்தருளும் கோமானே!
எட்டிநிகர் தீவினைப்பண்(பு) இனிச்சகிக்க முடியாதே. 327

தளப்பதுமன் பெறுமுதன்மைத் தமிழ்முனியும் மகவானும்
கொளப்படிமீ திருந்திமுன் கொடுத்தருள்செங் குஞ்சரமே!
கிளப்பருபல் கதைப்பாறைக் கிணறொன்றால் கிடைத்தோங்கும்
இளப்பம்அடி யேன்உணர்வால் இனிச்சகிக்க முடியாதே. 328

பானலங்கட் குறப்பேதை படுத்தியபாட் டயர்வேலன்
ஏனலில்இன் புறக்காண்பான் இபக்களிறாச் செலுமெந்தாய்!
வானவரும் புகழ்பேறே வாஞ்சித்த மனச்சோகம்
யானறிந்த யூகத்தால் இனிச்சகிக்க முடியாதே. 329

ஔவைக்காக் கயிலைவரை யன்றுநீள் கரமடியேன்
கௌவைத்தீங் கறமேருக் கனகமொர்துண் டுதவாதோ
செவ்வைச்சீர்க் கணபதியே! திருநெடுமால் மணிகொண்டாய்
இவ்வையத் தநியாயம் இனிச் சகிக்க முடியாதே. 330

## 34ஆம் பத்து

அங்கை யாற்றிரு நீறு நீ யெனக்கினி தணிந்தும்
சங்கை யின்றி நான் ஊர்தொறும் இரப்பது தகுமோ?
மங்கை பாகனார் முதற்றவப் பயனென வந்து
கங்கை சூடிய சடைமுடிக் கணபதிக் களிறே. 331

உடுக்கை நேரிடை யார்மயற் கடலிடை யுழலக்
கெடுக்கை வேளெனின் முழுதும்நின் செயல் எனில் கிறியோ
நடுக்கை நீரத னால்ஒருக் கால்எனை நனைத்தாய்:
கடுக்கை ஆத்தியோ டணிதரு சென்னியங் களிறே. 332

அவத்தில் நாட்கழி யாதுன தருள்பெற முயலும்
தவத்தி னும் தடை விளைப்பது முறைகொலோ: சாற்றாய்!
சிவத்தின் அங்குர முதன்மைநீ யெனத் தெளி வாரைக்
கவத்தி னுல் இறவா தருள் ஐங்கரக் களிறே. 333

பிட்டு மோதக மாதிய பெருக்கம்நின் முன்னர்
இட்டு நான்வழி படத்தகு பேறும்ச கிலையே
கொட்டு மாமதத் தருவிழுன் றவிர்துவர்க் குன்றே!
கட்டு மாசுணக் கச்சையந் திருவரைக் களிறே. 334

செயலெ லாம் செய வல்லை என் றிடு மொழி திருட்டோ
வயமி கும்கயா சுரனிலும் என்கலி வலிதோ
புயல்கு லாம்குழற் சித்தியும் புத்தியும் பொரநேர்
கயலு றழ்ந்தகண் வலவை யும்புணர்ந்தசெங் களிறே. 335

படியில் மானிடர் பால்நனி யிரந்திடப் படுத்தும்
மிடியின் வேரறக் களைந்தெனைப் புரிந்திட விழைவாய்!
அடியர் கைத்திரு ஆத்தியும் வில்வமும் அறுகும்
கடிகொள் கொன்றையும் தும்பையும் கமழ் களிறே. 336

இன்ற மிழ்ப் பெருங் கடலினும் உயர்ந்ததென் றேயோ
பொன்ற ராதெனைப் புழுக்குகின் றுய் இதோர் புகழோ
குன்றம் நேர் அன லாசுரன் றன்னையுட் கொண்டும்
கன்ற லின்றிவா னவர் உயப் புரந்தவான் களிறே. 337

குவிந்த நெஞ்சமில் கோதனேன் தொட்டகற் கூபம்
அவிர்ந்த மெய்ப்புகழ் பெறும்படி ஒருநதி யருள்வாய்:
நவின்ற இந்திரன் குறுமுனி யெனுமவர் நயப்பக்
கவின்கொள் பொன்னியும் பொருநையும் உதவிய களிறே. 338

இந்த மாநிலத் திரந்தபே றிலாய் என்னில்
அந்த வானகத் தருங்கதி யளிக்கை மெய் யாமோ
பைந்தண் சோலை சூழ் எனலம் புனத்தினிற் பரவும்
கந்த னுய்வுறக் குறமகட் புணர்த்தருட் களிறே. 339

புவியின் ஊழ்வழி பொன்றினர் சிலர் எழப் புரியும்
பவிசும் வேண்டுபே ராசை யெற் களித்ததார் பகராய்!
அவியு மோர் பனைத்துண்டுமுப் பழந்தர அன்றோர்
கவிசொல் பாட்டியைக் கயிலை யெற் பினில் விடும் களிறே. 340

## 35 ஆம் பத்து

தாமத மாதிக் குணநீங்கும் சத்துச் சித் தா னந்த மெனும்
மாமத வேழத் துருவாகி வந்தென்ம னத்து டவிர்வானே:
தேடிரு செஞ்சொற் கவிதைகளாற் சிறியேன் நின்பாற்
றினமேற்கும்
ஏமவ ரைத் துண் டுதவுதியேல் இனிமேற் பிறர்பால்
இரவேனே. 341

நன்கவிர் செம்பொற் புகர்முகமும் நான்கு தோளும் கரம்ஐந்தும்
இன்கரு ணைக்கண் ணொருமூன்றும் இலக ஒருக்கால் எனுள்
வந்தாய்!
வன்கணர் பாலும் பலகாற்போய் வாழ்த்துரை கூறியும்
மாழ்கவிடும்
என்கலி நோய்வேர் கெல்வாயேல் இனிமேற் பிறர்பால்
இரவேனே 342

சித்தர்கு ழாமும் தேவர்களும் திரைசூழ் புவியும் சீரியரும்
பத்தர்க ளாகி முதலேத்தப் பலவிக் கினமும் தீர்ப்பானே!
அத்த மு தற்சொல் பொருளெல்லாம் அடியேன் பலருக்
கிட அருளில்
இத்தனை நாளும் இரந்தாற்போல் இனிமேற் பிறர்பால்
இரவேனே. 343

மூங்கிற் பசுமென் முளைபோலும் மொய்ம் பரா சக்தி
மூவரையும்
தாங்கிக் கொண்டே நடமாடும் தந்தி முகத்தோர்
தற்பரனே!
காங்கிற் பொலியும்: பாவவினைக் கடல்வற் றிடுமா
றருள்வாயேல்
ஏங்கிச் சிறிதும் நாணின்றி இனிமேற் பிறர்பால் இரவேனே. 344

காதால் அதனில் வருங்காலாற் கனலா தியவரக்
காண்பனமுற்று
ஈதா ரகம்நீ யென்றுணரார் எனநான் இடையச்
செயலாமோ
கோதா வனமுற் றறமோதும் குணபூ தரம்நேர் குஞ்சரமே
ஏதா யினும்ஓர் சித்தருள்வாய் இனிமேற் பிறர்பால்
இரவேனே. 345

மூர்த்தித் தொகையின் முதலாகி முச்சந் திகள்தோ
றும்குலவிக்
கீர்த்தித் திரள்கூ றிடும்நாவார் கேட்கின் றவை முற்
றருள் வானே
ஆர்த்தித் தகையில் பொல்லான்என் றகலத் தள்ளாது
ஆரருளால்
ஈர்த்திட் டடிமைத் திறமீந்தால் இனிமேற் பிறர்பால்
இரவேனே 346

வாழைக் கனிமாங் கனிதேங்காய் வருக்கைக் கனியா
திகள்வைக்கும்
பேழைக் கினையா கியபண்டிப் பெரியாய் பிறிதர்க் கரியானே!
கோழைக் குணலோ பிகள்பாலும் குறுகிக் குறுகிக்
குறைகூறும்
ஏழைத் தன்மை களைவாயேல் இனிமேற் பிறர்பால்
இரவேனே 347

கும்ப முனிக்கும் மகவாற்கும் குளிர்நீ ரீந்தென்
கூபமதா (டு)
உம்பர் வியக்கத் தகுநன்னீர் உதவக் கருதும் ஒருகளிறே!
வெம்படி யேனுட் களிகூர மெய்யரு ளால்நீ விண்டுள
சொல்
இம்பரும் அறியச் செய்வாயேல் இனிமேற் பிறர்பால்
இரவேனே. 348

மின்னைப் போலும் இடையாளாம் வேடிச் சியின்மால்
மிகுமுருகன்
தன்னைக் காக்கும் படியேகும் தகைபா டுநருக்
கெளியோனே
பொன்னைப் பொருளாம் எனநாடிப் புலர்வார் குழுவின்
தில்லைபோலும்
என்னைத்தன்னாள் ஆக்குவையேல் இனிமேற் பிறர்பால்
இரவேனே. 349

கொவ்வைக் கனிவாய் உமைபங்கன் கும்பிட் டேத்தாக்
குறைநாடிக்
கௌவைப் படல்செய் தருள்கூரும் கனமெய்ப் புகழ்தோய்
கணபதியே
ஔவைக் குதவும் திருவருளே அடியேற் கருளத்
துணிவாயேல்
இவ்வை யத்துன் றன்ஆணை இனிமேற் பிறர்பால்
இரவேனே. 350

## 36—ஆம்பத்து

மெய்ப்பு கழ்க்கவுரி கொண்கன் அன்றுசெல
விட்ட தேரினைமு றித்தசீர்
செப்பு வார்வினைக ளைந்து விடுகவு
சிந்து ரானைவி நாயகா!
தப்பு நூறுபுரி தல்[illegible] யேன்உயர்
தவத்தி னோரையும் இகழ்ந்துளேன்
எய்ப்பும் நாணமும் அடைந்திடா வணம்
என்னை யாண்டருள எண்ணிடே. 351

கந்த மும்மதம் இரைந்து வீழ்தரு
கனற்கி ரிக்குநிக ராவதோர்
தந்த வேழவுரு வாகிவந்தசைவில்
சமச ரானுபவம் நல்கினாய்!
மந்த னாடரவி ரட்டையோ டெனை
வளைந்து நின்று (உ) தவ வளர்வதாம்
இந்த வெங்கலியின் மாய்வுறாதபடி
என்னை யாண்டருள எண்ணிடே. 352

சாகை யற்றசிவ யோக சித்தருணர்
தந்தி யொன்றுளதெ னச்சொல்கால்
ஓகை மிக்கவர்க ளாவில் அங்ஙனம்
உலாவு சீர்குலவும் ஒருவனே!
பாகை ஒத்ததமிழ் பாடி விற்றும்இழி
பைம்பொன் வாதைபடு பாவமாய்த் (து)
ஈகை யிற்பெரியன் என்ற பேருதவி
என்னை யாண்டருள எண்ணிடே. 353

முக்கண் வேழமுக மாதி யாயகவின்
முற்றும் நன்கிலக முன்னிடேற்(கு)
அக்க னாவினில்வெ ளிறணிந்துமக
வாம்எ னக்கொள்பெரி யப்பனே!
திக்க னைத்திலுள மாத ரார்கலவி
சிந்தை செய்தயர்வு சேருமா(று)
இக்கண் வந்தமர் விளைத்திடாமலினி(து)
என்னை யாண்டருள எண்ணிடே. 354

மாக நாடர்பெரு வாழ்வும் நாய்கலுழும்
மலமெ னக்கருதும் மதியிலேன்
சோக மற்றபெரி யோர்கள் மீதுமிகு
தோட மேதினமும் நாடுவேன்

சேக ரத்தில்மதி யம்பு னைந்துலவு
 செக்கர் வேழம்நிகர் தெய்வமே!
ஏக போகஅனு பூதி நல்கிவலி(து)
 என்னை யாண்டருள எண்ணிடே. 355

பன்ன கத்திறைஇ றுக்கு மோர்பெரிய
 பண்டி யிற்பல்பல் கோடியாம்
அன்ன வாகனர்மு தற்பல் வானவர்
 அமைந்து வாழவளர் ஆனையே!
பொன்ன தேபரம்ன னத்து ணிந்துமகிழ்
 புல்லர் தாழும்வசை சொல்லகண்டு
இன்ன மும்துயர் அருந்தி டாமல்எளி(து)
 என்னை யாண்டருள எண்ணிடே. 356

சத்த கோடிமறை மந்தி ரங்கள்தரு
 தார கத்தினிடை யாடுவாய்!
மத்த கக்கரிமு கத்து வானவ!
 மயேசர் பற்பலர் வரோதயா!
சித்தர் முற்படுத வத்தி னோர்கள்மகிழ்
 சீல மாயிரம்இ யற்றலால்
இத்த ரைக்கண் நெடு மாலெ னத்திகழ
 என்னை யாண்டருள எண்ணிடே. 357

முன்கி ரீசர்தமை யன்னன் என்னவரு
 முனிவர் கோனும்மக வானுமார்
வன்கி லேசமற நதியி ரண்டுதவும்
 வார ணக்கைமுதல் வள்ளலே!
நின்கி ளர்ச்சிபல போதும் நெஞ்சிடை
 நிலாவி டப்பெறும்நி சம்பொயா(து)
என்கி ணற்றிடையொர் ஆறு தித்திடவும்
 என்னை யாண்டருள எண்ணிடே. 358

காம வேள்சமரி னால்இ ளைத்துருகு
 கந்த வேள்மகிழ ஏனலிற்
போம தாசலம்எனச்சொல் வார்வினை
 பொடித்து வேணதருள் புங்கவா!
தீம னம்சிதடர் நிந்தை யோடுமிடி
 தீர ஐந்திலொரு திண்கையால்
ஏம வெற்பிலொரு துண்டு பேர்த்துதவி
 என்னை யாண்டருள எண்ணிடே. 359

கயலெ ளக்குலவும் விழிகொள் வல்லவை
களிக்கு மாடல்புரி கடவுள்நின்
செயலு மென்கலியி னுக்கி ளைக்கின்மறை
செப்பு சொற்பெருமை தப்புமால்!
முயல றக்குலவு வான்ம திக்குழவி
முதுபு விக்கணஉல விடுதல்போல்
இயல்வ விக்கிழவி புகழ்வி ளக்கமுற
என்னை யாண்டருள எண்ணிடே. 360

## 37-ஆம் பத்து

பெருமா ரிளனக் கொடைநல் கிடுகைப்
பேறில் லவர்பி டுறுநாள் உலகத்(து)
ஒருமா னிடனா கியிரந் துமெலிந்(து)
உழல்என் னுள்உணர்த் தியதென் றருள்வாய்!
கருமா லொருமா சுணமா னதுயர்க்
கடனீங் கியகா ரணமும் கறைதீர்
அருமா மறைமு லமும்நன் குணர்மெய்
அடியார் தொழும்ஆ னைமுகத் தரசே. 361

மிடியா கியவெவ் வினைவா தனைபோய்
விளையா டல்விரும் பிமெலிந் திடும்நான்
மடியா முனம்வல் லவைதன் னொடுகார்
வரைமா னுமொர்ஆ குவில்வந் தருள்வாய்!
கடியார் கமலா தனன்நான் மறையின்
கண்ணோர் குடிலைப் பொறியைக் கழியா
அடியார் அடியார்க் கடிமைத் தொழில்செய்
தவருள் அவிர்ஆ னைமுகத்தரசே. 362

சண்டா ளர்கருங் குடைநீ ழலின் வாய்த்
தருமத் தொடுசத் தியமும் தளர்தல்
கண்டா விதுடிப் பதறிந் திலையோ
கருணைப் பொலிவிக் கணமே அருள்வாய்!
வண்டா டியமும் மதநீர் மிகையால்
மலமூன் றுமொழித் திடும்வண் புகழ்தோய்ந்(து)
அண்டார் புரமூன் றுமெரித் தவர்பேர்
அருளால் அவிளர்ஆனைமுகத் தரசே. 363

காதித் தினும்ஈ னமொழிந் துலகோர்
கருணைத் திறமே யுறல்கண் ணுமெனோர்
மேதிக் கொடியோன் வரவும் செய்திடேல்
விதிதன் கையில்மே வவும்விட் டுவிடேல்

சாதிச் சளமும் சமயத் தொடர்பும்
தவசா தனர்தம் உறவால் ஒழிவார்
ஆதிப் பொருள்தா னும்அநா தியும்என்(று)
அறையத் திகழ்ஆ னைமுகத் தரசே. 364

செந்தா மரைமா துவெறுத் திடலிற்
சிறியேன் மிகுதி மைபடைத் துமிநாள்
அந்தா ரணிமங் கையமுந் துயர்தீர்
வதுநாட அசைப் பவர்ஆர் பகர்வாய்!
தந்தா வளமொன் றை,முழங் குபெருச்
சாளிப் பரியா கவருந் தகைசான்(று)
ஐந்தா கியபைந் தருவொல் குறவென்(று)
அவிர்திண் கைகொள் ஆனை முகத் தரசே 365

வெறு வா யினை மென் றிடல்போ லடியேன்
மெலிதி மை விலக் கிவியன் தமிழ் தேர்
குறுமா முனியா திய தொண் டருடன்
கூடப் புரி கொற் றமுனைக் கிலையோ?
செறுவீ வெளி(று) மண் ஆதியவை
தீட்டும் தகைதீர் வரு சீரியாம்
அறு பே த மதத் தரு முன் பணி மாண்(பு)
அமையும் தனியா னை முகத் தரசே. 366

சவலைப் படு நெஞ் சையுன் அம் புய மென்
சரணத் திடை தங் கவையா துபெருங்
கவலைக் கடலூடு விடுக் குமெனுட்
களிவாரி கவின் தர என் றருள் வாய்!
சுவலிற் றலைமீ துபல்பூ தகணச்
சுமையா வருதோ சையெளுண் டைபருப்பு
அவல்சக் கரைமுக் கனியொப் பனமிக்(கு)
அயிலும் தகையா னைமுகத் தரசே. 367

மைந்நா கமலைக் கடல்புக் கது போன்
மண்ணிற் புகுமால் வரையுண் டெனவே
இந்நா ளுணர்கல் லிடைசெய் கிணறொன்(று)
ஈந்தாய் நதியங் கெழுமா றருள்வாய்!
பைந் நா க மணிந் தவனோர் முனியும்
பல தே வர் பார் விறையும் பணியும்
அந்நா ளிருமா நதிநல் கிய சீர்
அறைவார் உணரா னை முகத் தரசே. 368

கயிலா ய வரைக் கிணை யா மொரு வெண்
களிறும் பொருகா ளையும்ஏ றியவன்
பயில்பா வலருக்கு கருள்பல் பரிசும்
படிறே ஆறுமா றுபரிந் தருள்வாய்!
வெயிலாள் பவன்உந் தியின்மே விடநீள்
மேனித் திறம்வெஃ கிவழுத் தியநாள்
அயில்வே ளையொர்பெண் வலிதிற் புணர்தற்(கு)
ஆமா றுசெய்ஆ னைமுகத் தரசே. 369

கொவ்வைக் கனியன் னஇதழ்ச் சுவையே
குறியென் றுபல்கோ தையர்மால் கொளும்நான்
செவ்வைத் துதிபா டினும்நின் உளமோர்
சிறிதும் களியா துசினஞ் செயுமோ
சௌவைப் படுவா ரிடர்யா வையும்அக்
கணம்நீத் தருள்கண் ணருள்மெச் சினளாம்
ஔவைக் கொருகைந் நொடியிற்கதிதந்(து)
அருள்மெய்ப் புகழ்ஆ னைமுகத் தரசே. 370

## 38-ஆம் பத்து

கற்று ளாரும்மற் றனையரும் கல்வியில்
கடையரும் முதற்போற்றச்
சிற்று ருப்பெறும் சாணியுண் டையினும்வாழ்
திருவருட் பெருந்தேவே!
செற்று ணாநலம் உலகமுற் றுறும்படி
செயல்விழைந் தயர்கின்றேன்
சற்று நின்திருக் கண்களால் நாடியித்
தடையறுத் தாள்வாயே. 371

கொங்க றாமலர்க் கொன்றையும் தும்பையும்
குளிர்மதி யம்சூடிச்
சங்க வார்குழைத் தாதையிற் றிகழ்தரு
தந்திமா முகத்தானே!
அங்கண் மாநிலத் து ஆன்இனமின்புறற்கு
ஆம்வகை செயல்வேட்டேன்
தங்கம் வெள்ளிசெம் பால் மிகச் சளப்படும்
தடையறுத் தாள்வாயே 372

இவள வென் றெவ ரானும் நன் களப் பரும்
    ஈடு நீ டுற வாய்ந்து
கவள வாரண முகத் தொடு குலவிய
    கணபதிப் பெருமானே!
சவள மேந்து கை வீரரும் நடுங்குறத்
    தவமுயன் றிடும் என் பால்
நவள வான் மதிக் குடைமதன் சமர் செயும்
    தடையறுத் தாள்வாயே. 373

பிறை யொன் றங்கையின் முகத்தினிற் சென்னியிற்
    பிறங்கிட நடமாடி
நிறையும் தாரகப் பொருளென உணர்பவர்
    நெஞ்சு தோ றமர் வானே!
மறையும் ஆகமப் பகுதியும் ஒலிட
    வாஞ்சை கொண் டுள நாயேன்
தறைமின் கோவென அலறொலி வினவி நோம்
    தடையறுத் தாள் வாயே. 374

கஞ்ச நாள் மலர்ப் பிரமன் நான் மறை முதற்
    கணக்கில் நூற் றிரள் யாவும்
கெஞ்ச வூர்ப் பல சந்தி தோ றமர் தரு
    கிளரொளிக் களிறே! நீ
அஞ்சல் என்ற சொற் பயன் தரா விதத்தினால்
    அலமரத் தகும் கொல்லோ
சஞ்சலப் பெரும் பயிரின் வித் துறழ் வினைத்
    தடையறுத் தாள் வாயே. 375

சித்தி புத்தி வல் லவையெனு மூவரும்
    தினந் தினங் களிகூரப்
பத்தி யுள்ளவர் விருப் பெலாம் முடித்தருள்
    பவள மால் களிறே! என்
தத்தி ரந் தெரிந் த னுத்துணை யாயினும்
    தயை செயா து றலாமோ?
சத்தி யத் தொடு தருமம் இல் லவர் குடைத்
    தடையறுத் தாள் வாயே. 376

துண்ட ரீகனாம் கனலுடற் ற குவனைத்
    துய்த்து விண் ணவர் தாமும்
புண்ட ரீகனும் மாயனும் வாழ்வுறப்
    புரிந்த போ தக மூர்த்தி!

உண்டல் யாவும் நின் சந்நிதி முகப்பினில்
உறவமைத் திறைஞ் சேனா?
சண்ட வேகமா மறலிநா னுறுங் கலித்
தடையறுத் தாள் வாயே. 377

அமிழ்தை நேர்சுவைத் தமிழ்க்குறு முனிவனும்
அண்டர் போற் றிய வேந்தும்
குமில மெய்ப்புகழ் பெற இரண் டாறருள்
குஞ்சரா னைக் கோவே!
திமிர ஆணவக் கசடுறு மனத் தினர்
திரள் முழு தட வேண்டும்
தமிய னேன் தொடும் கிணற்றிலோர் ஆமெறழத்
தடையறுத் தாள் வாயே. 378

குகனன்றோர் குறக்கொடி தருமயலிடை
குழைந்து கெஞ்சிய தோர்ந்து
திகழ் பொன் மேருவே யெனத்தகு புகர்முகச்
சிந்துரக் களிறானாய்!
மகர நீருடைப் புவித்தலை மாலிடர்
வசை மிகத் தள ராமற்
சகல போகமும் விரும்பிய படி பெறத்
தடையறுத் தாள் வாயே. 379

செருவ மிக்க பா வலர்க் கிடி பேறெனக்
கிளத்து சொற் கிழ யா தோர்
பருவ தத்தலைக் கதி பெற அருளிய
பருந் துதிக் கையா னே!
தருவ லாரி மெச் சிடத் தரும் பெரும் புகழ்
தரையில் நாட் டிடல் வேட்டேன்
சருவ சித்தியும் முத்தியும் இக்கணம்
தடையறுத் தாள் வாயே. 380

## 39-ஆம் பத்து

தொன்னிலைச் சத் துவகுண மோர் சிறிது மிலேன்
ஆனாலும் தொடர்ந்தாட் கொண்டு
நின்னிரு தாள் மலர் சூட்டி நினைப்பு மறப்
பறுஞான நெறியிற் சேர்ப்பாய்!
கன்னியெனும் தகைநீங்கிக் கவுரி முலைத்
துணை தீம்பால் கலுழத் தோன்றிப்
பன்னிரண்டு மதத்தோறும் முதற்றொழ வீற்
றிருந்தகண பதிப்பி ரானே. 381

தகட்டு நெடும் தலைவேற்கைச் சண்முகண் சொற்
கருதிமிகத் தயங்கு மென்னைச்
சகட்டவுணனை மாய வென்ற தாளுடையான்
எனவாழத் தாங்கு வாயோ
அகட்டு (உ)ரகாதி பற்பிணித்து வல்லவைசத்
தியையிடபால் அணியும் ஆற்றற்
பகட்டுமுகப் பவளமலை அனைய வடி
வுடைய கண பதிப்பி ரானே. 382

வினைக்கு மிகப் பயந்துனது திருவருட்பேர்
ஆண்மை பெற விரும்பும் என்பாற்
கனைக்குமொலிக் காரெருமைக் கடாவுகைப்போன்
சமர் செயவும் கண்டிராதே
தினைக்கதிராற் பின்னிய ம தாணியணி
வள்ளி தன்கைச் சேயென் றொப்பிப்
பனைக்கை நுனி யாற்றிருவெண் ணீ றெனக்கன்
றணிந்தகண பதிப்பி ரானே. 383

என் மனத்தின் அசைவும் நின்பேர் அருட் செயலே
எனத் தெளிவித் திருந்தும் ஈனப்
பொன்மயக்க முடையார் போற் புலர விட்டாய்
இன்னா மென்னாற் பொறுக்கப் போமோ
கன்மமுபா சனை ஞானம் எனும் மூன்றின்
தொகை வகையே கழறா நிற்கும்
பன்மறைக்கும் முதலாய தாரகத்தில்
அமர்ந்தகண பதிப்பி ரானே. 384

கஞ்சன் எழு திய விதி தீ தாயினும் நின்
கழற்றுணையாற் கடிது மாற்றி
அஞ்சலென்றன் றுரைத்த மொழிப் பயன் விளக்கி
என்னையினி(து) ஆள வேண்டும்
குஞ்சரமா முக முதற்பல் கோலமும் நெஞ்
சாற்கு றித்துக் கூவு வார்க்குப்
பஞ்சதருக் களும் நாணும் பரிசருள்ஐங்
கரங்கொள்கண பதிப்பி ரானே. 385

கற்பனைச் சொற் கேயுழைத்துக் கவிதொடுக்கும்
புலவர்களும் களிக்கும் பாரிற்
சிற்ப முத லிய பல நூற் றியக்கற நிற்
கருதிடுநான் திகைக்க லாமோ?

அற்ப மதக் கிளை பல நோய் அறுவர்களும்
இருபகுதி யாய வற்றிற்
பற்ப மணி வாருமண் பூ சிடுவாரும்
பரவுகண பதிப்பி ரானே. 386

வாழியெனச் சந்ததம் போற் றிசைக்கு மென்னைச்
சூழ்கலி நோய் மாற்றி டாயேல்
வீழியிதழ்ச் சசி கணவன் ஆதியர்க்காத்
தகுவர்களை வீட்டல் மெய்யோ
ஆழியணி வானே போன் று லகினுக்காம்
நலங்கருதும் அடியார் நெஞ்சுட்
பாழிநெடுந் தோளொருபத் தொடும் சிலகால்
குலவுகண பதிப்பி ரானே. 387

தாக நோய் தவிர்ந்து பற்பல் உயிர் உவக்கப்
பூம்பயிர்கள் தழைக்க வேட்டிடு யான்
மாக நா டருமறியத் தொடுங் கிணற்றோர்
ஆறழைக்க வல்லாய் அன்றோ?
காகமா வுரு வெடுத்தும் கலசமுனி
நாதனுக்கும் கழையா நின்ற
பாகசா தனற்குமிரு நதியளிக்க
புகழ் கொள்கண பதிப்பி ரானே. 388

கோர மூ டஞ் சிறிதும் குலையா நாள்
என் மனதுட் குலவும் காட்சிச்
சீரவா வியதறிந்துன் அருட்கடலின்
திவலை யொன்றும் தெரிக் கொண் ணாதோ
வீரவேற் குமர னொரு வேடமகள்
மயற்கடலுள் வீழ்ந்த போதோர்
பாரமா மதக் களிறாச் சென்று மணம்
முடித்தகண பதிப்பி ரானே. 389

கோட்டி கொண்ட குரங்குறழ் என் மனம் அமைதி
பெறுமாறுன் குளிர் கட் பார்வை
நாட்டிலிந்த மண்ணுலகும் நாகருல
கமும் வாழும் நலஞ் செய் யேனோ
விட்டிடக்காய்ந் துருள்மரந் தீங் கனியுகுக்கத்
தமிழ்ப் பாடல் விளம்பும் மெல் வாய்ப்
பாட்டியைக்கை யாலெடுத்துக் கயிலைமிசை
விடுத்தகண பதிப்பி ரானே. 390

## 40-ஆம் பத்து

ஐயைந்து பேதத்து வடிவங்கொள் சிவனாதி யவர் கைதொழப்
பொய்யைந்து நீக்கிப் புரக்கின்ற வாறெற் கொர் புகழ்குவாய்
பையைந்து டைப்பாம்பை நிகர்நெஞ் சடங்கக் கொள்
பரிசாளருட்
கையைந்து றுங்கறப கம்போல் மிக நீடு கணராயனே. 391

மாதோட மெய்தும் குணத் தோர்கள் தமைநன்கு மதியாமல்
நின்
பாதோப யஞ்சூடும் அடியாரொ டென்னைப் பரிந்தாட்
கொள்வாய்!
தீ தோல்வி யுறுகற்பி னொருமூன்று சத்தித் திறம்பேணியொண்
சாதோடி ரண்டீன்ற காலாற்பல் புவனஞ் செய் கணராயனே.
392

அருமேக லைப்பாவை மாரிச்சை வழியேகி யயர்வேனை நின்
திருமேனி நாடித்த வம் செய்யும் நெறியிற்செ லுத்தாய்
கொலோ
பெருமேரு வெற்பொத் தரன்பாலு தித்தண்டர் பிழை தீர்தரக்
கருமேக மெனநீரும் அவுணேச ரைச்செற்ற கணராயனே. 393

வஞ்சம்பெ ருக்கும் குணத்தீயர் தங்கைப்பொன் வாஞ்சித்தலால்
நெஞ்சந்த விக்கச் செயும் பார மிடிமுற்றும் நீக்காய் கொலோ
அஞ்சம்பொ ருஞ்சீர்கொள் கலைவாணி விளையாடும் அணி
நாவுடைக்
கஞ்சன்செய் வேதத்தின் முதலுற்ற பொறியாய கணராயனே.
394

கொங்கைக்கு டங்கொண்ட மானன்ன மடமாதர் கோலாகலம்
சங்கைக்க டங்காத படியார வருமிச்சை தரலாகுமோ
மங்கைக்கு டற்பாதி அந்நாள்அ ளித்திட்ட மாதேவனிற்
கங்கைச்ச டைக்கற்றை மிசைவான மதிவைத்த கணராயனே.
395

சேவற்கொ டித்தம்பி சொற்கொண்டு பலவாறு திண்டாடுமென்
ஆவற்பெ ருக்குற்ற பயனல்கில் உனையீனம் அணுகும் கொலோ
நாவற்பெ ருந்தீவின் முகமென்ன நிகழ்கச்சி நகர்காத்த நாள்
காவற்றொ ழிற்சித ரற்காழி யுற நல்கு கண ராயனே. 396

வளமன்னு முலகிற்ப ழித்தென்னை எதிர்நீயர் மதம் நாச
முற்(று)
உளமொல்கு றத்தக்க விளையாடல் ஒருசற் றுஞற்றாய் கொலோ
சுளகன்ன செவியாட அடியார்க ளிடுமுண்டி துய்த்தூர்தொறும்
களமெய்து கரையற்ற சிவனென்ன வளர்கின்ற கணராயனே.
397

நாவேறு மகள் என்ன அவள்மாமி விழையாத நவையெய்தும்
நான்
பாவேண்ப டிபாடல் அணிகின்ற நீயாது பரிசிவையோ
மாவேழ மிவர்வானும் மலயாச லத்தானும் மகிழ்வெய்த முன்
காவேரி யொடுசெம்பு நதிநல்கு புகழ்கொண்ட கணராயனே.
398

நின்னிச்சை வழியண்ட பகிரண்டம் நிகழ்தன்மை நிசமாகில்
இங்(கு)
என்னிச்சை யொன்றில்லை யெனநாடும் உணர்வினம் என
வாகுமோ
முன்னித்தொ ழுங்கந்தன் முகமாறு மகிழ்கூர முருடக் குலக்
கன்னிக்கு முன் அன்றோர் களிறாகி நடைதந்த கணராயனே.
399

தவிசேறு மன்னர்க்குள் அஞ்சாத பேராண்மை தரின் அல்லது இப்
புவிமாது படுமின்னல் ஒழியாள் இதறிவாய்சொல் புரை
எண்ணிடேல்
அவிர்பான்மை தவிராத குருவிந்த மணிபோலும் அருமைத்தமிழ்
கவிபாடும் முதியாள்வெண் மலைமீதில் உறவைத்த
கணராயனே. 400

## 41-ஆம் பத்து

அம்பியொத் துப்பிறப் பாழியை நீத்தருள் ஆனந்தம் வழங்கும்
செம்பிர காசமெய்த் தாரகத் தில்தினம் நிகழும் கணபதியே;
நம்பிய மெய்யடி யார் பதப் பூந்துகள் நாளும் புனைவேனுள்
தும்பிமு கத்தொடு தோன்றியன் றோதிய சொற்காத்
தருள்வாயே. 401

கோணல்வெண் கோடு ஒடித் தன்றொரு தானவற் கொல்லும்
புகழ் கூறில்
வேணப யன்களெல லாம் விரைந் தீந்தருள் வேழப் பெருமானே!
நாணமொர் சற்றுமின் றிப்பலர் வாயில்ந டந்தெய்க்கும் என்
பாற்
சோணவ ரைச்சிக ரிக்கெதிர் சொல்லிய சொற் காத்
தருள்வாயே. 402

காயக நெஞ்சுடைப் பாதகர் வாழ்வறக் கறுவுந்தவர் நல்கும்
பாயசம் மோதகம் தோசையொப் பாவன பருகச் சலியானே!
தீயவர்க் கேயுழைத் திட்டுள மிக்கயர் சிறியே னிடைதோன்றித்
தூயவி ளாநகர் நந்தனத் தோதிய சொற்காத் தருள்வாயே. 403

இல்லையென் றேற்பவர் வேண்டுவ யாவையும் ஈயக் கருதுநர்
பால்
வல்லையொப் பாமுலை வல்லவை பாலென மகிழ்கூர் குள
வானே!
அல்லையொக் கும்களத் தான்உமைக் கன்றருள் அருமாமக
வாயும்
தொல்லைம றைத்தலைத் தேவென வாழ்பெரும் சொற்காத்
தருள்வாயே. 404

பன்னிரு பேதப் பகுதிகளாகிய பலகோ டிமதத்தும்
முன்னினைத் துச்செயும் தொண்டுகொண் டின்புறு முக்கட்
பெருங்களிறே!
என்னித யம்குறித் துள்ளபல் போகமும் இன்னேயளித் திமையார்
துன்னிய ஐந்தரு நாணும்ஐங் கையுடைச் சொற்காத்
தருள்வாயே. 405

செக்கடிப் பூசையும் சாமனைப் பூசையும் சீயென்றிக ழாதேற்று
அக்கண மங்கிருப்பார் விரும் பும்பய னருளும்பெரி யானே!
மைக்கடல் சூழுல கில்தமி யேனுறு மனவா தனைமாற்றித்
தொக்கமெய் யன்பர்பன் னூல்வயிற் சொல்லுமெய்ச் சொற்
காத்தருள்வாயே. 406

பத்தியுள் ளார்களை நித்தமும் எள்ளுநர் பலரும் கெடச்சாடி
எத்திசை யூர்பல சந்தியி னும்திகழ் யானைத்தலை யானே!
சித்தியொ ரெள்ளள வாயினும் நல்கிநின் திருச்சே வடிசூட்டித்
துத்தியா அரசிற்குமுன் பேறருள் சொற்காத்தருள்வாயே. 407

கற்றவர் சேகர மாமலை யப்பெருங் கல்லிற்றிகழ் வானும்
கொற்றவ லாரியும் வேண்டிரண் டாறுமுன் கொடுக்கும்குணக்
குன்றே!
நற்றரை யுய்யஎன் கற்கிணற் றோர்நதி நல்கித்தமியேன் வாய்
சொற்றபல் பாடலும் பொய்த்தொழி யாதருட் சொற்காத்
தருள் வாயே. 408

ஏழனம் செய்தம திக்கொரு தீமையிட் டிமையார் துதிக்கிரங்கி
வாழவு மன்றருள் வண்மைசொல் கின்றவர் மனந்தோறமர்
வானே
தாழரும் பேருமுற் றீந்தெனைத் தாங்கிமுன் தனிவேலனுக்
காங்கோர்
தோழனிற் சென்றும ணம்புரி வித்தமெய்ச் சொற்காத் தருள்
வாயே. 409

பல்வகை யுண்டிஉன் சந்நிதி யிற்றினம் படைத்துத் தொழு
வார்க்கு
நல்வர மத்தனை யும்தரத் தக்கதொர் நால்வாய்மழ களிறே!
வில்வலிக் கொற்றவர் தாமும்ந டுங்கியுள் வியந்தேத்திவ ணங்கும்
சொல்வயப் பாட்டியன் னார்உணர் நின்பெரும் சொற்காத்
தருள்வாயே. 410

## 42-ஆம் பத்து

கொங்கை மங்கையர் மயற்பெரு வாரியிற்
குளிப்பினும் உனை நாடி
அங்கை கூப்பி ஏத் திடுவதுண் டதன்பயன்
அணுத்துணை அவிராதோ
நங்கை பங்கினன் முதற்றவப் பேறென
நவிலும் மெய் யது தோன்றக்
கங்கை வான்மதிப் பிளவுடன் அவிர்சடைக்
கரிமுகப் பெரியோனே. 411

முன்னி னும்சுடுங் கொடும்குணம் பொலி தரு
மூர்க்கர்தம் பகையால் ஈண்(டு)
என்னி னத்தினர் உறுந்துயர் முழுமையும்
ஈர்தரற் கிரங்காயோ
வன்னி கூவிளம் ஆத்திபச் சறுகணி
வார்சடை யவிழ்ந்தாடக்
கன்னி வல்லவை யொடுநடம் பயின்றவிர்
கரிமுகப் பெரியோனே. 412

மைக வின்தரு களமுடைப் பரனும்
மதிக்கும்நின் புகழ் வாழ்த்தும்
மெய்க வந்தநெஞ் சிங்ஙனம் கனல்புரை
மிடிப் படல் முறைதானோ?
பைக ளாயிரம் பொலிதரு பாம்பணி
பண்டியும் பரிசியும்
கைகள் ஐந்தும்மே வியதுவர்க் கிரிநிகர்
கரிமுகப் பெரியோனே. 413

வள்ள மென் முலைச் சிறுமியர் மயலிடை
மாழ்குறும் எனையாண்டு
கொள்ள ரும்பயன் பிறர்கொளக் கொடுத்தருள்
கொற்றமும் தருவாயோ
புள்ள வாமலர்ப் புங்கவன் முதற்பகர்
புனிதநூற் பொருள் நம்பாக்
கள்ள நெஞ்சினர் காணருந் திருவுடைக்
கரிமுகப் பெரியோனே. 414

அற்ப வாதனைச் சழக்குமுற் றொத்தூன(து)
அடியவ ரொடு கூட்டிச்
சிற்பர் செய்யுருக் களும் அருள் மயமெனத்
தெரிதரப் புரிவாயோ
மற்ப யோதர மௌப்பொ ருப்புலைக் கொடு
வாரணத் திகல் மாற்றிக்
கற்ப காடவிப் புலவர் சொற் புகழ்பெறும்
கரிமுகப் பெரியோனே. 415

மணங்கொள் பூச்சொரிந் துண்டிகள் பலபல
வகைப்பட எதிர் சேர்த்தி
இணங்கு தூபதீ பம்கொடுத் துனைத்தொழும்
ஏற்றமென் றருள்வாயோ
பிணங்கு வேதமும் ஆகமப் பகுதியும்
பேசுபெற் றியவாய்.
கணங்கள் யாவினும் தலைமைபெற் றவிர்தரு
கரிமுகப் பெரியோனே. 416

பொன்ன வாவிடை அளவற அழுந்தயிற்
புழுங்குபுன் மனப்பேய்நின்
தன்ன தாள்மலர்த் துளைகளே கருதுமெய்த்
தவம்பெறத் துணியாதோ
அன்னம் மோதகம் தோசையெள் ளுண்டைபச்
சரிசி முக் கனிதேங்காய்
கன்ன லொப்பன மொக்குநால் வாய்ப்பெரும்
கரிமுகப் பெரியோனே. 417

உலகம் யாவும்நன் கறிதரக் கலிற்றொடும்
ஒருபெருங் கிணற்றூடே
புலவர் ஊர்நதி நாணுறத் தரும்புனல்
பொங்கவென் றளிப்பாயோ

குலவு மாநதி இரண்டுமுன் பூமகள்
குறைதவிர்த் திடத்தோய்வான்
கலச மாமுனி மகபதி யொடு தொழும்
கரிமுகப் பெரியோனே. 418

அன்று கார்த்திகை மகனுயக் குறத்திமுன்
அரும்புனத் தினும்சென்றாய்!
இன்று நானுறும் தருணர்ந் தொருசிறி
தேனும்என் இரங்கில்லாய்
பொன்றுறான்களிற் றுருக்கொடு மலைப்பிடி
புளகமெய் துறச் சேர்காற்
கன்று போன்றுநித் தவரினும் மிகவளர்
கரிமுகப் பெரியோனே. 419

அருணை யூர்ப்பெருங் கோபுர முகப்பில்அன் (று)
அறைந்தசொல் நிசமானால்
தருண மீதெனத் தெரிந்தரு ளாதுறத்
தகும்கொல்நன் குணர்ந் தோதாய்!
வருணம் நான்கினும் இரக்குமோர் கிழவியை
மறுவில்வெண் மலைமீது
கருணை யால்விடும் பனையினை அனையனைக்
கரிமுகப் பெரியோனே, 420

## 43-ஆம் பத்து

பால்வாரிதி மால்நிகர் வாழ்வுறும் பற்றுநீடிக்
கோல்வாய்க்குறு நாயென மாழ்குமிக் கோதென்றீர்வீர்?
செல்வாய்த்தகண் வல்லவை யாளிடம் சேரவேந்தி
நால்வாய்முகத் தோடுல வும்கண நாதனாரே. 421

பொன்றான்பரம் என்பவர் போலப் புழுங்குவேனை
இன்றாதரித் தால்உமைச் சீறுநர் யாருளரோ
தின்றார்வமு றப்பல வுண்டிமுற் சேர்க்கின்றோர்க்கே
நன்றாமவை யாவும்நல் கும்கண நாதனாரே. 422

மிகுதிமிடியி ற்றளர்ந் தேயுலம வேண்டுமென்னைத்
தகுமெய்யிருட் பேறுறு மன்பரிற் சாரவைப்பீர்!
தொகுபூதரும் தேவரும் மாதவத் தோரும்சூழ
நகுசெம்பவ ளாசலம் நேர்கண நாதனாரே. 423

சீரார்தமிழ்ப் பேரமிழ் துண்டுதெ விட்டலுற்றும்
ஊரார்வசை யால்உடை வேனுக்கொர் ஊக்கமீவீர்!
கூர்விடப் பல்லொரு நான்குடைக் கோளராவை
நாராயணனாக்கியன் றாள்கண நாதனாரே. 424

எளிதிற்பலர் வாழ்வுறச் செய்தமை எண்ணி நேர்ந்தேற் (கு)
அளியோர்அணு வாயினும்செய்ய நண்ணாததேனோ?
களியீருரியான்எனச் செஞ்சடைக் காட்டிற் கொன்றை
நளிர்நீர்பிறை சூடிய சீர்க்கண நாதனாரே! 425

ஏறும்பசு வும்கொலு மீனரை எண்ணிஎண்ணிச்
சீறும்தவம் தந்தமை வீண்படச் செருவீரோ
கூறும்சுரு தித்தலை யாயகு ணங்கள்மூன்றும்
நாறுங்கட நீர்பொழி யும்கண நாதனாரே. 426

அந்தாரணி மங்கைநொந் தேங்கிய டிச்செய்வாரைச்
செந்தாமரைக் கண்ணில் வெல்வலிச் சீர்நல்கிரோ
முந்தாரணத் தின்தலைத் தாரக முன்னுவர்உள்
நந்தாவிளக் கிற்றிக ழும்கண நாதனாரே. 427

மதிவாணுதற் பேதையர் மையலில் மாழ்குமென்னைக்
கதிவேண்டுமெய்த் தொண்டரிற் சேர்க்க டாட்சியீரோ
விதிபாலரினமும் தின்னும் சதவேள் வியானும்
நதியோரிண் டெய்தநல் கும்கண நாதனாரே. 428

அடந்தோய்மத வாதரை வென்றுசித் தாடிநுந்தாள்
இடந்தோய்தரச் சற்றருள் நோக்கம்எற் கியொண்ணாதோ
கடந்தோய்குறப் பேதையைக் காமுறும் கந்தனுய்வான்
நடந்தோர்களி றாமெனச் செல்கண நாதனாரே. 429

புவியோர்களும் வானவ ரும்புகழ் போகம்நல்கி
அவியாதமெய் வீட்டமைக் கத்தகும் ஆற்றலின்றோ
கவினார்கயி லைக்கிரி மீதுறக் காசில்பாடல்
நவில்பாட்டியை யன்றுவி டும்கண நாதனாரே. 430

## 44- ஆம் பத்து

மருது சாய்த்துயர் மாலென வாழுவே
கருது மென்னைக் கடைக்கணி யாய்கொலோ
பொருது தானவப் பூட்கைவென் றுஆகுவாம்
விருது கொண்ட விநாயக மூர்த்தியே. 431

ஆழிச் சிந்தையி லார்வசை நீழலால்
தாழிச் செய்வினைத் தன்மையென் தீர்வையோ
வீழச் செம்மலை என்றில கும்தனி
வேழச் சென்னி விநாயக மூர்த்தியே. 432

கள்ளைப் போலும் கவிதொடுக் கின்றநான்
கொள்ளைத் துன்பமு றாததொர்சொற் கூறுவாய்!
பிள்ளைத் தன்பிறை போலப் பிறங்குமோர்
வெள்ளைக் கோட்டு விநாயக மூர்த்தியே. 433

வாட்கை வீரரும் வந்துவ ணங்குமீர்
கேட்கை யோரும் கிளர்ச்சிநிற் கில்லையோ
பூட்கை யானனம் புந்தியில் நாடுவார்
வேட்கை நல்கும் விநாயக மூர்த்தியே. 434

வேனில் வேடனை வென்றுவக் கும்திறம்
யானி கத்துற இக்கணம் நல்குவாய்!
ஆனி லாவுகை வள்ளலை யன்னசீர்
மேனி கொண்ட விநாயக மூர்த்தியே. 435

சுத்த தத்துவமாகிய தொன்னிலை
சித்த னேகத் தாடுபெறச் செய்வையோ
பத்த ரிட்ட பல பல உண்டியும்
மெத்த வுண்ணும் விநாயக மூர்த்தியே. 436

பாத கர்க்குட் பயந்தழும் பாவியேற்(கு)
ஆத ரத்தன் றைறந்தசொற் பொய்கோலோ
நாத கீதம் நயம்பெறு நால்வகை
வேத மூல விநாயக மூர்த்தியே. 437

ஆறு தந்திரன் டன்பரை யாண்டநீ
ஈறு தீரிசை யேன்எனக் கீகிலாய்!
நாறு கொன்றையும் நல்லறு கும்புனை
வீறு துன்று விநாயக மூர்த்தியே. 438

கள்ள வேட்டுவக் கன்னிநம் கந்தனைக்
கொள்ள நேரிசை கூறெனைச் சீறிடேல்
வள்ள லந்தகை யார்தலை மைந்தனாய்
வெள்ள வேணி விநாயக மூர்த்தியே. 439

இட்ட முற்றும் எனக்கினி ஈந்து நீ
நட்ட தொண்டர் நடுப்பெற வைத்திடாய்!
அட்ட சித்தளித் தெதளவையைக் குன்றின் மேல்
விட்ட திண்கை விநாயக மூர்த்தியே. 440

## 45-ஆம் பத்து

நாட வல்லார் முதற் பூசை செய்து போற்ற
நகர்த்தெருச்சந் திகள் தோறும் நாளும் மேவி
ஏடலர் பூங் கொன்றையொடு தும்பை சூடும்
இபமுகவா! நீயருந்தற் கேற்ற வுண்டி
கோடனைய வாக இட விரும்பும் நல்லோர்
குலைகுலையப் படுத்தி எண்ணில் கோரப் பேய்க்காம்
மேட முத லிய பலிசெய் திடும் பொல் லார்க்கும்
விக்கினம் செய் யா திருக்கை விகித மன்றே. 441

பாருலகில் மானிடரும் கடலுள் வாழும்
பலதகுவர் அரக்கர்களும் பழுதில் பைம்பொற்
சீருலகிற் றே வர்களும் பிறரும் போற்றச்
சிந்துரமா முகங்கொடு முற் றிகழும் தேவே!
யாருமிகழ் தரும் வசையை மதித்தி டாமல்
எள்ளளவும் ஐய மின்றி இயற்றீம் சொல்லால்
மேரு மலைத் துண்டிரக்கும் தமிய னேற்கு
விதரணஞ் செய் யா திருக்கை விகித மன்றே. 442

ஆதவன்றன் உந்தியினிற் றோயச் சென்னி
அண்டமுக டளவ நிற்ப தறிகு வார்க்கும்
பா தகமில் பசுமலத்தால் உண்டை செய்து
பச்சறுகிட் டிறைஞ்சுநர்க்கும் பரிசீ வானே!
நாதவொலி கடந்தமுத்தி யிரக்கின் றார்க்கும்
நல்குவாய் எனப்பலரும் நவிலக் கேட்டேன்
வேதமுடன் ஆகமமும் சிறப்ப வேண்டும்
வேட்கைகள்செய் யாதிருக்கை விகித மன்றே. 443

காணமொன்றோர் இருபுலவர் தம்பால் அன்பாற்
கவர்ந்துவசைக் கவிகேட்குஅக் கவிக்கும் பொன்ஈந்(து)
ஆணமுளார் அதையெடுத்துப் பகருந் தோறும்
ஆர்வமுறும் ஆனைமுகத் தமல மூர்த்தி!
நாணமின்றி நாய்நரியா தியகூண் டேச
ஞானமிக்க மானிடர்வாய் நகைப்ப நாளும்
வேணநல்லூண் இருந்துமுயிர் கொன்றூன் தின்பார்
வீவுறச்செய் யாதிருக்கை விகித மன்றே. 444

அஞ்சுமுகத் தான்மதலை யாயும் அன்னோன்
அணிந்தேர்அச் சறமுறித்திட் டவன்கொண் டாட
நெஞ்சுவக்கும் பெரியகண பதியப் பா!முன்
நீஎனக்குச் சொன்னமொழி நிசமன் றேயோ

பிஞ்சுமதிச் சடையாதிக் கோல முற்றும்
பிறங்குநன வினில்வாராப் பெற்றி யாதோ?
விஞ்சுதவம் செய்துழல்என் உண்மை பார்மேல்
விளங்கிடச்செய் யாதிருக்கை விகித மன்றே. 445

ஆறுபுனை செஞ்சடைக்காட் டமலத் தானத
அடையாளம் தலையில்நனி அவிரக்காட்டி
ஏறுகைக்கும் தாய்தன்அடை யாளஞ் செங்கை
இரண்டினிற்கொண்டு ஆகுமிசை யிவரும் எந்தாய்!
கூறுபடப் பலவாறு பிதற்றிப் போர்செய்
கொடியமத நூல்கள்முற்றும் குலையத் தாக்கி
வீறுபரஞ் சிவம்சத்தி என்னும் நூலே
விரிவுறச்செய் யாதிருக்கை விகித மன்றே. 446

மையிலங்கு கண்ணுடைய சித்தி புத்தி
வலவையெனும் மூவர்களும் மகிழ்கூத் தாடிப்
பையினணிப் பாந்தளர சினுக்கு நேர்ந்த
பருவரல்நீத் தருள்புரிந்த பவளக் குன்றே!
பொய்யினையே பெருக்கிமெய்யைச் சுருக்கிப் பொல்லாப்
புலையாடும் புன்னெறியிற் புகுந்தோ ரெல்லாம்
வெய்யிலிடை மென்புழுப்போற் றுடித்துச் சால
மெலிவுறச்செய் யாதிருக்கை விகித மன்றே. 447

எட்டின்முதற் றிசைக்கோமான் தனக்கும் முந்நீர்
இனிதருந்தி விட்டாற்கும் இரண்டா றீந்து
மட்டில்புகழ்ப் பேறுபெறும் மழமால் வேழ
வதனத்தெம் பெருமான்நின் மலர்த்தாள் போற்றிக்
கிட்டிணன்போல் வாழும்நசை கொள்ளும் நாயேன்
கீழவர்சொல் வசைமுழுதும் கேட்க லாமோ
வெட்டியஎன் கற்கிணற்றில் நதியொன் றுண்டாய்
மேலெழச்செய் யாதிருக்கை விகித மன்றே. 448

தாள்கருதிக் கைம்மாறிச் செவிகள் பற்றித்
தணிந்துமுக்கால் எழுந்துதம் தலையிற் குட்டும்
ஆள்கள்விருப் பத்தனையும் நல்கற் கென்றே
அழகியபன் னொருகைகொளும் ஆனைக் கன்றே!
தேள்கடுக்கும் குணவேடர் சிறுமி தன்னைத்
திருடினற்கும் உதவிமுனாள் செய்த துண்டேல்
வேள்கணையோர் ஐந்தையும்நின் அருளால் நாயேன்
வென்றிடச்செய் யாதிருக்கை விகித மன்றே. 449

கள்ளினும்மிக் இனியமொழிப் புலவர் யாரும்
காப்புரைக்கத் திகழ்பெருமைக் களிறே! நின்வாய்
தெள்ளிதில்அன் றெனக்குரைத்த மாறறத் தொன்று
திறப்படினும் உய்ந்துகொள்வேன் தீமை சேரேன்
உள்ளியவா றத்தனையும் உலகில் ஆடி
ஓங்காரம் பகரும்நெறி யொருங்கு போற்ற
வெள்ளி வரைத் தலையின் மிசை ஔவை போன்று யான்
மேவிடச் செய் யாதிருக்கை விகித மன்றே. 450

## 46-ஆம் பத்து

என்மனத் தியன்ற ஆசை யாவையும் முடித்திட் டப்பால்
நின்மனத் துணைத்தா ளாய நிசக்கதி சேர்க்க வேண்டும்
பொன்மரு மார்பன் ஆர்வம் பொலிந்தபுண் ணியத்
தோர்க்கெல்லாம்
கன்ம நோய் தவிர்க்கும் முக்கட் கணபதிக் கடவுளானே. 451

கொங்கை மங் கையர் மால் என்னும் கொதி கடற்
குளிக்கின் றேனைச்
செங்கை நீ றணிந்தன் றாண்ட திறமிவண் திகழொண்ணாதோ
அங்கையில் மழுமான் ஏந்தும் அமலர்தம் மகவாம் நீராற்
கங்கையும் மதியும் சூடும் கணபதிக் கடவுளானே. 452

பேய்களிற் கொடிய மாதர் பிணங்கலாற் பெரிது வாடி
நால்களிற் கடைப்பட் டேங்கும் நவையறும் நலஞ் செய் யாயோ
பாய்கடும் புலியே றன்ன பற்பல தகுவர் மாளக்
காய்கனல் அனைய மேனிக் கணபதிக் கடவுளானே. 453

மனத்தின் வா தனை முற் றிர்ந்துன் மலர்ப்பதம் வணங்கும் அன்பர்
இனத் தொடு கூட்டியாண் டெற் கினியபே றினியென் றீவாய்!
சினத்தோடு மயக்கம் காமம் தீர்ந்தவர் திரள் முற் றுய்யக்
கலத்தின்மும் மத நீர், பெய்யு கணபதிக் கடவுளானே 454

பைக்கணம் பரிக்கும் பாரிற் பாவமிக் கதனால் ஆங்கள்
குக்கல்போல்மலமும் தின்னும் கொடுமையான் சகிக்கின் றில்லேன்
எக்கணம் அருள்செய் வர்யோ இனிது போற்றிவசக்
கின்றார்க்குக்
கைக்கரி வதனம் காட்டும் கணபதிக் கடவு ளானே. 455

தாமரைப் பனவன் என்மேற் சள மிக விதித்திட் டாலும்
நீமகிழ்ந் தவற்றை நீக்கி நிறை நலம் அமைக்கொண் ணாதோ
பூமலி பசும் பொற் கொம்பும் புனிதமா மயிலும் போலும்
காமரு வலவை தோள் சேர் கணபதிக் கடவு ளானே. 456

ஈங்குசில் போகம் ஈவான் எனத்திகழ்ந் தியலா தோட்டி
ஏங்குறப் படுத்தும் பண்பும் இனிதெனப் புனைந்துள் ளாயோ
ஆங்குவிண் ணவரை வாட்டும் அவுணர்கோன் உடலாற் செய்த
காங்குவெற் பனைய ஆரர் கணபதிக் கடவு ளானே. 457

பாவியென் றுலகோர் எள்ளப் பரிசுகே டுழந்தும் மாயா(து)
ஆவியும் உடலும் உன்னோ டயிக்கமாம் படிசேர்த் தாள்வாய்
தாவில்பொன் னகர்க்கோ மானும் தமிழ்முனி
வனும்வேண்டநந்நாள்
காவிரி பொருநை யீந்த கணபதிக் கடவு ளானே. 458

படஅரா அனைய வேடப் பாவையாற் பதைத்த வேலன்
இடர்கெட அருள்செய் மாட்சி யியம்பெனக் கருளாய் கொல்லோ
நடம்நவில் போதும் ஆங்கோர் நங்கையைச் சுமக்க நாணாய்
கடகங் கணம்சூழ் அங்கைக் கணபதிக் கடவு ளானே. 459

இவ்வையத் தினரும் வானத் திமையவர் தாமும் ஏத்தத்
தெவ்வைவென் றுவக்கும் ஆண்மைத் திறமெனக்
கருளொண்ணாதோ
ஔவையைப் பரமன் வாழும் அசலவான் முகட்டில் அந்நாள்
கௌவைதீர்ந் தமையச் சேர்த்த கணபதிக் கடவு ளானே. 460

## 47-ஆம் பத்து

அம்பியலும் கண்காட்டி அணுகும்கால் அடஞ்செய்யும்
வம்பியர்மால் வயப்பட்டு மறுகஎனை விடலாமோ
கொம்பிரண்டில் ஒன்றொடித்துக் குலவுமுதற் கரத்தேந்தும்
தும்பிமுகத் தப்பா! நீ சொன்னபயன் தருவாயே. 461

இந்திரனூர் வாழ்வினையும் இகழ்தரும்என் இதயத்தே
மந்திநிகர் வன்குணப்புன் மாதர்மயல் வரலாமோ
பந்திபடு வரைபோலும் பலபலஉண் டியுமாந்தும்
தொந்திவயிற் றெந்தாய்நீ சொன்னபயன் தருவாயே. 462

தீயவர்க்கும் எளிதெய்தும் சிறுபோகங் களும்வேட்டு
நாயனைய மனத்தோடு நானுழலத் தகும்கொல்லோ
சேயதுவர்க் கிரியேபோற் றிகழுமவிநா யகமூர்த்தி!
தூயவிளாம் பட்டிடைநீ சொன்னபயன் தருவாயே. 463

ஆணமிலா மனத்தாரை அந்தரங்கத் தினும்வேட்டு
நாணமின்றி மிகமுயன்று நரகினுக்குள் அஞ்சுகின்றேன்
வேணபடி விளையாடும் விக்கினேச் சுரனேநீ!
சோணகிரிக் கோபுரத்தே சொன்னபயன் தருவாயே. 464

இல்லையே என்றார்தோ றிரந்தலையும் எளியேனுக்(கு)
எல்லைநீர் பேராசை இசைத்தவிதம் என்னேயோ
வல்லைநேர் இளங்கொங்கை வல்லவைப்பெண் மணவாளா!
தொல்லைவே தாகமங்கள் சொன்னபயன் தருவாயே. 465

கறிக்குமற்றைச் சித்திகட்கும் காமர்விதை யென மேலோர்
மதிக்குமுதற் பிரணவத்தின் வாய்நடிக்கும் மழகளிறே!
விதிக்கயர்ந்து பலவாறு வெதும்பெனக்குன் விரையார்பொற்
துதிக்கைநீ றணிந்தொருக்காற் சொன்னபயன் தருவாயே. 466

ஆழுணர்ச்சிப் பெரியோர்க்கும் அதுபுணராச் சிறியோர்க்கும்
தாழும்வழி பாடேற்றுத் தடையறுக்கும் தனத்தந்தீ!
ஏழுகடல் களுந்துருவன் எந்திரந்தோய் பெருங்குன்றும்
சூழுலகில் நீயெனக்குச் சொன்னபயன் தருவாயே. 467

கூர்ந்தமதி யோர்பரவும் குறுமுனிக்கும் இந்திரற்கும்
ஆர்ந்தநதி யிரண்டுதவும் ஐந்துகரத் தம்மானே!
நேர்ந்ததொரு கற்கிணற்றில் நெடிதுழுயன் றிளைத்துமனம்
சோர்ந்துள்ளேன் நீயொருக்காற் சொன்னபயன் தருவாயே.
468

கந்தனுவப் புறுமாறு கருங்குறத்தி தனைவெருட்டத்
தந்தமத களிறாகித் தடம்புயத்தி னிடைசென்றாய்!
இந்தவினைப் பிணிப்பெய்தி இடையுமெனக் கின்னேநின்
சுந்தரச்செவ் வாயால்முன் சொன்னபயன் தருவாயே. 469

வில்கிளர்வெண் மருப்பொன்றால் மேருமிசை ஓர்முனிவன்
சொல்கிளத்தும் கதையெல்லாம் வரைந்தபுகழ்ப் பெரியோனே
எல்கிளர்மெய் உணர்வாளை இரசிதக்குன் றினிற்சேர்த்த
சொல்கிளர எனக்குன்வாய் சொன்னபயன் தருவாயே. 470

## 48-ஆம் பத்து

ஆழ்வார்கடற்புவி யுயமுயன் றயர்வேன்
பாழவாவிய சிலரினும் தாழ்வுறப் படுமோ
சோழன் ஏன்றமட் டிடத்தகு முணவெலாம் துய்ப்ப
வேழ மாமுகக் குவடென் மிளிர்விநா யகனே. 471

கொள்ளை வெண்டமிழ்க் கவிகொடு பரவியும் கொடியேன்
கள்ளை நேரருட் களிபெறக் கடைக்கணித் திலையே
பிள்ளை வான்மதி முடியுறப் பெற்றுமுள் வெள்க
வெள்ளை வாண்மருப் பிரண்டுகொள் வியன்விநா யகனே.
472

சாரு நேர்மொழித் தையலார் மயற்பெரும் சலதி
மாரு திக்கிளைத் தாங்கெனக் கஞ்சுநாள் வருமோ
பாரும் வானமும் நலம்பெற வருமுனி பகர்சொல்
மேரு மால்வரை மிசைவரைந் தருள்விநா யகனே. 473

தொண்டு ளார்பலர் சூழ்தரத் தலந்தொறும் தொறும்போய்ப்
பண்டு வாழ்சில ரெனத்துதி செயும்படி பணித்(து)ஆள்!
கண்டு நேர்உரைக் கவுரியாற் கட்செவி யான
விண்டு இன்புறும் பொருட்டெதிர் திகழ்விநா யகனே, 474

ஆணி முத்துறழ் நகைச்சியர் ஆடல்கண் டயர்ந்து
நாணி டுந்துயர் கெடுமொரு நாள்வரப் புரிவாய்
பாணி பச்சறுகு இதழிஆர் தும்பைநேர் பலவும்
வேணி யிற்சிவ னெனப்புனைந் தவிர்விநா யகனே. 475

சகள நிட்கள மிரண்டுமாம் தாரகம் குறித்து
இகழ்சொற் புன்மதத் தரினும் தாழ்ந்துளேன் இரங்காய்!
அகடு றத்தகு மவைமிகப் படைப்பவர் அறியும்
விகட வித்தக விதரண குணவிநா யகனே. 476

களங்க நெஞ்சகக் கள்வன்என் றென்னைநீ கழியா (து)
இளங்கன் றைப்பசு நாடவிற் கோடல்எக் கணமோ?
வளங்கொள் சித்தியும் புத்தியும் வலவையும் மகிழ
விளங்கும் அங்குச பாசம்ஏந் தியவிநா யகனே. 477

மைக்க ணால் உரந் துளைத்துநுண் மனங்கவர்ந் துவக்கும்
பொக்க மாதரார் புலர்வுறா வாறருள் புரிவாய்!
தக்க வானவர் இறைக்கும்ஒண் மலயமா தவற்கும்
மிக்க மாநதி யிரண்டுத வியவிநா யகனே. 478

மூட நெஞ்சுடைச் சிவரை முன்னுபு முயலாப்
பீட ளித்தருட் பெருங்கட லாட்டியெற் பேணாய்
ஆடல் வேலனை வலிதுசென் றணைந்திட அந்நாள்
வேட மங்கையை வெருட்டிய புகழ்வி நாயகனே. 479

பள்ளி கொண்ட மா லுரத்தமர் பாவைகண்
ணருள்வேட் (டு)
எள்ளி டும்பவர்க் கிலக்கெனத் தளர்கைநீத் தெனையாள்!
ஒள்ளி யற்றமி ழால்அருட் செயல் விளக் கொருத்தி
வெள்ளி மால்வரை மிசையுற விடும்விநா யகனே. 480

## 49 ஆம்பத்து

மக்கள் தம்மினும் கடைப்படும் தமியனேன்
வானகத் திடைவாழும்
மிக்க தேவரிற் சீர்த்தபே ருருக்கொள
விருப்பமீந் தவனாரோ
தக்க நான்மறைத் தலையினின் றோலிடும்
தாரகப் பொருளாகிச்
செக்கர் வான்எனப் படர்புகர்ச் சிந்துரத்
திருமுகப் பெருமானே. 481

பழித்து ளார்குலம் நடுக்குறப் பரவுநர்
பலபல நலமெய்தி
விழித்துன் மெய்யடி யவரொடு கூடியான்
மேம்படு தினமின்றோ
அழித்து வானுல கினைக்கெடுத் திடும்பொலா
அனல்அவு ணனைமாந்தித்
தெழித்து மும்மதம் பொழிதரு சிந்துரத்
திருமுகப் பெருமானே. 482

போக சாலமும் தரவிசை யாய்எனிற்
பூரணப் பதமாய
ஏக ஞானநிட் களபர மார்த்தவீ (டு)
ஈதன்மெய்ப் படும் கொல்லோ?
மாக மாநில முழுதுல கங்களில்
வாழ்உயிர்த் திரள் கொண்ட
தேகம் யாவினும் தலையெனும் சிந்துரத்
திருமுகப் பெருமானே. 483

பண்ட வாறடி யேற்குரை செய்தநின்
பழுதறு மொழிபொய்த்தால்
அண்ட கோடியி லுளமறைக் குலமுழு (து)
அசத்திய மாகாவோ
உண்ட லேமிகப் படைத் தறு காதிய
ஒருங்குசாத் தியுள் அன்பால்
தெண்ட னிட் டவர் துயர் அடும் சிந்துரத்
திருமுகப் பெருமானே. 484

அக்கென் மாலைகல் லாடைவெண் ணீறுமிக்
கணிதல்கண் டஞ்சாவாய்
இக்கென் மேல்மதன் வளைத்துநாண் மலர்க்கணை
எய்த்தலென் றொழிவானோ

செக்கெள் ளாயினும் இகழ்ந்திடா தேற்றலிற்
றினகரன் வெயில்காயும்
திக்கெ லாம்முதல் வழிபடும் சிந்துரத்
திருமுகப் பெருமானே. 485

எவ்வ கைப்படும் ஊற்றையும் மாற்றினற்கு
இனியன மிகப்பெய்தும்
நௌவ லந்தரு நிழல்படு கரையெலாம்
நவிலஆண் டருளாயோ
மௌவல் மூரலம் சித்தியும் புத்தியும்
வலவையும் மகிழ்கூரத்
தெவ்வர் வேரறக் களைந்த செஞ்செந்துரத்
திருமுகப் பெருமானே. 486

கண்ணி லான்தரு மகனிலும் கொடியவர்
காசினி கொள்காலம்
உண்ணி லாம்பெருந் துயரினும் என்மனம்
உழலவிட் டிடலாமோ
புண்ணி லாநிலை யருள்செயி லருந்தவம்
புரிந்துய மாட்டேனோ
தெண்ணி லாப்பிறை மருப்புடைச் சிந்துரத்
திருமுகப் பெருமானே. 487

மோதும் வச்சிரப் படையினன் மலயமா
முனியெனும் இருவோர்க்கும்
ஏது கண்டிரு நதியளித் தனையெனில்
எனைவெறுத் திடலாமோ
சாது சங்கமே தஞ்சமென் றென்றணைந்தரும்
தவஞ்செயத் தக்கோர்க்குத்
தீது முற்றொழித் தருள்செயும் சிந்துரத்
திருமுகப் பெருமானே. 488

காந்த மூசியைக் கவர்வதொத் தென்சிறு
கருத்தைமுற் றிலும்ஈர்த்துச்
சாந்த ஞானமும் கோரசித் தியும்பெறத்
தண்ணருள் பொழியாயோ
ஏந்த ணித்தனித் திளங்குறப் பேதையை
ஏனலம் புனத்தந்நாள்
சேந்தன் மாமணம் செயப்புரி சிந்துரத்
திருமுகப் பெருமானே. 489

பொய்வ ழக்கினர் உவப்புறப் பலப்பல
புண்ணியத் தினர்மாழ்க
செய்வ தார்கொல்அத் தீயனை நின்கையிற்
றிறற்கயி றிருக்காதோ
கைவ ருந்தமிழ்ப் பாவலிக் கிழவியைக்
கயிலை யின் றுரைசெய்யும்
தெய்வ மால்வரை மிசைவிடும் சிந்துரத்
திருமுகப் பெருமானே. 490

## 50-ஆம் பத்து

மைந்துறு மன்மதன் வாளியால்
நொந்துழ லுந்துயர் நூறுவாய்!
இந்துமு டித்தவிர் எழிலொடோர்
ஐந்து கரங்கொளும் ஆனையே. 491

எங்கும்நின் அன்பன்ஏ னச்சொல்சிர்
இங்குவி ரும்புவ(து) ஈனமோ?
பைங்குழல் அம்பிகை பாசமோ(டு)
அங்குசம் ஏந்திய ஆனையே. 492

இத்தரை யோர்வசை எய்தும்நான்
முத்தரொ டின்புற முன்னுவாய்!
பத்தர்வி ரும்பிய பரிசுநல்(கு)
அத்தன் அளித்தருள் ஆனையே. 493

இரவலர் தம்மொ டிளைத்துளேன்
புரவலர் நாணிசை பூண்பனோ
பரவும ணிப்பணி பலவும்வாள்
அரவும் அணிந்தவிர் ஆனையே. 494

நாரண னேரிசை நத்தெனைக்
கோரணி செய்வது கொடுமையே
பூரண வுண்மை புகன்றநால்
ஆரண மும்புகழ் ஆனையே. 495

ஏதில ரைத்தம ரென்றெணும்
தீதிறு மாறருள் செய்குவாய்!
காதியு ணாநிலை கைக்கொள்வார்க்(கு)
ஆதியெ னத்திகழ் ஆனையே. 496

நம்பறி யாரென நையுமென்
கம்பலை வாரி கடத்துவாய்!
எம்பரு ளாரும் இறைஞ்சுசீர்
அம்பக மூன்றுறும் ஆனையே. 497

நாறும லர்ச்சொரி நானருட்
பேறுபெ றத்தரல் பிழைகொலோ
ஈறுத விர்ந்த இரண்டுநீர்
ஆறுத வும் திறல் ஆனையே. 498

மயில்புரை சாயல் மடந்தைமார்
ஒயில்கரு தாமன வுரம்நல்காய்!
குயிலைநி கர்த்த குறத்திகூட்(டு)
அயிலவ னுக்கருள் ஆனையே. 499

கௌவைத விர்ந்த களிப்பெனக்(கு)
இவ்வைய மீதினும் ஈகுவாய்!
தெவ்வைவெல் வார்புகழ் சித்தியன்(று)
ஔவைபெ றத்தரும் ஆனையே. 500

## 51-ஆம் பத்து

காஞ்சிந கர்க்கிடையோர் தினம் கரியமால் செயும்கூத்து
ஆஞ்சிக லாழியொன் றீந்தருள் ஐந்துக ரத்தரசே!
வேஞ்சினத் தோர்பலர்மேற் பகை விளைத்துள்
ளேன்வினையால்
மாஞ்சிடச்செய் யாதேவரம் வலிதளித்தருளே. 501

அந்தண் பூஞ்சோலைக் குயி லனைய வல்லவையார்
தொந்தங் கொண்டாடும்-பெருந் நம்பிமு கத்திறைவா!
மந்தந் தீர்ந்தசிறு மனத்தில் எண்கவலில்
வந்தன் றோதியதோர் பயன் வலிதளித்தருளே. 502

தாரகப்பொருளாய் முதற் சகலவேதமும்செய்
காரணப்புக ழோ-திடிற்-களிக்கும் கைக்களிறே!
கோர ணிக்குணத்தார்-களைக்-குறித்து வாடுகின்றேன்
மார னைச்செறும்சீர் பெற வலிதளித்தருளே. 503

விண்ட லத்திலுள்ளார் மன வெப்பம் தீர்தரப்போய்க்
கண்ட கத்தருவக் குலக் கயமுதற்றடிந்தாய்!
கொண்டல் மேனியன்போல் மகிழ் கொற்றம்
வேட்டிரப்பேன்
வண்ட மிழ்த்தொடைபூண் டருள் வலிதளித்தருளே. 504

போனக மிக்கிடுவார் செயும் பூசையிற்களிகூர்ந்(து)
ஈனம றுத்தருளாற்-நடை யாவும்தீர்ப்போனே!
ஞானவி ளக்கமுளார் நடு நான்இந்நாள்மேவி
வானவ ரும்புகழ்சீர் பெற வலிதளித்தருளே. 505

கையதில் அங்குசமும் பெருங் கயிறும்கொள்மலைபோல்
வெய்யகு ணத்தூப் பரி மிசையுலாவருவாய்!
பொய்யர் செய்வாதமெலாம் மறைப் போக்கும்
ஊக்கமதால்
வையகத் தில்தலையாந் திறல் வலிதளித்தருளே. 506

கூனல்வெண் கோடதனாற் குரு குலத்தினோர்கதையை
ஆனவிர் கேதனத்தான் சிலை யதனில்அன்றமைத்தாய்!
பானல்வி ழிக்கொடிநேர் இளம் பாவைமார் மயலால்
மானம திந்துழலா நிலை வலிதளித்தருளே. 507

வீறுகு றுமுனிக்கும் சிறை வெற்பற வென்றார்க்கும்
ஆறுத ளித்தவியந் தருள் ஆதிவிநாயகனே!
நாறும லர்த்துணரால் உனை நாளும் பூசைசெய்வேன்
மாறுப டாஅருட்சீ ரினை வலிதளித்தருளே. 508

கருநி றக்குயில்நேர் குறக் கன்னியைக் கானகத்தே
முருக னுக்கொருக்கால் மண முடித்த முன்னவனே!
அரும றைத் திரளோடு எணில் ஆகமும்சமமாய்
வருமந் நீர்அநுபூ தியை வலிதளித்தருளே. 509

கண்மைக்கு ணத்திகலோ ரிடை கன்றுமென்றனக்கு
வெண்மைத் திருநீறன் றிடும் வேழக்கைவிகிர்தா!
பெண்மைக்கு மேன்மைஉண்டே எனப் பிறங்கும்
ஔவையைப்போல்
வண்மைத் திருவாக்கு யானுற வலிதளித்தருளே. 510

## 52-ஆம் பத்து

கரிமுகமுந் தோட்டியொடு கயிறவிர்ந்த கைம்மலரும்
தெரியவெ ளக் குள்ளொருக்காற் சீராடும் செம்மலையே!
விரிகடற்பா ருலகறிய மெய்ந்நிறைசற் றேனுமிலா
அரிவையரும் நக்கிகழும் அவமானம் சகிக்கரிதே. 511

தேடரிய பிரணவத்தாற் சித்தாடும் சித்தரெலாம்
நாடமறைத் தலைநிலையம் நவின்றருளும் நால்வாயே
பீடனந்தம் பெறவேட்டுப் பிழைதவிர்ந்தோர் வேடமிட்டும்
ஆடகமால் கொண்டலையும் அவமானம் சகிக்கரிதே. 512

செம்புகர்ச்சீர் ஆனனத்தில் திகழ்விழிகள் ஒருமூன்றால்
நம்புமவர் இடர்களைந்து நலம்தரும்வி நாயகனே!
பம்புதிடு வருளார்வம் படைத்தவர்கள் போற்றிகழ்ந்து
அம்புவிக்கே பாடுபடும் அவமானம் சகிக்கரிதே. 513

கோணவிளம் பிறைக்கோட்டுக் குஞ்சரமா முகம்நாடிப்
பேணவல்லார் அனைவருக்கும் பிறப்பறுக்கும் பெருமானே!
நாணமின்றிப் பொருளிரந்து நானிலையும்
நவைகண்டீண்(டு)
ஆணவத்தோர் பெரிதேசும் அவமானம் சகிக்கரிதே. 514

விசுதுணைச் செவிக்காலால் விளங்குவளல் லாம்விளைத்தும்
ஈசுரனார் மகவென்றோர் எழிலுருவும் கொளுமெந்தாய்!
பூசுரரா தியரக்கின்பம் புகட்டுதலே விழைவேனை
ஆசுரர்திக் கெங்குமிகழ் அவமானம் சகிக்கரிதே. 515

வெந்தலோ பத்தினர்க்கும் விக்கினம்செய்(து)
ஏனையருக்(கு)
எந்தலோ கமும்மதிக்கும் இசைவிளைக்கும் முன்னவனே!
இந்தலோ கத்தினிடை யான்முயல்கற் கிணாதொன்றால்
அந்தலோ கருமறிந்த அவமானம் சகிக்கரிதே. 516

வெந்தறுகட் கூற்றனைய விறற்றகுவர் இறைமாயத்
கந்தமுறித் தெறிபான்மை சாற்றுமவர்க் கெளியானே!
பைந்தகைய கடற்பாரிற் பகிரங்கத் துளவன்றி
அந்தரங்கத் தினும்தோன்றும் அவமானம் சகிக்கரிதே. 517

நீறுபுனை குறுமுனிக்கும் நெடுவயிரப் படையாற்கும்
ஈறுதவிர் புகழெய்த இரண்டுநதி யளித்தோனே!
தேறுமறைப் பொதுவாகித் திருவருள்வேட் டுழல்வேனை
ஆறுசம யரும்ஏசும் அவமானம் சகிக்கரிதே. 518

துங்கவடி வேற்குமரன் தொழுதுமீரங் காக்குறத்தி
உங்கவனைப் புணர்தரவோர் உம்பலிற்போம் உரவோனே!
செங்கமலக் கண்ணான்நேர் சீர்பெறவேட் டதற்கான
அங்கமின்றித் தடுமாறும் அவமானம் சகிக்கரிதே. 519

செவ்வையுறு முண்விட்டுத் தினந்தொறும் போற்றிசைப்பாரைக்
கெளவையறத் தொடர்ந்தாளும் கணபதியெம்
பெருமானே!
இவ்வையத் தனைவோரும் எமையுமொரு பொருட்படுத்த
ஔவையெனும் பயன்வேட்டேற் கவமானம் சகிக்கரிதே. 520

## 53-ஆம் பத்து

பன்னுமறைத் தலைப்பொறியின் நடுநின் றாடும்
பவளநிறக் குஞ்சரமே! பணிந்து போற்றும்
என்னுள்உரைத் துள்ளமொழி மறந்திட் டாயோ?
இகபரசா தனம்குறிப்ப(து) ஈந் தானோ?
பொன்னுமரி தாய்ப்பெரி(து) யா றளர லாமோ
பூமிமுதற் றிகழ்தருமைம் பூதக்கூறாம்
மன்னுமண்ட கோடிகள்முற் றடக்கும் பார
வயிற்றானை யென்னைஇன்னே வாழ்விப்பாயே. 521

கழுதினினத் தொடுமுதுகாட் டாடும் பெம்மான்
கருணையி னூடுதித்தகண பதிப்பெம் மானே!
அழுதுருகி வழிபாடு செயுமா றோரேன்
ஆசைநெடுங் கடற்சுழியில் அமிழ்ந்து சோர்வேன்
பழுதில்பர ஞானமும்என் சித்து மேய
பழவடியா ரொடுகூட்டப் பாடாதென் றெள்ளேல்
வழுவில்பிர ணவப்பொருள்நீ என்றே தேறும்
மகரானை என்னைஇன்னே வாழ்விப் பாயே. 522

எல்லவரும் முதற்போற்றச் சந்தி தோறும்
எந்தநக ரினும்குலவும் யானைக் கன்றே!
கல்லனைய மனப்பொல்லார் பொருள்ஏற் றுள்ளம்
கலங்குதுயர்க் கடலிடைவெங் காமன் சேனைப்
பல்லவக்கண் களுமாய்த் தவிக்கின் றேனைப்
பார்த்திலையோ இன்னுமழப் படுத்த வேண்டாம்
வல்லவையும் சித்தியும்புத் தியும்நல் கின்ப
வளனானை என்னையின்னே வாழ்விப் பாயே. 523

துண்டரிகக் கரிமுகனைக் கடிந்து நாளும்
தொழுமமரர்க் கருள்புரிந்த தும்பி யப்பா!
ஒண்டமிழால் எத்தனையோ தொழும்பர் உய்ந்த
உலகிடையான் ஒருவனிங்ஙன் உணங்க லாமோ?
அண்டர்புகழ் துறவுடனில் லறமும் கூட்டி
அனுபவிக்கும் பெருஞ்சுவையும் அமைத்தில் லாயோ
வண்டலம்பு கொன்றையந்தார்ச் சடைமேல் வைத்த
மதியானை என்னையின்னே வாழ்விப் பாயே. 524

தீமுகத்தா னவனையெடுத்(து) அருந்தி விண்ணோர்
தியக்கமறுத் தாளுமுதற் றெய்வக் குன்றே!
சோமுகற்சாய்த் தவன்செயும் சூத் துவந்த நாளோர்
சுடராழி யளித்தபுகழ் சொற்றில் லேனோ?

ஆமுகத்தான் முதற்றிகழ்பல் கணத்தூ டெந்நாள்
அமைக்குதியோ அறிகில்லேன் அரந்தைக் காற்றேன்
மாமுகம்விட் டொருகரத்தில் அமைந்த கூர்வெண்
மருப்பானை என்னையின்னே வாழ்விப் பாயே. 525

ஏகபரம் என் பார்க்கும் பலபல்கோடி
என்பார்க்கும் பொதுவாகி இமையா முக்கண்
நாகமுகத் தொடுசெக்கார் இடும்பிண் ணாக்கு
நண்ணியுறை வாய்எளிது நயந்தன் றாண்ட
தாகமிநாள் இன்றுகொல்என் செய்வேன் அந்தோ
சகலவுல கிளிற்றலைவர் தாமும்ஊர் எவ்
வாகனமும் நடுங்கஉரு மிடும்கார் ஆகு
வலியானை என்னையின்னே வாழ்விப் பாயே. 526

காதேநின் றெழுகாலால் உலகம் செய்த
கருணையறி யார்க்குமருள் களிற்றம் மானே!
நீதேமிக் கிழைக்குமவர் குடைக்கீழ் வாடும்
திடுக்கமொரு கணத்தொழிக்கும் திறமில் லாயோ
நீதேயும் மலைச்சிகரி முகப்பில் என்பால்
நெஞ்சறியப் பகர்ந்தமொழி நிசமே யாகில்
மாதேவன் உமையவள்கண் மணக்கும் நின்தாள்
மலரானை என்னையின்னே வாழ்விப் பாயே. 527

அந்தரத்துக் காவலற்கும் கலச யோகி
யாம் அவற்கும் இரண்டுநதி அளித்தன் றாண்ட
தந்தமதக் கரிமுகத்தெம் பெருமஎன் மேற்
தயைசிறிதும் இல்லாயோ சலிப்பில் லானா
வந்துஅனங்கன் பொரும் பெரும்போர் சகிக்கின் றில்லேன்
வளங்குலவு கச்சிநகர் வயின்முற் றோன்றோர்
மைந்தனுக்கும் மெஞ்ஞானப் பொருள்சொல் நின்நால்
வாயானை என்னையின்னே வாழ்விப் பாயே. 528

கலைச்சாரம் அறிபுலவர் முதலிற் போற்றும்
கணபதியைப் பாவளப்பில் கருங்குன் றன்ன
நிலைச்சாரா தரில்ஒருவன் தனையா னாலும்
நிகழ்த்தியவா முடிக்கஎன்பால் நீயுய்கில்லாய் !
மலைச்சாரக் கடம்பனொரு குறத்தி மாலின்
மிகமூழ்கிக் கூவுதலும் வேழ மாய்அம்
மிலைச்சாரல் நிலமுழுதும் நனைத்த தாம்மும்
மதத்தானை என்னையின்னே வாழ்விப் பாயே. 529

தளவநகைப் பாவையர்க்கோர் குலதே வாகும்
தமிழ்க்கிழவி தன்னைவெள்ளிச் சயிலத் துய்த்துக்
கிளர்புகழ்சூ டியமுதல்வா! உன்னை நாயேன்
கெஞ்சுதலும் வீண்போகுமோ கேடி லாற்றல்
விளநகர்நந் தனத்துரைத்த மொழிமெய் யாக
விரிசெவியா திய வனப்பு விராகி யோர்கால்
வளர்துதிக்கை யாற்றிருநீ றணிந்து நல்கும்
வரத்தானை என்னையின்னே வாழ்விப் பாயே. 530

## 54-ஆம் பத்து

பத்திக்குள் யாதும் பயனின்றென் பார்கள் பயந்து வெள்கத்
திக்திக்கும் நின்னருட் சீர்தரு வாய் மிகச் சிந்தை நொந்தேன்
எத்திக்கும் எந்நகர்ச் சந்திகள்தோறும் இனிய வுண்டு
சித்திக்கும் முத்திக்கும் வித்தாகி நின்றதொர் செங்களிறே. 531

பாதகர் தம்குடை நீழலிற் பட்டுப் பதைக்கும் என்பால்
ஆதரத் தோடன் றருணா புரியில் அறைதல் பொய்யோ?
வேதனைப் பெற்றுப் புவனங்கள் யாவும் விளக்கியருள்
சீதரன் கூத்துவந் தன்றாழி நல்கிய செங்களிறே. 532

கவலையிற்பட்டுப் பலவாறு வாடிக் கலங்குறு நான்
தவ பயன் பெற்றுக் களிகூரச் செய்யும் தகுதியின்றோ?
புவனமொ டாருயிர் எல்லாம் பயந்தபொற் பூவைபணர்
சிவபெரு மான்முதற் பேறாகித் தோன்றிய செங்களிறே. 533

இக்கண மேசற் றருள்கூர வேண்டுமென் றெத்தனைநாள்
முக்கனிச் சாறன்ன பாடல்சொன் னேனச்சற்று முன்னிலையே
மைக்கரு மேனிப் பிடிநேர்வல்லை மகிழ்வந்திச்
செக்கரைப் போன்று பிறைசூடி யாடிய செங்களிறே. 534

வெறுத்தவற் றைப்பின்னு மிச்சித்து வாட விடுத்தனையாற்
பொறுத்தமை யாப்பெருந் துன்பமுற் றோனருட் போதம்நல்கா
அறுத்தவெண் டிங்கட் பிளவன்ன கோடொடான் றவிர்
முகத்திற்
சிறுத்தமுக் கண்ணிமை யாவரை போன்றவிர் செங்களிறே. 535

அந்தரத் தோரும் நிலத்தோரும் போற்றிசைக்
காசையுற்றுன்
வந்தனை செய்யும் பணியாது மின்றி மடியவிடேல்!
சந்தனக் காவுடைத் தென்றல்வெற் பாரும் தமிழ்முனிநேர்
செந்தகை மாதவத் தோர்முதற் றாழ்புகழ்ச் செங்களிறே. 536

வந்தூரு மாரன் கணைபாயப் பாய மனம்சிதறி
அந்தூரும் நெல்லில் மெலியாத வாறென்
றருள்செய்வையோ
முந்தூர் அனந்தத்தின் மும்மதம் சிந்தி முழங்கியுலாம்
சிந்தூர நெற்றிக் களிறுயாவும் நாணெழிற் செங்களிறே. 537

பம்புவிண் ணோர்களும் கொண்டாடத் தக்க
பரிசளித்துயான்
வெம்புறச் சூழும் மிடிநோய்முற் றீர்தர வெங்கலென்றோ
அம்புவி வாழ்குறு மாமுனி யோடரி யும்உய்யச்
செம்புபொன் தோயிரு மாநதி யீந்தருள் செங்களிறே. 538

காந்தமி ரும்பைக் கவர்ந்தாங் கெனைநின் கழல்கவா தற்கு
ஆந்தவம் செய்திலன் என்றாலும் என்னை யகற்றிவிடேல்
பாந்தன் எனாவெகுள் கானக் குறத்திதன் பால்மருண்ட
சேந்தன் மகிழத் தினைப்புனத் தேமிளிர் செங்களிறே. 539

அவ்வாயுவ் வாய்மவ்வு மாகும்பிரணவத் தாடுமுன்னை
வெளவார்ஒத் தியானும் வருந்துகின் றேன்என்று
வாழ்விப்பையோ
ஒவ்வாச் சமயங்கள் எல்லாம்கைக் கொள்ளும் உரைவகுத்த
செவ்வாய்க் கிழவிக் கருட்பேறு நல்கிய செங்களிறே. 540

## 55-ஆம் பத்து

மன்றகத்தில் நடமாடும் மாதேவன் மாதவத்தால்
அன்றமலை மகவாகும் ஆனைமுகத் தம்மானே!
நன்றனைத்தும் மேலோங்க நவைமுழுதும் கெடமுயலும்
என்றவத்திற் கிகலாய இடையூறு தீர்த்தருளே. 541

தானமெனும் பேரருவி தழைத்துவரச் சயிலமென
நானறியச் சிலகால் என் நவைமனத்தும் அவிர்ந்தோனே!
பானலங்கட் பேதையரைப் பார்த்துருகும் படிநாளும்
ஈனமதன் சமராடும் இடையூறு தீர்த்தருளே. 542

பொன்னானை மாமுகத்திற் புகர்பொலிவும் உடையானே!
முன்னாவான் என்னஅருள் முப்போதும் அவிர்வானே!
நன்னாவற் றீவுமுற்றும் நலிவொழிய முயல்வேனுக்(கு)
இன்னாச்செய் மிடியாய இடையூறு தீர்த்தருளே. 543

காதலுறும் வலவைமனம் களிகூர நடமாடி
ஆதவனைப் பாம்பொன்றால் அகட்டசக்கும் அணியோனே!
போதபர மானந்தம் பொருந்தமுயன் றுள்ளேனை
ஏதமுற நனிசூழும் இடையூறு தீர்த்தருளே. 544

மைக்கணநா யகர்பலரும் வழிபடுமோர் அரசாகித்
தெக்கணத்தான் நடுநடுங்கச் சீர்ஆகுப் பரியூர் வாய்!
பொக்கணவெண் ணீற்றணிதோட் புனிதர்பலர் புடைசூழ
இக்கணம்என் எதிர்தோன்றி இடையூறு தீர்த்தருளே. 545

பைந்தகைய நெடுமேனிப் பரந்தாமன் கரத்தாழி
அந்தண்நெடுங் கச்சியிலன் அளித்தவன்கூத் துவந்தோனே
சிந்தனையிற் குறித்தபடி சித்தாடல் விழைகின்றேன்
எந்தவிதத் தானாலும் இடையூறு தீர்த்தருளே. 546

விள்ளரும்சீர்ப் பிரணவத்தால் வேதங்கள் மிகநல்கிக்
கொள்ளஉண வளிப்பார்தம் குறைதவிர்க்கும் கோமானே!
கள்ளமனப் புன்மனத்தோர் களிமறவால் நனிகூறும்
எள்ளலெனைத் தொடராமல் இடையூறு தீர்த்தருளே. 547

ஒருமருப்பால் ஒன்னலன்தம் உயிர்குடித்து மற்றொன்றாற்
திருமருவு பாரதப்போர் சிறப்பெழுதும் சிந்துரமே!
மருமவிதண் பொழிற்பொதியை மாமுனிக்கும் இந்திரர்க்கும்
இருநதியீந் தனையெனில் என்இடையூறு தீர்த்தருளே. 548

திசைத்தொகையின் பற்பலவூர்த் தெருத்தோறும் இரந்துபெரு
நசைத்தகையார் வேண்டுவன நல்கியருள் நால்வாயே!
வசைத்தழற்கஞ் சாக்குகன்உள் மகிழ்கூர மறக்கொடியை
இசைத்தமைசொல் வேன்விரைந்தென் இடையூறு தீர்த்தருளே. 549

காற்றியலச் செவிவீசிக் கடமூன்றும் பொழிந்தொருக்காலை
தோற்றியெனக் கருளறியத் துதிக்கைநீ றணிந்தோனே
மாற்றியலும் தனிவெள்ளி வரைத்தலையில் ஔவையன்(று)
ஏற்றியதுண் டெனில்இன்றென் இடையூறு தீர்த்தருளே. 550

## 56-ஆம் பத்து

வண்டலழ்ப்பாப் புலவர்முன்னாள் பெறும்பேற்றுள்
யாதுமெய்த வழங்கு கில்லாய்!
கண்டவரும் கேட்டவரும் நகைத்திகழத்
தளர்கின்றேன் கருணை யின்றோ
கொண்டல்வண்ணன் நிகர்சோழன் உரைப்படிபற்
பலவூரார் குவித்த வாய
சுண்டல்வடை மோதகம்ஆ தியபலவும்
கணங்கவர்பொற் றுதிக்கை யானே. 551

ஆதிமுதல் நீயெனநன் கறிந்துவழி
பாடுசெய்யும் அடிய னேனை
மோதினிமா னிடர்வியக்கத் தகும்பேறொன்
றேனும்நல்கி விரும்பொண் ணாதோ
காதியுண்ணும் தொழில்மறவாக் கனலவுணன்
தனைவிழுங்கக் கடிது பற்றும்
சோதிமணிப் பவளநெடும் பனையேபோற்
றிகழ்தருசீர்த் துதிக்கை யானே. 552

பன்னருஞ்சீர்பல குலவுமோக மின்னார்
தருமோகப் பரவை யூடுற்(று)
இன்னலெய்தும் கொடியேனுக் கிகபரசா
தனத்தினிச்சை ஈந்தோன் ஆரோ?
முன்னமொரு கன்னுகைக்குப் பருவம்வருத்
துபுகலந்த முனிசேய் வாயால்
சொன்னகதை யத்தனையும் சுவணவரைப்
புறத்தெழுதும் துதிக்கை யானே. 553

மாண்டிடற்கும் பிறந்திடற்கும் அஞ்சுமென்னுட்
பகலால்நீ வந்தில் லாயோ
வேண்டியபே றொன்றேனும் இக்கணத்தென்
றற்கருள விரும்பாதேனோ
பாண்டியனால் வளர்ந்ததமிழ்க் குடவரயாணி
யெனச்சதுரர் பகர்தீம் பாடல்
தூண்டியுல குயச்சோழன் புகழ்பெறச் செய்
தவிர்பெரிய துதிக்கை யானே. 554

பாகசா தனன்முதலோர்க் கெய்தரிய
பெருங்கீர்த்தி பரிக்க வேட்டு
நாகவாய்த் தேரையென நான்வருந்தப்
படுத்துவது ஞாயந் தானோ
ரேகமாய்ப் பலவாகும் பிரணவத்தின்
நிசப்பொருளாம் எந்தாய்! ஈட்டில்
சோகநோய் தவிர்த்துநெடும் திருமாலுக்
காழியருள் துதிக்கை யானே. 555

கற்பனைப்பா வலர்இனத்தும் கடையாகி
யான்தளர்தல் கண்டுமேனி
பொற்பணமும் நல்காமற் புலர்த்துகின்றாய்!
இதுவும்நிற்கோர் புகழாம் கொல்லோ?

சிற்பரதத் துவமான சிவன்செய்தவப்
பயனாம்சிந் துரமே! தீயேன்
சொற்பனத்துற் றொருக்கால்நன் நுதலிடைநீ
றணிந்தநுனித் துதிக்கை யானே. 556

காயகநெஞ் சகக்கொடியோர் குடைநிழலிற்
பரதவிக்கும் கடைய னேனை
மாயனெனக் களிகூர வைத்தருளத்
தக்கபெரு வலியில் லாயோ
தீயகுணத் தொருபகைவன் எனைச்செகுப்பான்
விடத்தோன்றித் தேவர் காணத்
தூயபுனற் றிவலையினால் ஒருங்குமுழுக்
காட்டியசெந் துதிக்கை யானே. 557

கல்கமலப் பெருக்குதவ வேண்டிமிகத்
தவமுயலும் கருத்தி னேனை
வல்கடுக்கு முலைக்கபட மங்கையர்மா
யையிலமிழ்த்தி வருத்த லாமோ
மல்கணிப்பைம் பொழிற்பொதியை மாதவனும்
பொன்னுலகின் மன்னு மாய
தொல்கடவு ளாரிருவர்க் கிருநதியீந்
தருள்மகிமைத் துதிக்கை யானே. 558

முராரியெனப் பூதலத்தில் வாழ்ந்ததற்பின்
மதிக்கொழுந்து முடிக்கும் சென்னிப்
புராரியென வானுலகில் வாழவைப்பேன்
எனுமுறுதி புகன்ற தாரோ?
கராரிநிகர் வில்லியர்தம் கண்ணனைய
பெண்ணமுதைக் கானத் தந்நாள்
சுராரியர்கூற் றாங்குகற்கு மணமுடித்தாய்
அருள்நிலைநேர் துதிக்கை யானே. 559

பற்குனனும் மாயனும்போன் இருதவத்தோர்
இவ்வுலகிற் பாவம் யாவும்
அற்கவிளை யாடுநலம் காணின்அன்றி
மகிழேனென் றறிவா யன்றோ
விற்கொடியோன் முதல்மூவர் விழிகாணத்
தறிபழுக்கும் விநோதம் காட்டும்
சொற்கிழவி தனைக்கயிலை மலைமேலன்
றெடுத்துவிடும் துதிக்கை யானே. 560

## 57-ஆம் பத்து

எந்தவேளையும் என்மனத்திடை எண்ணில்வெந்துயர் ஈவதாம்
இந்தவேதனை தீர்ந்துனமைமய்யருள ஈந்திடச்சிறி தெனணுவாய்!
அந்தகனபி மாமதனகெட அட்டுமீட்டருள் நிபாற
கந்தனுக்குமுன் வந்துதித்தமதார் கண்ணுதற்கண நாதனே. 561

பாறபணம்பொருள் எனநாடிய புல்லிறகடை யாகியே
அறபர்வாயில்கள் தோறுமஏனை ஆளவலலைகொல்
அல்லையோ
பறபமிக்கணி வார்களேபெறப் பரிசும்நல்கிய பணபுசால்
கற்பகம்புரை கைகள் ஐந்துடைக் கணணுதற் கணநாதனே. 562

தாமநாபியங் கொண்டவினபுறச் சக்கரப்படை தந்தநீ
மவெற்பினொர் துணைஎனக்கிடில் யாவர்நிற்றடுப் பார்களோ
கோமளக்குயி லனைசிர்கொடு கொங்கைபாறபாரு
கினறதோர்
காமர்வல்லவை பாகம்மவிய கண்ணுதற்கண நாதனே. 563

சங்கையின்றிய நாயை நிகர் தன்மையேனதனைத்
தளளடா(து)
அங்கையிற்சிறந் துள்ளதாலவலி தனறுதொடடமெய்
பொய்க்குமோ
நங்கைபங்கனி லாத்திகூவிளம் நாகமத்தம்வி ளாமதி
கங்கையாதிய சூடுவார்சடைக்கண்ணுதற்கண நாதனே. 564

பண்ட சோதைவ ளர்த்தமால்புரை பான்மைநாடிய பாவியேன
தொண்டர்தாள்மலர் தந்தைநதலைகத தூள்புனைந்ததோர்
தோடமோ
சண்டனோர்பகற போதுதந்த தட றகுனறேயெனத் தகுமுடற்
கணடகன்தனை யுணடவண்புகழ்க் கண்ணுதற்கண நாதனே.
565

செய்ப நகம லத்திலவைகிய செலவி தனமயல் தீமையால்
ஐயகோஎனக கூவெனஒதைநி னாணறகாதுளஉ றாததோ
மெய்யர்செய்துதி யாதியேறறபின வெஃகொணாதன
வெளவுபுன்
கையர்தம்வழி பாடும்ஏற்றருள கணணுதற்கண நாதனே. 566

அன்றுநின் றுதிக் கையில்நீர் முழுக் காடுமெய்பொய் யாகுமேல்
என்றும்வீட் டொடு பந்தமின்றெனும் ஈனர்வாதினுக்
கென்செய்வேன்
குன்றுபோற்பல உண்டியிட்டபின் குட்டிக்கொண்டிசை கூறுவார்
கன்றுறா தாிக் கின்றவீ றுடைக் கண்ணுதற்கண நாதனே
567

பொய்யி னாற்றளர் வெய்துநானருட் போதவாழ்வுடைப்
புண்ணியர்
மெய்யினாற்களி கூரும்நாள்வரு விக்கவல்லைகொல் ஐயகோ!
மையிலூர்பவ னுக்கும்வாரிதி மாந்தினாற்குமுன் வண்புழைக்
கையினாலிரண் டாறளித்தருள் கண்ணுதற்கண நாதனே. 568

தானமால்கரி யாகிவந்தொரு சத்தியம்பகர்ந் துள்ளநீ
ஏனவாறுசெ யாதிருந்தனை ஈனர்நிந்தை யினித்ததோ
மானவேற்படைக் கந்தவேள்அதி மையலாகிவ ருந்தும்நாள்
கானவேட்டுவக் கன்னியின்பருள் கண்ணுதற்கண நாதனே. 569

மயிலனார்முத லாயவேடனை வாய்மயங்கும னத்தினால்
வெயிலினிற்புழு வென்றுசோருமென் மீதெநாளருள்
பெய்வையோ
பயிலுமுத்தமிழ்ப் பாவலோர்புகழ் பாட்டியுய்வுறப் பண்டுவெண்
கயிலைமால்வரைச் சென்னிமேல்விடும் கண்ணுதற்கண நாதனே.
570

## 58-ஆம் பத்து

பாகுவொப் பாமொழிப் பாவையர் மையலிற்பதைக்கும்
பொல்லேனை
ஒகுணர் மெய்யடி யரொடு கூடிமிக்(கு) ஒளிரச் செய்தருள்வாய்!
வாகுவ லிக்கொடுந் தானவர் தம்பெருமன்ன னாவாழ்ந்த
ஆகுவி லேறியு லாவரு சீர்திகழ்ஐந்துக ரக்களிறே. 571

மானைநி கர்த்தவி ழிச்சியர் பார்வையில் மாழ்கி நேர்வேற்கும்
வானைய ளிப்பவ ரும்புக ழுந்திறம் வழங்க வல்லாயோ
தானையு டுத்தப சுங்கிளி யன்னவள் தாங்கி நின்றாடி
யானைமு கத்தினன் மதம்பொழி வெற்புறழ் ஐந்துக ரக்களிறே.
572

பொங்குமி டிக்கட லிற்றனித் துள்ளகம் புழுங்குகின்றேனை
எங்கும்மெச் சும்படி நின்னருள் வாரிதி இடத்திற் றோய்த்
தருள்வாய்!

கங்குலு டன்பக லுந்துதிக் கின்றவர் கலியின் வேர்களைந்திட்(டு)
அங்குச பாசம்அ ணிந்துகு லாவிய ஐந்துக ரக்களிறே. 573

காரணம் நீயென நன்குண ராதுபல் காரி யங்கருதிச்
சீரணம் எய்துகின் றேனைநின் னன்பரிற் சேர வைத்தருள்வாய்
நாரணன் நான்முகன் ஆதிய வானவர் நவைமுற் றும்தவிர்ப்பான்
ஆரணத் தின்முகத் தோர்பொறி யாவளர் ஐந்துக ரக்களிறே.
574

பொற்புறு மங்கையர் ஆதிய வேடணைப் பொருத்த
மேவிழைவேன்
மற்புரி தோள்வய வீரரும் ஒல்குமெய் வாழ்வென் றெய்துவனோ
கற்புடைப் பாவையர் தாமெனத் தன்கழல் கருதும் அன்பர்
தம்பால்
அற்புத லீலைய னந்தமென் றும்செயும் ஐந்துக ரக்களிறே. 575

பாதகர் புன்குடை நீழலிற் புண்படும் படிற்று நெஞ்சேனுக்(கு)
ஏதமுற் றும்தவிர்த் துன்னடி யாரிடை யிருக்கும்
பேறருள்வாய்!
வேதமும் ஆகம மாதிய நூல்களும் விரும்பிப் போற்றியசீர்
ஆதவன் முற்பகர் முச்சுடர்க் கண்கொளும் ஐந்துக ரக்களிறே.
576

வண்டமிழ்ப்பாடல்க ளால்உனைச்சந்ததம்வழுத்து கின்றேனைக்
கண்டவர் நிந்தனை செய்வதனா லவிழி கலங்கப் பண்ணாதே
கொண்டமு யற்சிமுற் றுப்பெற மானிடர் குழுவும்
தானவரோ(டு)
அண்டரும் மாதவ ரும்தினம் நாடிய ஐந்துக ரக்களிறே. 577

நாறிய நாண்மல ரால்அருச் சித்துனை நண்ணும் புண்ணியர்தம்
பேறிலொர் எள்ளள வாயினும் நான்பெறப் பேணி நல்காயோ
வீறிய கும்பமு னிக்கும்விண் ணோட்டினர் வேந்துக் கும்துயர்
தீர்த்து
ஆறிரண் டன்றளிக் கும்புகழ்ச் சீர்புணர் ஐந்துக ரக்களிறே. 578

பஞ்சமும் மாயையு மாகிய தீவினைப் பயனொ ராயிரத்தால்
வஞ்சமொர் எள்ளள வேனுமி லாஎனை வருத்த லென்றொழி
வாய்!
வெஞ்சர மாரிபெ யாயிரம் விற்கொள் ஓர்வீரற்
கொன்றானுக் (கு)
அஞ்சனக் கண்மற மங்கையின் பந்தரும் ஐந்துக ரக்களிறே. 579

இவ்வையம் முற்றறி யும்படி பொன்மலை யிற்றுண்
டொன்றெனக் கீந்து
எவ்வையகத் தோரும் மதிக்கரும் மெய்க்கதி யிடத்தில்
என்றமைப்பாய்
கொல்வைமிக் கெய்தலின் மென்மலர்ப் பூசனை கடிது
செய்தவளாம்
ஔவையை வெள்ளிம லைத்தலை யுய்த்தருள் ஐந்துக
ரக்களிறே. 580

## 59-ஆம் பத்து

அங்கையி லேற்றுநு கர்ந்திடு மாதவர் அனையமெய்
வடிவுற்றும்
கொங்கைவ யச்சம ராடும டைந்தையர் கோரணி
தீர்கில்லேன்
மங்கையர் பாகம மைந்தும யக்கம விந்தவ ிற்றலைமேற்
கங்கைய ணிந்தபி ரான்அரு ளால்வரு கணபதி யப்பாவே. 581

புட்சிற கற்றுழல் கின்றது போன்றுபல் போகவி
ருப்பியடையாழ்ந்து
அட்சமி கப்புனல் சிந்திட நோதல்அ கற்றவல் லாயலையோ
எட்செயு ருண்டைமு தற்பல உண்டிக ளிட்டவ
யிற்றிடையோர்
கட்செவி யைக்கொடி றுக்கிய சீர்திகழ் கணபதி யப்பாவே. 582

பானல்வி ழிச்சசி கேள்வர னேகர் பழிச்சிவ ணங்கொருகோ
வானமு ராரியும் மெச்சிடு மாண்மைய வாவுவதென்
செயலோ
தேனவிழ் தாமரை நாண்மலர் மேயசி கைப்பனவன்பகரும்
கானம றைத்தலை மீதினி தாடிய கணபதி யப்பாவே. 583

தேன்மலி கொன்றைமு தற்பல பூவகை சிந்திவ ழுத்துகிலார்
போன்மயல் வாரிதி யுட்படு தீவினை போம்வகை
என்றருள்வாய்
நான்முகர் தம்சிகை நாரணர் பைங்குழல் நக்கர்நெ
டும்சடைதோய்
கான்மல ரின்துணை கைம்மலர் ஐந்துகொள் கணபதி
யப்பாவே. 584

பண்டைவி னைக்கயர் நெஞ்சமு னாதுப தத்துணை
யேகருதிச்
சண்டைசெய் காலன்மு தற்பகை யஞ்சுத வம்பெறல்
எத்தினமோ
உண்டைப டும்பல மோதக மிட்டறு (கு) ஒன்றஅ
ணிந்தொருகைக்
கண்டை மிழற்றுநர் பூசைவி ரும்புறு கணபதி யப்பாவே. 585

வீங்குமு லைச்சிறு வல்லவை யாதிய மெல்லியர் மூவரும்நின்
பாங்குறை யும்படி வந்தென தாசை பலிக்கும்வி தம்புரிவாய்!
ஆங்குறு மோர்அய மேருவி தென்னஅ விர்ந்திடி போல்உருமும்
தாங்குநி றத்தனி மூடிக மீதிவிர் கணபதி யப்பாவே. 586

பொற்பண மேகதி யென்றுநி னைந்துபு லர்ந்திடு பூரியர்போல்
இற்படு மென்னையுன் நின்னடி யாருள் இருத்துவ
தெக்கணமோ
சிற்பர யோக சிவோக நிராமய சீலர்பெ றும்படியே
கற்பனையற்றசு காநுப வந்தரு கணபதி யப்பாவே. 587

பாவிம தப்பயல் வாளிகள் வந்து படப்பட நின்பதம்விட்(டு)
ஓவிய மேநிகர் மங்கையர் கொங்கைகள் உண்ணுவ
தென்றொழிவேன்
தாவில்ம ருத்துவ னும்குறு மாமுனி தானும்உ வப்புறமுன்
காவிரி யும்பொரு நாநதி யும்தரு கணபதி யப்பாவே. 588

பைந்தமி ழின்கவி யாலுனை நன்குப ழிச்சியும் நின்னருளே
எந்தவ கைக்கும்ஒ ரேதுணை யென்றுணர் ஈடருள் கின்றிலையே
வந்தனை செய்தகு கற்கிசை யாத மறக்கொடி அச்சுறவோர்
கந்தம தக்களி றாகிவ னம்புகு கணபதி யப்பாவே. 589

செவ்வைய தாயம னத்தினர் பற்பலர் சீரழி யத்தகுநாள்
இவ்வைய மீதெனை யேனுற விட்டனை என்றருள் ஈகுவையோ
கொவ்வையி தழ்ப்பர வைக்கொடி கோனொரு குஞ்சர
மேறியதாற்
கௌவையு றுந்தமிழ் ஔவையு யப்புரி கணபதியப்பாவே. 590

## 60-ஆம் பத்து

விடியா இரவென் னமிடிப் பிணிதீர்த்(து)
ஒடியாத சுகம்தர உன்னிடுவாய்!
மடியாத வரம்பெறு மாதவமெய்
அடியார் உணர்ஐந் துகரத்தரசே. 591

கூகூ வென்ஓ லிடுகோ ரமொழித்
தேகூ ற்றாமின் பமிகத் தருவாய்!
பாகூ றியசொற் சிலைவபால் அமுதுண்(டு)
ஆகூர் தருமைந் துகரத் தரசே. 592

துணிவுற் றுய[illegible]காண் டர்பதத் துகள்மாண்(பு)
எணிநிற் குமெய்யர்க் கருள்என் றருள்வாய்!
பணிவக் கரணா தியபற் பலர்போற்(று)
அணிமிக் குறுமைந் துகரத் தரசே. 593

இருள்மிக் குறும்ஊனரிடத் தவர்கைப்
பொருளிச் சையெலாம் பொலியா தருள்வாய்!
தெருள்சொற் றுதிசெய் பவர்சிந் தைவிருப்(பு)
அருளித் திகழ்ஐந் துகரத் தரசே. 594

வியனார் கலிவே ரறஎன் றுனருட்
செயல்கண் டுசெயம் பெறுநா ளிலையோ
கயமா முகமா தியகாட் டினும்மற்(று)
அயலின் றவிர்ஐந் துகரத் தரசே. 595

சுகிர்தம் புரிதொண் டரினத் தின்மனத்
திகிலின் றியிருப் பதுசெய் தருள்வாய்!
மகிழந் துணர்மா லிகையால் மகிழ்போர்
அகிலந் தொழும்ஐந் துகரத் தரசே. 596

கரவின் றிய நெஞ்சுகளித் துனையே
இரவும் பகலும் கருதென் னைவிடேல்
பரவும் பலபைம் பொன்மணிப் பணியோ(டு)
அரவும் புனைஐந் துகரத் தரசே. 597

கூறிட் டமனம் களிகூ ரமுன்வெண்
ணை றிட் டநிசம் பழுதாய் விடுமோ
சேறிட் டறியா இருதிவ்வியபே
ராறிட் டருள்ஐந் துகரத் தரசே. 598

கணைபோல் விழியார் தருகா தலறத்
துணைநாள் மலர்நேர் கழல்சூட் டுவையோ
இணைதீர் எழில்வள் ளியைஎர் கணிவேள்
அணைசேர் செயும்ஐந் துகரத் தரசே. 599

தெளவைக் கலிவா தனைசார் தலினாற்
கௌவைப் படுதீ மைகழித் தருள்வாய்!
செவ்வைத் தமிழ்கொண் டுதிருக் கயிலை
ஔவைக் கருள்ஐந் துகரத் தரசே. 600

## 61-ஆம் பத்து

மங்கை மார்க்குள் மாழ்கி வருந்து தீவினை வசத்தேன்
அங்கை நெல்லியங் கனிபோல் அருள்பெற் றுய்வதென்
றறைவாய்
சங்கை தீர்பல முகமாய்த் தரையும் வானமும் கவரும்
கங்கை சூடிசெய் தவமாம் கணப திப்பெரு மானே. 601

பொய்யை யேமிகப் பேசிப் புலையு மாடிடும் பொல்லார்
மெய்யை யும்துதிக் கின்றேன் வினைமுற் றென்றற வெல்வாய்!
செய்யை கோன்முதற் றேவர் இடுக்கம் தீர்தரக் காக்கும்
கையைந் தொன்றிய மலைநேர் கணப திப்பெரு மானே. 602

சீல மில்லவர் பாலும் சென்று சென்றுளந் தேங்கிச்
சால வாடுறு மென்னைத் தவத்த ரோடுற வைப்பாய்!
மூல கார ண மாகி முதற்செய் பூசனை கொளலாற்
கால காலனும் போற்றும் கணப திப்பெரு மானே. 603

அந்தி யச்சம யத்தோர்க் கஞ்சி யொடுங்கும் அடியேன்
தன்னி டத்தில்அன் றோதும் சரதம் தவறு வாயோ
வன்னி கூவிளம் கொன்றை மத்தம் அறுகு முடித்துக்
கன்னி வல்லவை தோள்சேர் கணப திப்பெரு மானே. 604

பாதி வெண்மதி சூடிப் பருத்த ஆகுவில் ஏறித்
தீதில் பேறருள் செய்வான் சிறிய னேன்எதிர் திகழ்வாய்
மேதி யான்விடும் தூதர் வெள்கப் பற்பல உயிர்கட்
காதி யுண்பவர் போற்றாக் கணப திப்பெரு மானே. 605

அருணை யூரில்அன் றென்பால் அறைந்த வாவினை யாடத்
தருண மீதெனத் தெரிவாய் தாம தம்செய லாமோ
வருண ஆச்சிர மம்தீர் மாத வத்தினர் வாழக்
கருணை மும்மதம் பொழியும் கணப திப்பெரு மானே. 606

தெளித்த நெஞ்சுடைப்பெரியோர் செப்பு நூற்பொருள் தேரேன்
வெளிற்று நீற்றரு ளாடல் விழைந்துள்ளேனைவி லக்கேல்!
விளித்துத் துதித்துப் பூசை வேண வாறுசெய் வாருட்
களிற்று ருக்கொடு தோற்றும் கணப திப்பெரு மானே. 607

கும்ப மாமுனி வோனும் கொண்டல் வாகனத் தானும்
நம்ப ஆறிரண் டந்தாய்! நானு முய்யஒன் றருள்வாய்!
உம்பல் மாமுகம் நாடி யுருகும் தொண்டரை யெல்லாம்
கம்ப லைதவிர்த் தாளும் கணப திப்பெரு மானே. 608

தந்த மால்கரி நாகித் தமிய னேன்நெஞ் சிடைபல்கால்
வந்த தன்பரா றிந்த மறுக்கம் தானென லாமோ
அந்தண் ஏனலிற் குயிலே யனைய வள்ளியை அன்பாற்
கந்த னுய்வுறச் சேர்த்த கணப திப்பெரு மானே. 609

அயிலை நேர்விழி மானார் ஆதி யேடனை யாய
வெயிலை மென்புழுப் போல்என் மீது நீவிட லாமோ
பயிலு முத்தமிழ்ச் சீர்சால் பழைய கிழவி தன்னைக்
கயிலை வெற்பினில் விட்ட கணப திப்பெரு மானே. 610

## 62-ஆம் பத்து

நீதியறி யாதமுழு நீசர்குடை நிழலில்
தீதியலும் என்கவலை தீரஅருள் செய்வாய்
மாதிரமும் வானவரும் மானிடரும் வாழப்
பாதிமதி சூடியருள் பரமகண பதியே. 611

தவமுமுழு நீறுபுனை தன்மையுடை யேனும்
இவளவு பெருந்துய ரிடத்துழல லாமோ?
கவளமத வேழமுக மாதிய கவின்கொள்
பவளமலை யேஅனைய பாரகண பதியே. 612

உனையலது வேறுபொருள் ஒன்றும்உண ரேன்மேல்
தினையளவு மெய்யருள் செயக்கருதி டாயோ?
அனைவரும் வெருக்கொள் அன லாசுரனை அனையார்ப்
பனைநிகர் துதிக்கைகொடு பற்றுகண பதியே. 613

வண்டினம் முரன்றமலர் மாலையினும் இன்சொற்
கொண்டினி துன்னன்பரிடை கூறுதுதி கீழோ
உண்டியென உள்ளன ஒருங்குகுடி கொள்ளும்
பண்டியழ கேநனி படைத்தகண பதியே 614

நாசமில் பெரும்புகழ் நலம்பெறுதல் வேட்டுன்
நேசமுறும் என்னிலைமை நீயறிகி லாயோ?
ஆசுகல் கரங்களிலோர் அங்குசமும் வென்றிப்
பாசமும் அணிந்தவள் பயந்த கணபதியே. 615

பொய்யனென ஊரவர் புறத்திகழல் போய்ஓர்
மெய்யனென வேபுகழும் வென்றிபெறு வேனோ
செய்யமணி ஆபரண மும்பினவு திக்கட்
பையரவ மும்பல பரித்தகண பதியே. 616

மாரதர்மு தற்சொல்ஒரு நால்வரும் வணங்கும்
கோரதவ யோகரொடு கூடிமகிழ் வேனோ
பூரதமி வர்ந்தருள் புராரியெதிர் அந்நாள்
பாரதமொர் வெற்பிடை பதித்தகண பதியே. 617

நீலநிற ஆகுமிசை நீயெதிர் குலாவிக்
காலமொடு கன்மமறு கல்வியருள் செய்வாய்!
சீலமுனி வர்க்குஅமர ருக்கிறைவர் தேறப்
பாலனைய ஆறுதவு பாயகண பதியே. 618

பொன்னிகரும் மங்கையர்கள் பொற்புமுலை நாடி
என்னிதய நோந்துய திறப்புரிவ தென்றோ
வன்னிருதர் அஞ்சுஅயில்வ லாற்குமற மாதைப்
பன்னியென நல்கருள் பழுத்தகண பதியே. 619

தாட்டிகமு டைப்பல சமத்தரொடு கூடி
நாட்டிகல் முற்றறு நலம்பெற அமைப்பாய்!
தோட்டிறமை, சொற்றிறமை தோயிருவ ரொல்கப்
பாட்டியையொர் வெற்பில்விடு பாலகண பதியே. 620

## 63-ஆம்பத்து

கடியாடுமலர்ப் பிரமன் தானும் காலால் உலகம்
அளந்தோனும்
பொடியாடும் சிருடைப் பிரானும் போதவருந் தாமல்
எனைப்புரப்பாய்!
கொடியார் நடு நடுங்கச் சீறிக் கோதில் குணத்தோர்கள்
குழுக்கூட்டும்
அடியார் அநேகர் வளர்நெல்லை அனவரத தானவி
நாயகனே. 621

காரண மொன்றுள தெனஎன்பாற் கறிய ருள்கந்த
னுரைநம்பி
நாரணனில் வாழுமிச்சை கொண்டு நான்மெலிதல் நீயறிகி
லாயோ
பூரணப தப்பிரண வத்துட் புக்குலினை யாடுபுகர்க் குன்றே!
ஆரணமு றங்குதிரு நெல்லைநகர் அனவரததானவி
நாயகனே. 622

வேயின்மு ளை யேஅனைய தோளார் வேட்கையிடை
மூழ்கிமிக வெம்பி
நாயினும் கடைப்படுஎன் றனைநின் நல்லடி யாரொ
டமைக்க நண்ணாய்!
காயிரும்பு போற்குலவு மேனிக் கணபதிஎன் றேத்துநரைக்
காப்பாய்!
ஆயிரம்வ ளம்பொலியு நெல்லை அனவரததானவி நாயகனே. 623

வண்டமிழில் பாடல்பல பாடி வாழ்ந்தனர்அ னேகர்எனக்
கேட்டுன்
ஒண்டகைய தாள்வழுத்தும் என்றன் உறுகண்ஒழி
யாதிருப்ப தேனோ
புண்டரிகக் கண்அரிசெய் கூத்திற் போதமகிழ்ந்து
ஆழியருள்புனிதா!
அண்டர்களும் வந்துதொழும் நெல்லை யனவரத தானவி
நாயகனே. 624

கல்லினும் கடுத்தமனத் தோரைக் கண்டுகண்டு பாடல்சில
கழறிப்
புல்லியமி டிப்படுமென் றன்னைப் பொற்புறப்
புரந்தருள்செய் யாயோ
மல்லிலங்கு தோளவுணர் கோவாம் வாரணமொன்
றைக்கடிது மாய்த்தாய்
அல்லிமலர் வாவிமலி நெல்லை அனவரத தானவி
நாயகனே. 625

புற்புதத்து ணைக்குநிகர் கொங்கைப் பூவையர்கள்
ஆசையினும் பொல்லாப்
பொற்புழுக்க முற்றுமற மாற்றிப் போதநலம் ஈந்தருளப்
போதாய்!
கற்புடைய வல்லவைம ணாளா! கைம்மலர்கள்
ஐந்துடைச்செங் கதிரே!
அற்புதம லிந்ததிரு நெல்லை யனவரத தானவி நாயகனே. 626

ஏழுவித மானபல நோயால் இன்னமெலி யாமல் எடுத்
தாண்டு
வாழுமுனி வோர் குழுவி னூடே வைத்தருள வல்லையல்லை
கொல்வோ

தாழும்நெடும் சீர்த்துதிக்கை நீறென் தன்னுதலிற்
நீட்டியதும் தவறோ
ஆழுமறி வாளர்புகழ் நெல்லை அனவரததானவி
நாயகனே. 627

ஏறுபுரை இந்திரனும் [illegible] த் தெய்வினும் பெற்றப்படி
யானும்
விருந்தி யொன்றுபெற வேட்டேன் வேட்கைமுடி யப்புரிய
வேண்டும்
நீறுடன்மணிட்டவர்முன் ஆட நின்றகளி றே! பொதியை
நீத்தத் (து)
ஆறுவரும் சீர்கொள்முது நெல்லை யனவரத தானவிநா
யகனே. 628

இங்களப்பி லார்உயிர் கொன் றுண்பார் யாரும்அது தீர்தல்
செயத் தொட்ட
கங்கணக்கைத் தொண்டனுயிர் மாய்ந்தாற் கண்ணருள்நிற்
குள்ளதெ னலாமோ
செங்கயற் கண் ணம்மைகுற வள்ளி சேந்தனொடு சேர
அருள்செய்த
ஐங்கரக்குன் றே! இனையில்நெல்லை அனவரத தானவிநா
யகனே. 629

தின்றுகக்கும் ஊனருந்து நாய்போற் சீரழிகின்றேனைஒரு
தினம்நீ
நன்றுரைத்துத் தேற்றியமெய் யுண்டேல் நானிலமுற்
றோரஅருள் செய்வாய்!
குன்றுமுற்றும் வெள்கயிலிர் வெள்ளிக் கோலவரைக் கோட்
டில்ஒளவை யாரை
அன்றுவிட்ட வாளமது நெல்லை அனவரத தானவிநா
யகனே. 630

## 64-ஆம் பத்து

பொருள்நலம் குறித்துப் புலர்ந்தேன் ஐயோ
தருண மீதறிந் தேனருள் தந்திலாய்!
கருணை ஞானக் கனிச்சுவை காட்டுவீர்
அருண சுந்தர ஐங்கரத் தானையே. 631

நாத்தி கர்க்கும் நடுங்குறும் நாயினேன்
ஏத்தி டும்துதி யேற்றரு ளாய்கொலோ
சேத்தி லங்கு செழுஞ்சடைச் சென்னிமேல்
ஆத்தி சூடிய ஐங்கரத் தானையே. 632

மற்றை வானவர் நெஞ்சினில் மாமனம்
இற்றைக் காறும்இ ரங்காத(து) என்கொலோ
பொற்றை வில்லி புரிதவப் பேறெனா
அற்றை வந்தவிர் ஐங்கரத் தானையே. 633

கரவு சிந்தைக் கயவரைக் காணுமென்
இரவுத் துன்பமுற் றிரவல் லாயன்றோ
பரவ சாலப் பருத்தவிர் பண்டிமேல்
அரவக் கச்சணி ஐங்கரத் தானையே. 634

கூவ லொன்றுதொட் டுக்குலை யும்பொலேன்
பாவ லங்கற பரித்தருள் பாலிப்பாய்
மாவ ரோதய வல்லவைத் தாய்மகிழ்
ஆவ லேமுயல் ஐங்கரத் தானையே. 635

சுக்கி ரன்சொற் றொழிற்செயும் தூர்த்தரைச்
செக்கில் என்ளிற் சிதைப்பதென் சிந்தைகாண்!
முக்கி யத்தவத் தோர்பெற முத்திவீட்(டு)
ஐக்கி யந்தரும் ஐங்கரத் தானையே. 636

கோகு லம்கத றக்கொல்லும் கொள்கையோர்
சாகு நாள்உதி யாதெனச் சாற்றுவாய்!
பாகு நேருரை பன்னியர் மூவரோ(டு)
ஆகு மேல்வரும் ஐங்கரத் தானையே. 637

மாறி மாறி வரும்பவ வாதனை
நீறி நின்பத நீழலிற் றோய்வனோ
ஈறில் சீர்க்குறு மாமுனிக் கிந்திரற்(கு)
ஆறி ரண்டருள் ஐங்கரத் தானையே. 638

செஞ்சு வைத்தமிழ்ப் பாவலர்சேகரத்(து)
எஞ்சு றாப்புகழ் எய்தஎன் றிலையோ
கொஞ்சு மென்சொற் குறத்தியொர் குன்றரு(கு)
அஞ்சு றச்செலும் ஐங்கரத் தானையே. 639

குமையும் நெஞ்சக் குழப்பமுற் றும்கெடச்
சமையு மெய்நிலைத் தாரகம் நல்குவாய்!
சிமைய வேதண்டத் தின்தலை ஔவைசென்(று)
அமைய முன்விடும் ஐங்கரத் தானையே. 640

### 65-ஆம் பத்து

திண்கன கக்கிரி யிற்பெயர்த் தெற்கொரு
    சிறுதுண் டளிக் குதியேல்
தண்கம லாதனப் புங்கவன் கைவிதி
    தனையும் கடவேனோ?
ஒண்கதி ரோன்பனி மாமதி யங்கிளென்று
    உயர்ந்தோர் பலரோதும்
கண்களோர் மூன்றுடைச் செந்துவர் வெற்புறழ்
    கவினார்கண பதியே. 641

செல்விசெய் திமைக ளாலுல கிற்பல
    செயலும் தடுமாறி
நல்வினை யாளர் உணர்ந்து சலிப்புறும்
    நலிவென் றொழிப்பாயோ?
பல்விர தங்களி னால்இளைத் துத்தவம்
    பண்ணச் சலியார்க்குக்
கல்வியும் செல்வமும் ஞானமும் நல்கிடும்
    கருணைக் கண பதியே. 642

பாதகமேவிளைக் கின்றவர் தம்பெரும்
    பகையால் மனம்வாடி
நோதலொ ழிந்துனைச் சந்ததம் அன்புடன்
    நோக்கும்திற மீவாய்!
மாதவ மேமுயன் றிட்டரு ளானந்த
    வாரிக் கிடைமூழ்கிக்
காதல றப்பெறு ஞானிகளேயுணர்
    காமர்க்கண பதியே. 643

புண்ணிய மெள்ளள வேனுமி லாஎனைப்
    புகுந்தாண்டதோர் புதுமை
எண்ணியெண் ணிக்களி கூரும்என் நெஞ்சகத்
    திடரேன்விளைக் கின்றாய்!
தண்ணிம வெற்பருள் சங்கரி கொண்களிற்
    சடைமேல்மலர் கொன்றைக்
கண்ணிம திப்பிள வோடணி யப்படும்
    கங்கைக்கண பதியே. 644

மெய்குளி ரும்படி நின்துதிக் கைப்புனல
    மேனாள் முழு கிடலாற்
பொய்குறைந் துண்மைம லிந்தும்இவ் வாறுளம்
    புலரச் செயல் எவனோ

செய்குவ சேகரிக் கின் றன வாம்பய
சிற்றுண்டியு மிட்டுக்
கைகுவிக் கின்றவர் தங்களைச் சந்ததம்
காக்கும் கண பதியே. 645

புள்ளகல் வாய்கிழித் தாளிகர் பேறுறப்
போற்றும்தமி யேனுக்(கு)
எள்ளன் மிகக்கொடுத் தாயினி எத்தினம்
இன்பப் பெருக் கீவாய்!
அள்ளல்முந் நீர்ப்புவி அஞ்சன வாசுரன்
ஆதித்தகு வரைநேர்
கள்ளம னக்கய மைக்குரி யார்களைக்
கறுவும் கண பதியே. 646

தென்றல் வரைக்குறு மாமுனி யாதியர்
திகழ்பேரவை யூடே
ஒன்றலும் வேட்டுழைக் கும்தமி யேற்கிவண்
உறுகண்டரல் முறையோ
அன்றல வன்தனக் கின்னல்அ ளித்தரு
ளால்மீட் டினி தாண்டாய்;
கன்றலி லாச்சச்சி தானந்த மும்மதக்
கலுழிக் கண பதியே. 647

நாசமில் நன்னரு ளேவிழைந் தின்புறு
நாயேனிடம் நழுவா
நேசமுற் றார்எவர்க் கும்சுக மேவிட
நீயோர் அணு நினைவாய்;
வாசவ னும்குறு மாமுனி யும்தம்
வருத்தம் தவிர்ந் துய்வான்
காசறும் ஆறிரண் டங்குறிக் கும்படி
கருதும் கண பதியே. 648

உன்னருள் வாரிதி யிற்குளித்(து) உம்பரும்
உவக்கும் செயல் செயவே
என்னது சிந்தைவி ழைந்தமை யோர்ந்தும்இவ்
இடர்என் இழைக் கின்றாய்!
மின்னரு வேலவ னைத்தழு விக்கொள
வேடக் கொடி கண்முற்
கன்னம தம்பொழி யும்களி றாஉருக்
காட்டும் கண பதியே. 649

மண்ணுல கத்தொடு விண்ணுல கத்தினும்
வயங்கும் பெருங் கீர்த்தி
நண்ணமெ யக்கருள் நண்ணுமென் றத்தினம்
நவில்நின் மொழி பிழையோ
ஒண்ணுதல் மங்கையர் தங்குல தெய்வமென்(று)
ஒளிர்ஔவையை யுய்ப்பக்
கண்ணுதல் வாழ்கயி லாயமட் டும்துதிக்
கைநீள் கணபதியே. 650

## 66-ஆம் பத்து

மைந்து மிக்குறு வீரர் நாமும் வழுத்து சீர்பெறும் வாஞ்சையால்
நொந்து ளேன்எனைச் சற்று நின்விழி நோக்கி டாவிதம்
என்கொலோ
பைந் துணர்த்திர ளிட்டுள் அன்பொடு பாடு வார்விருப்(பு)
யாவும்நல்(கு)
ஐந்து கையுடைக் கற்ப கம்புரை ஆனைமா முகத் தண்ணலே.
651

பார ணங்குறும் இன்னல் கண்டு பலதத்து ளேன்பெரும்
பாற்கடல்
நார ணன்துயில் நீக்கி டத்தரு ஞான மெய்திட நல்குவாய்!
கார ணங்கமர் பங்கு ளார்தரு கான்மு னைத்தலையாகியும்
ஆர ணங்களின் சென்னி மேற்றிகழ் ஆனை மாமுகத்
தண்ணாலே. 652

ஏயு மன்புடைத் தொண்டர் தம்குறை யாவும் நீக்குமோர்
ஈடுசால்
நீயும் என்றனைச் சோதிக் கின்றது நீதியன்றுமுன் நின்றிடாய்
வாயு மங்குச பாசத் நாற்புனை மாக வைப்பணி ஆதியால்
ஆயும் அப்பனும் இன்பு றத்திகழ் ஆனை மாமுகத் தண்ணலே.
653

புள்ள லம்புறு கொன்றை மாலை புனைந்த செஞ்சடை பூத்தநீர்
எள்ளல் திரளன் கூட மூடுவந் தெய்து மோர்தினம் இல்லையோ
தள்ள ரும்கரு திக்க ணம்புகழ் சச்சி தானந்த சாரமாய்
அள்ளல் வாரியில் மீறு மும்மதத் தானை மாமுகத் தண்ணலே.
654

நிகரிலாதுயர் தாரகத்தை நிகழ்த்திநின் அருள் வேண்டிடார்
புகலுநிந்தை சகிக்கிலேன்பரி பூரணப்பதம் நல்குவாய்!
சகளயோகசித் தாந்தமே பெருந் தஞ்சமாமெனச் சார்ந்து
ளார்க்கு
அகளஞானமும் நல்கியாண்டருள் ஆனைமாமுகத் தண்ணலே.
655

சிவர்சேகரத்து யாவரேனும்மெய்ச் சித்தனானது உண்டெனில்
என்
பாவனைப்படி நீமுன்நின்றருள் பாலிக்கும்கடன் உண்டுகாண்!
தேவர்தானவர் பூதராதியர் தெண்டனிட்டிடச் சந்ததம்
ஆவல்யாவும் அளித்திடும்தனி ஆனைமாமுகத் தண்ணலே. 656

பனைநெடுங்கரத் தால்ஓர் துண்டெழிற் பைம்பொன்மேரு விற்
பேர்த்தெனக்(கு)
இனையபாழ்மிடி தீர்ந்திடும்படி ஈவதற்கிசை யாய்கொலோ!
கனைகழற்றிருத் தாள்கள்நாடுபு கண்ணும்கையுமு ளோர்களாம்
அனைவரும்தொழும் முதல்வனாவளர் ஆனைமாமுகத்
தண்ணலே. 657

நூறிரண்டுகம் வாழ்ந்தபோதினும் நுங்கல்உண்டென ஓர்ந்து
மேல்
சோறிரண்டும் வழங்கிலாய்பெரும் துன்பவாரிதி சூழ்ந்ததேன்
வீறிரண்டர சாயதொண்டரும் வேண்டுநாள்முது வேலைசேர்
ஆறிரண்டளித் திட்டதிண்கைகொள் ஆனைமாமுகத்
தண்ணலே. 658

வேறுவேறு மடந்தைமார்முலை வேட்கைகொண்டு வெதும்பும்
நான்
சிறும்வெண்டிரைப் பேரியானைச் செயிக்கும்வாழ்வுறச்
செய்வையோ
நாறுபூங்குழல் வேடமங்கை நலம்புணர்ந்திட நல்கியன்(று)
ஆறுமாமுகன் ஆவிகாத்தருள் ஆனைமாமுகத் தண்ணலே. 659

கௌவைதீர்சுகம் நாடிநாடிக் கலங்குமென்சிறு கண்கள்நேர்
செவ்வையார்துவர்க் குன்றமேயெனச் சேவைநல்குவ தெற்
றையோ
கொவ்வைவாய்மொழி வன்மையாற்பலகோடிகோடிசித் தாடு
சீர்
ஒளவையைக்கயி லாயமேல்விடும் ஆனைமாமுகத் தண்ணலே.
660

## 67-ஆம் பத்து

ஆரியம் தமிழ்முத லாய பல்கலைச்
சீரியர் களும்புகழ் செயல்என்று ஈவையோ
ஈரிரு மறைக்கும்மூந்து எழுத்தின் ஆவியாய்
முரிமும் மதம்பொழி முக்கண் வேழமே. 661

கானநான் மறையவர் கணமும் காணரும்
ஞானவா ரிதியதன் நலம்துய்த்து உய்வனோ
தேனளா வியமலர் சிந்திச் சிந்தைசெய்
மோனயோ கியர்உணர் முக்கண் வேழமே. 662

ஆர்த்திமிக்(கு) அளவற அலமந் தேங்கெனைப்
பார்த்திலாய் நீயெனப் பகர லாகுமோ
கீர்த்திகொள் நான்மறை கிளத்தும் பற்பல
மூர்த்திகட்கு அரசெனும் முக்கண் வேழமே. 663

எண்டரும் நெஞ்சகத்து ஈன னேன்றரும்
வெண்டமிழ்த் தொடைகளும் விரும்பிக் கொள்வையோ
பண்டரி தாவரு பால ராம்பல
முண்டகா தனர்புகழ் முக்கண் வேழமே. 664

எம்மவர் அனைவரும் இன்பம் எய்தநின்
செம்மணித் திருவுருத் திகழத் தோன்றுவாய்
கொய்ம்மலர் ஆத்தியாங் கொன்றை யாற்செயும்
மொய்ம்மலி தொடைச்சடை முக்கண் வேழமே. 665

தேவர்தம் வாழ்வையும் சிறிதென்று எள்ளும்என்
பாவவெங் கலிஅறப் பரிந்தென்று ஆள்வையோ
பூவரும் நான்முகப் புலவன் ஆதிய
மூவரும் பரவுசீர் முக்கண் வேழமே. 666

அக்குமுற் றணியும்நீற் றணியும் கொண்டுளேன்
பக்குவம் உறும்படி பண்ணல் பாரமோ
இக்குமுக் கனிமுதல் இயன்ற ஊண்எலாம்
மொக்கும்நால் வாயுடை முக்கண் வேழமே. 667

பத்தியால் இருவர்முன் பணிய ஆறிரண்டு
அத்தினம் அளித்தவாறு அடிமைக் கீவையோ
சித்தியும் புத்தியும் திரும்பொ ணாப்பர
முத்தியும் தரத்தகு முக்கண் வேழமே. 668

அருகரைக் கவுணியன் அடர்த்த வாறுபல்
செருவரை யான் வெலும் கீர்த்தி நல்குவாய்
கருநிறக் குறக்கொடி கலவி யின்பம் வேல்
முருகனுக் கருளிய முக்கண் வேழமே. 669

பொதியைமா முனிமுதற் புனிதர் பொற்பதத்து
உதிர்துகள் என் சிரத்து உறலும் பொய்கொலோ
கதிர்மலி வெள்ளியங் கயிலை வாழ்க்கை ஓர்
முதியவள் பெறவிடு முக்கண் வேழமே. 670

## 68-ஆம் பத்து

அருணையில் என்றனோடு அன்று பகர்ந்தவா
தருணம றிந்துசெய் தன்மையி லாய்கொலோ
பொருணசை யால்மனம் புண்பட லாகுமோ
கருணைமி கும்புகழ்க் கணபதி நாதனே. 671

பெண்க ளவாவிடை பேதுறும் நாயினேன்
பண்கள் உறச்சொலும் பாடலும் ஈனமோ
எண்கள் அறும்செருக்கு ஏனரு ளாதுளாய்
கண்கள்ஓர் மூன்றுடைக் கணபதி நாதனே. 672

அங்கைவி ரிந்தலைந்து அலமரும் நான்பலோர்
செங்கைபெ றும்கொடைச் சீர்புரி வேன்கொலோ
கொங்கைஓர் பங்குடைக் கூத்தன் வியந்துசொல்
கங்கைநெ டுஞ்சடைக் கணபதி நாதனே. 673

என்னித யத்தினூடு எண்ணிய வாறெலாம்
நன்னில மீதுசெய் நாள்வரு விப்பையோ
பொன்னிகர் சித்தியும் புத்தியும் வல்லவைக்
கன்னியும் இன்புறும் கணபதி நாதனே. 674

ஆனியில் சீர்பெறற்கு அறவும் முயன்றஎன்
மேனியி ளைக்கநேர் விரதம் விலக்குவாய்
பானிகர் நீற்றணிப் பரமன் உவப்புறும்
கானித மித்தொடைக் கணபதி நாதனே. 675

அரிய தவம்செயற் காஅணி ஆடகக்
கிரியில்ஓர் துண்டுஉன்னேர் கேட்பது கீழ்மையோ
பொரிஅவல் மோதகம் போல்வன மொக்கும்ஓர்
கரிவத னம்கொளும் கணபதி நாதனே. 676

நாரணன் ஆதியோர் நண்ணும் நலம்பொருத்து
ஏரணவும் பல்சித்து யான்முய லச்செய்வாய்
ஆரணன் மூலமாய் அனைவர் களுக்குமோர்
காரண னாகிவாழ் கணபதி நாதனே. 677

இருநதி அன்றிரண்டு இறைவர் பெறச்செய்தாய்
ஒருநதி என்றனக் குதவஎ னாய்கொலோ
பெருநிக மாகமம் பீடுமி கப்பெறக்
கருநிற ஆகுவூர் கணபதி நாதனே. 678

இந்தவி னைப்பிணக்கு யாவும் ஒழித்தெனைச்
சந்தன மால்வரைத் தவரொடு கூட்டுவாய்
அந்தவ னத்தில்ஓர் ஆனையி ல்ஏகிநம்
கந்தன் உயச்செயும் கணபதி நாதனே. 679

கொவ்வையி தழ்ச்செவ்வாய்க் கோதையர் போகமே
செவ்வைஎ னக்கொள்என் தீதற ஓவுவாய்
அவ்வைசெய் பூசனைக்கு ஆசைம லிந்தநாள்
கவ்வைத விர்த்தகைக் கணபதி நாதனே. 680

## 69-ஆம் பத்து

காமனைச் செற்றருள் கண்ணுதற் பண்ணவன்
 கார்வரை போலும் களிற்றுரு எய்தியே
கோமளச் சீர்ப்பிடி யாம்உமை தன்னுடன்
 கூடிடிற் றோன்றிய குஞ்சரத் தெய்வமே
நீமகிழ்ந் தென்னுடன் சொல்லிய சொல்ஒன்றும்
 நிச்சய மாகில் நிதம்பெற நாடிடும்
ஏமவ ரைப்பெருந் துண்டுமுன் னாகச்சொல்
 என்இச்சை யாவையும் இக்கணம் ஈந்திடே 681

கொன்றுதின் கின்றவர் துன்புறக் காம்பெருங்
 கொற்றம்வி ளைக்கும் குணங்கொளும் மேலவர்
நன்றுபெ றப்பல ஊர்ப்பெரும் சந்தியில்
 நாடொறும் வாழ்வுறும் ஞானச்செவ் வேழமே
அன்றுதொட் டுன்னரு ளேமிகச் சிந்திக்கும்
 ஆர்வம டைந்த தறிந்நிலை போலும்நீ
இன்றுமுன் னின்றுபல் சீவரும் உய்யுமாறு
 என்இச்சை யாவையும் இக்கணம் ஈந்திடே. 682

நல்லசிற் றுண்டி மிகப்படைத் தன்பொடு
நாடொறும் பூசிக்கும் நண்புறு வார்களை
வல்லவர் என்றுஇமை யார்களும் மெச்ச
வரம்கொடுக் கும்தகை வாரண மூர்த்தியே
இல்லற மும்துற வும்தொடர்ந் தென்னை
இழுக்க நடுக்கிடந் தேங்குகின் றேன்ஐயோ
எல்லவ ரும்பழித் துச்சிரி யாதவாறு
என்னிச்சை யாவையும் இக்கணம் ஈந்திடே. 683

தானவி தக்கலு ழிக்கய மாமுகன்
தன்னையல் லாதோர் தலைவன்இன் றெனும்
ஞானவி ளக்கம் அடைந்தும்இவ் வாறுளம்
நைந்து புலம்பி நடுங்குற லாகுமோ
பானல்வி ழித்துணை வல்லவை காமுறு
பாரவெற் பாம்பவ ளத்திரு மேனியாய்
ஈனர்ம னைக்கிடை தோறலை யாவணம்
என்னிச்சை யாவையும் இக்கணம் ஈந்திடே. 684

நாதமெ னப்புகர் தத்துவ வித்தெனும்
நற்பொருட் டாரக நட்டந டுத்திகழ்ந்து
ஆதவ னாதிய முச்சுடர்க் கண்கொடு
அளப்பறும் ஆடல்செய் அத்திமு கத்தனே
நீதயை யாரும்அ றிந்திடச் செய்திலை
நெட்டுயிர்த் துத்தனி நெஞ்சம்அ ழிந்துமிக்கு
ஏதமெய் தித்தளர்ந் தேனைஐய கோமுன்வந்து
என்னிச்சை யாவையும் இக்கணம் ஈந்திடே. 685

சந்திர சேகரச் செஞ்சடை யானைத்
தலைக்கண நாதத யாபர மூர்த்தியே
மந்திர சித்திஒன் றேனும்எய் தாதுஇவண்
வாடுறக் கண்டும்ம றைந்திருக் கின்றதேன்
முந்திஎன் நெஞ்சிடை பல்விசை வந்த
முழுக்கரு ணைக்கடல் முற்றும்வ டிந்ததோ
இந்திர னும்பல தேவரும் சூழவந்து
என்னிச்சை யாவையும் இக்கணம் ஈந்திடே. 686

சீரிய நான்மறைச் சென்னியில் ஆடிய
சிற்பர தத்துவச் சிந்துர மௌனை
நாரிய ராதிய ஏடணைக் காட்டிடை
நாயில்அ லைந்து நலிந்திடக் காண்பதேன்

நீரினிற் கல்மிதக் கக்கனல் ஏடு
நிலைத்திடச் செத்தவர் நோவரச் செய்துமுன்
ஈரிரு தொண்டரை உந்தைபுரந்தவாறு
என்னிச்சை யாவையும் இக்கணம் ஈந்திடே. 687

நக்கற் புரைகுறு மாமுனி நாதற்கும்
நாகங் களின்சிறை போக்கும்நல் வேந்தற்கும்
இக்கட்டொ ழிந்திரு மாநதி யீந்தருள்
ஈடில் மெய்க் கீர்த்தி யிசைந்தவி நாயகா
திக்கத்த னைக்குள்எல் லோர்களும் நிந்தனை
செய்யஓர் கற்கிணற் றால்மிகச் சேரறிந்து
எய்க்கச் செய்ததில் நீர்மு தலாத்திகழ்
என்னிச்சை யாவையும் இக்கணம் ஈந்திடே. 688

மின்னிகர் வேற்படை யாதிய கோலம்
விடுத்தொரு மாதவ வேதிய ராய்க்குறக்
கன்னிதன் மோகக் கடற்சுழிப் பட்டயர்
கந்தனைக் காத்த கணபதி அப்பனே
பொன்னின் வழக்கு மலிந்தத னால்மிகப்
புண்படும் என்னைப் புறம்பினிற் றள்ளிடேல்
இன்னிசைப் பாடல்இன் னும்பல பாடுவேன்
என்னிச்சை யாவையும் இக்கணம் ஈந்திடே. 689

கவ்வைத விர்ந்துலகு இன்புறத் தேவா
கணித்திட வேதக் கணக்குருக் கம்பகர்
அவ்வையை ஆண்டமை கூறிடு வார்தம்
அகக்கம லம்புகும் ஐங்கரத் தானையே
கொவ்வையி தழ்ச்சிறு மங்கைய ரேமுதற்
கூறும்வல் ஏடணைக் கூட்டத்தை வென்றபின்
எவ்வையத் தும்பல சித்துசெய் யக்கருது
என்னிச்சை யாவையும் இக்கணம் ஈந்திடே. 690

## 70-ஆம் பத்து

சகளப் பொருளே அருந்தவத்தோர்
தமக்காம் துணையென் றுணரார்போல்
சுகமற் றுழலப் படுத்துகின்றாய்
தூய அருள்ஓர் துளியருள்வாய்

இகழுற் றடல்வாட் படையால்வென்று
இவுளித் திரள்மாந் தினன்ஆளும்
ககனத் துறும்ஐந் தருநாளும்
[illegible]றுந் துடைய கணபதியே.

இவுளி-குதிரை. மாந்தினன்-அசுவமேதவேள்வியில் நூறுகுதிரைகளைக்கொன்று ஊன் உண்டவன் இந்திரன். தரு - கற்பகத் தருக்கள்.

புற்றோ லொடுமான் அதள் ஏந்திப்
புலியோர் மயங்கப் புரி கபடம்
பெற்றோ ரினத்தும் கடைப்பட்டேன்
பேணி அருட்சீர் பெற அருள்வாய்
மற்றோர் இணையில் பிரணவமாய்
மறைநூற் சிரத்தில் வாய்ந்ததனால்
கற்றோர் பலரும் முதற்போற்றக்
கவின்ற மகிமைக் கணபதியே. 692

புயலும் தருவும் அனைய கொடைப்
புனித ருடன்இப் புவிஉரைக்கும்
செயல்கொண் டொளிரக் கருதும்எனைத்
தெருத்தோ றிரக்க விடலாமோ
அயலொன் றின்றிப் பொதுவாய்ப்பின்
ஆனை முகத்து ஓர் உருச்சமைந்து
கயல்ஒஞ் சியகண் வலவையொடு
கார் ஆகு ஏறும் கணபதியே 693

சங்கை யின்றிப் பல வாறு
தமியேன் இரந்து தவியாமல்
அங்கை விரிப்பார் விருப்பமுழுது
அருளத் தகும்நாள் உறியாதோ
செங்கை மிசைமான் மழுப்புனையும்
சிவன்செய் தவத்தால் உதித்ததனால்
கங்கை யணிந்த சடைக்காட்டுஓர்
கனல்வெற் பெனவாழ் கணபதியே. 694

அரும்பார் நகைப்பைங் †கிளியனையாள்
அம்பித் தலைஅன் றருள்மகன் சொல்
பெரும்பா ரதப்போர் வரைந்தபுகழ்
பேசும் எனக்குஓர் பேறும்இன்றோ.

---

† கிளியனையாள் —பரிமளகந்தை. அம்பித்த தலை—ஓடத்தினிடம் பெற்ற மகன்—வியாசர்

சுரும்பார்ந் தவர்பன் மலர்தூவித்
துய்க்கும் படியே துகளறு செங்
கரும்பா தியவும் படைப்பார்தம்
கனவிற் றிகழும் கணபதியே. 695

அதிரும் தொனித்தா னவர்தமையும்
அடக்கும் திறம்வேட்டு அயரும்எனைத்
ததிகண் டருளாது உறலாமோ?
தருமம் பெரிது சலியாதோ
விதிசொல் மறைநூல் நெறிகடவா
மேலோர் பலர்க்கும் வியன்சான்றாம்
கதிரும் மதியும் கனலும் வளர்
கண்மூன் றுடைய கணபதியே. 696

பனகர் தலைவன் றனக்கும் அருள்
பாலித் துளநீ பசுந்தமிழால்
தினமும் வழுத்தும் எனக்குன்அருள்
சிறிதின் றுதவற்கு இசையாயோ
மனம்நொந்து இகலோன் விடக், கருமா
மலைபோல் மதநீர் சொரிந்து, வரும்
கனவி வடியேன் றலையில் நெடுங்
கைநீ ராட்டும் கணபதியே. 697

உலக முழுதும் ஒருகுடைக் கீழ்
ஓவா தளிப்பார் களும் வெருள
அலகில் மகிமைச் சித்தாடும்
ஆசை எனக்கேன் அளித்தனையோ
இலகு புகர்ப்பொற் றுதிக்கையால்
இந்தி ரனுக்கும் இயற்புலமைக்
கலச முனிக்கும் இரண்டாறுஅக்
கால மளித்த கணபதியே. 698

ஞானக் கடலின் துளியளித்தாய்
நாவற் றீவின் நரர்வியப்ப
மானக் கனகக் கிரித்துண்டுஓர்
மாங்கா யளவும் வழங்காயோ
ஈனக் கலிப்பேய்க்கு அஞ்சுதியோ
எண்ணில் அவுணர்ச் செறல் பொய்யாயே
கானக் குறத்தி முலைப் போகம்
கந்தன் பெறச்செய், கணபதியே. 699

வெயிலைப் பகையென் றுணராமல்
விரும்பும் புழுப்போல் வினையேனுக்கு
எயிலைப்பொடித்தார் ஒரு நால்வர்க்கு
ஈந்த பெரும்பேறு ஈவாயோ
மயிலைப் பொருசீர் குரண்டமென
வயங்க முதிர்ந்த மாநிலைஒண்
கயிலைக் கிரிமேல் தனதுபுழைக்
கையால் விடுத்த கணபதியே
குரண்டம் கொக்கு இது ஔவையின் தலைமுடிக்கு உவமை
700

## 71-ஆம் பத்து

பூனைபோற் பதுங்கிச் சில்லோர் புறங்கடை வாயில் புக்கு
மோனையா தியசீர் வாய்ந்த முதிர்தமிழ் மொழியா தாள்வாய்
மேனைதன் பேரன் என்றே விளம்பு இளம் பருவத் தோர்க்கும்
ஆனைபோற் சேவை காட்டும் ஐங்கரக் கடவு ளானே. 701

பனைநெடுங் கரத்தாற் போர்த்துப் பைம்பொன்மால் வரைத்துண்
டொன்றீந்து
எனையுல கினிற்பல் லோரும் இகழ்ந்திடா இசையிற்
சேர்ப்பாய்
சினைமுகில் உகைப்பான் ஆளும் செம்பொன்ஊ ரவர்முன்
னாகும்
அனைவரும் முதலிற் போற்றும் ஐங்கரக்கடவுளானே. 702

நாரணன் தொழிலே செய்து நானில மதிக்க வாழ்ந்து
பூரண பதத்திற் றோயும் புகழெனக் கருளாய் கொல்லோ
வாரண முகமும் செம்பொன் வரைபுரை வயிறும் காட்டி
ஆரண முகப்பி லாடும் ஐங்கரக் கடவுளானே. 703

மருந்தன மொழியால் ஈர்த்து மறலிநேர் விழியால் வாட்டும்
பெருந்தன மகளிர் ஆசைப் பேயெனைப் பிடியா தாள்வாய்
கருந்தனக் குவடு போலக் காய்கனி முதல வாகும்
அருந்தல்நன் களிப்பார் தேறும் ஐங்கரக் கடவு ளானே. 704

வெங்குசத் தொழிலோன் செய்யும் மேனியே நான்என்
றெண்ணித்
தொங்குசப்படுவேன் றன்னைத் தொழும்பரிற் கூட்டொண்
ணாதோ
தங்குசக் கரம்வாள் வேல்வில் சாயகம் தண்டு கண்டை
அங்குசம் பாசம் ஏந்தும் ஐங்கரக் கடவுளானே. 705

மாயவித் தையும்என் நெஞ்சின் மயக்கற அருளாயாகில்
தூயவர் தாமே சேரும் தொல்கதி அருள்வாய் கொல்லோ
தீயவர் மருளச் சங்கம் தெழித்தவாய்ச் சினைக்கார் போலும்
ஆயனார் வழிபா டேற்கும் ஐங்கரக் கடவு ளானே. 706

காழியம் பதிச்சேய் போலும் கவித்திறம் விழைகின் றேனைப்
பாழியங் களிறே போல்வார் பகைமிகப் படுத்த லாமோ
வாழிய மாயன் கூத்தால் மனமுழு துவந்த நாள்ஓர்
ஆழியம் படையீந் தாண்ட ஐங்கரக் கடவு ளானே. 707

நாறிய மலர்கள் தூவி நல்லுணவு அனந்தம் இட்டுத்
தேறிய தமிழாற் போற்றும் சிறியனேற் கிரங்காய் சொல்லோ
வீறியல் மலயத் தாற்கும் விண்ணுல களிக்கின் றாற்கும்
ஆறிரண் டளித்துக் காத்த ஐங்கரக் கடவு ளானே. 708

மெய்ச்சுணங் கலையன் னார்தம் வீடுதோ றலையார் போற்றும்
முச்சுடர்க் கண்கள் வாய்ந்த முதல்வன்நீ உணர்ந்தி லாயோ
நச்சுவேற் படையான் வேண்டும் நாரியை நளிர்பூங் காவில்
அச்சுறுத் திடப்போய் மீண்ட ஐங்கரக் கடவுளானே. 709

பிணியொடுகலியு மாற்றிப் பேரருட் பெரியாள் தன்னைத்
தணிவில்சீர்க் கயிலை சேர்த்த தண்ணருள் இந்நாள் இன்றோ
மணிகுயின் றவிர்பொற் பூணும் மாசுணப் பணியும் சேர்த்தே
அணிதகு பெருமை வாய்ந்த ஐங்கரக் கடவுளானே. 710

## 72-ஆம் பத்து

வடைசுகி யன் தோசை மாங்கனி தேங்காய் எள்
அடைமுத லியஎல்லாம் அமுதுசெய் பெரியப்பா
விடைதிகழ் கொடியார் போல் வெண்பொடி மூழ்குற்றும்
கடைபடு தமியேனைக் கண்கொடு பார்த்தருளே. 711

புலியதள் உடையானும் புணரியில் வளர்வானும்
மலியிசை மறையோனும் வாழ்த்தொரு வாரணமே
பலிநுகர் துணிவுற்றும் பைம்பொன் அவா அற்றும்
கலியிடை மருள்வேனைக் கண்கொடு பார்த்தருளே. 712

பாதம லர்த்துணையே பரவுமெய் அடியார் பால்
போதன் வழக்கறுசீர் புரியும்ஓர் புகர்வெற்பே
மாதர்நல் லார்முதலாம் வகைபடு பொருள் மூன்றின்
காதல் வளர்ப்பேனைக் கண்கொடு பார்த்தருளே. 713

மங்கையர் சுகம் நீடும் வானவர் தருநாணும்
செங்கைஓர் ஐந்தொடுவாழ் சிகரியை அனையானே
பங்கயன் உலகூடுஓர் பாறைய தனில்நாளும்
கங்கை விழைந்தேனைக் கண்கொடு பார்த்தருளே. 714

ஆதவன் உந்தியின்மீது அவிர்தர மிகநீடும்
போதகம் என்பவர்மேற் பொருவில்மெய் அருள் பொழிவாய்
பூதல முழுதுய்யப் புரிவது கருதென்னைக்
காதகர் இகழாதுன் கண்கொடு பார்த் தருளே. 715

அஞ்சலி செய்தன்பால் அநுதினம் நினைவாருள்
குஞ்சர மாச்செல்லும் குணதர கணநாதா
நஞ்சனை யார்நிந்தை நனிசெய நலிவேனைக்
கஞ்சனும் மெச்சிடநின் கண்கொடு பார்த்தருளே. 716

தாமரை யாள்கொழுநன் சர்ப்ப உருப்பெறல்போய்
மாமகிழ் வுறல்செய்த வாரண முகவள்ளால்
கோமள மடவாரால் குலைவுறு கொடியேனைக்
காமரு சுடர்மூன்றாம் கண்கொடு பார்த்தருளே 717

மறுவறு புனல்குன்றா மாநதி யிரண்டீந்து
குறுமுனி வனும்வானோர் கோனும்முன் உயஆண்டாய்
பெறுவன பெறவேண்டிப் பெற்றம்உண் பவர்தம்மேல்
கறுவுகொள் அடியேனைக் கண்கொடு பார்த்தருளே. 718

அதிமயல் கொளும்வேலன் ஆர்வமெய் திடல்நாடி
மதிநுதல் மறமாது மருளுறும் வகைசெய்தாய்
பதிதர்கள் பலர்வாழ்வு பாறிட விளையாடிக்
கதிபெற முயல்வேனைக் கண்கொடு பார்த்தருளே. 719

தெவ்வைவெல் சிலைவேந்தும் சிவமறை யவர்கோவும்
அவ்வைதன் வரவெண்ணி அலமரும் அதுசெய்தாய்
கொவ்வைமெல் இதழ்வாயார் கோல்விழி எழில்நாடிக்
கவ்வைஎய் திடுமென்னைக் கண்கொடு பார்த்தருளே. 720

## 73-ஆம் பத்து

ஒளித்துப் போன ஒருதிரு மங்கைவந்து
அளிப்பெ ருக்கரு ளத்தரு வாய்கொலோ
வெளிற்று நீறணி மெய்யினர் வேண்டுசீர்க்
களிற்றுச் சென்னிக் கணபதி நாதனே. 721

சங்கை யற்ற தமிழ்க்கவி பாடும்நான்
அங்கை ஏற்றலை யச்செய லாகுமோ
மங்கை பாகம்உ ளானென வார்சடைக்
கங்கை சூடும் கணபதி அப்பனே. 723

பாம ரத்திரள் கண்டுவக் கப்பரிந்து
ஏம முந்தரு கின்றிலை என்கொலோ
தாம ரைச்செழுங் காடெனத் தக்கமெய்க்
காமர் வாய்ந்த கணபதி நாதனே. 723

பொன்னில் ஆசைகொள் பூரியர் போலவா(டு)
என்னி னைப்பறி யாயெனல் ஆகுமோ
வன்னி நேர்நிறை வாய்ந்தவிர் வல்லவைக்
கன்னி தோயும் கணபதி நாதனே. 724

நின்று திக்கைநன் னீர்முழுக் காடியும்
என்று யர்ப்பெருக்கு ஏன்அற வில்லையோ
பொன்று றாததனிப் பூட்கைஅன் றீனிய
கன்று மேனிக் கணபதி நாதனே. 725

புனித யோக புராதனப் புண்ணியர்க்கு
இனிய சித்தி எனக்கரு ளாய்கொலோ
பனிநெ டுஞ்சடைப் பண்ணவன் நல்குமாங்
கனியு றும்கைக் கணபதி நாதனே. 726

சிற்ப ரானந்தத் தும்செகத் தோர்பெறும்
பொற்ப ணம்பெரி தாம்கொல் புகன்றிடாய்
அற்ப வானவ ரால்அறி தற்கொணாக்
கற்ப கக்கைக் கணபதி நாதனே. 727

எய்வில் இந்திரற்கு இன்றமிழ் மாமுனிக்கு
உய்வி சைத்த உரம்பழு தாயதோ
தெய்வி கத்தொரு சிந்துரற் செற்றவேல்
கைவி டாத கணபதி நாதனே. 728

பானி றத்திரு நீறணி பத்தரோடு
யானி கத்திடை இன்புறல் எற்றையோ
வேனில் வேள்அயில் வேளைவெ லாதநாள்
கானி டைச்செல் கணபதி நாதனே. 729

வெயில் எறிக்கும்இம் மேதினி எங்கும்ஓர்
மயிலிற் போய்வரும் வல்லபம் நல்குவாய்
பயிலு முத்தமிழ் ஔவையைப் பத்தர்முன்
கயிலை சேர்த்த கணபதி நாதனே. 730

## 74-ஆம் பத்து

சிங்கத் துருப்பெறு மால்ஒரு பாம்பு ருச்சில நாள்கொடு
வாடும்
பங்கத்தை நீக்கஓர் ஆலடி யிற்செலும் பள்ளச்சிறு களிறே
சங்கத்து நாவலர்க் கும்பெறு தற்கருந் தமிழ்ஆர்வ
மடைந்தும்
அங்கத்தை நாளெனச் சொல்பிழை யால்வரும்
ஆபத்தொழித் தருளே. 731

எப்பிறப் புந்தவிர் மெய்ப்புகழ் எய்திய ஈசன்புரி தவத்தால்
பொய்ப்பிறப் பாம்அவ தாரமும் சிற்சில புரியும்புகர்க்
குன்றே
இப்பிறப் போடுபல் சித்தியும் முத்தியும் எய்தக்குறித்
தேன்பால்
அப்பிறப் பிற்செய் வினைப்பய னால்வரும் ஆபத்தொழித்
தருளே. 732

தோசைஎள் ளுண்டைஅப் பம்வடை சுண்டல்முத லியவால்
பூசைந டத்துநர் வேண்டிய பேறருள் பூட்கைப்பேரு மானே
ஓசைநெ டுங்கடற் பார்மிசை அண்டரும் ஓதும்புகழ்
உறுவான்
ஆசைவ ளர்ப்பத னால்எனைச் சூழ்தரும் ஆபத்தொழித்
தருளே. 733

குஞ்சர மாமுக மும்புயம் நான்கும்வெண் கோடங்குச பாசம்
வஞ்சமில் ஞானப் பெருங்கனி யாறியும் வயங்குந்தனி
வள்ளால்
கஞ்சம லர்த்தலை வைகிய நான்முகன் கையின்பொறி
வலியால்
அஞ்சனக் கண்மட வார்மய லால்வரும் ஆபத்தொழித்
தருளே. 734

நாடனைத் தும்பல ஊர்ப்பெருஞ் சந்தியில் நாளுங்குடி யாகி
ஏடலர் பூச்சொரிந் தேத்தும்அன் பருக்கருள் ஆனைக்கண
பதியே
பீடமிட் டுப்பல் உயிர்ப்பலி செய்பவர் பேரிற்கறு வென்னை
ஆடகப் பேய்பல் விதத்தினிற் செய்திடும் ஆபத்தொழித்
தருளே. 735

சம்புவும் மாயனும் ஒன்றுபட் டாலெனச் சர்ப்பத்தொடு
பொன்னும்
செம்புயம் ஆதிஉ றுப்பினந் தோறணி சிறுசிந்துரத் தேவே
கொம்புடை யாக்கையும் கொன்றுவெந் துண்பவர்
குடைக்கீழ்மிகக் குன்றும்
அம்புவி யாசையி னால்எனைப் புண்செயும் ஆபத்தொழித்
தருளே. 736

வேயிணைத் தோள்வல வைப்பிடி யாதிய மின்னார்பலர்ச்
சேர்ந்தும்
மாயிரு ஞாலமும் மாணிஎன் றேத்திய வழுவைத்தலை
யானே
நீயிரங் கித்திரு வாய்திறந் தோர்மொழி நிகழ்த்தப்பெறும்
என்னை
ஆயிரம் வாறகக் தும்புறத் தும்தொடும் ஆபத்தொழித்
தருளே. 737

மாணி-பிரமசாரி வழுவை-யானை

வீறிய பேறனந் தம்பெறச் சந்ததம் விரும்பும்தமி யேனைப்
பாறினம் போல்பவர் நக்கிக ழும்படி பண்ணத்தகுங்
சொல்லோ
மீறியற் றென்மல யத்திறை யோடகல் விண்ணூர்இறை
உய்ய
ஆறிரண் டீந்தருள் ஐங்கர னேஎன தாபத்தொழித் தருளே. 738

பூனைஒக் குங்குணத் தீயவர் செய்பல பொல்லாங்கினுக்
கஞ்சித்
தேனைநி கர்த்தத மிழ்க்கவி யாற்றுதி செய்வேற்கிரங்
காயோ
மானைவெ ருட்டும் விழிக்குற மங்கைமுன் வடிவேலவன்
மாழ்காது
ஆனையு ருக்கொடு சென்றவ னேஎன தாபத்தொழித்
தருளே. 739

கௌவைத விர்ந்துஅடுத் தோர்க்கும்இன் பம்தரு
காதல்கொளும் நாயேன்
தெவ்வைநி னைத்தய ரும்படி செய்தனை சிறிதும்தயை
யின்றோ
கொவ்வையி தழ்ச்சிறி யன்னமின் னார்க்கொரு
குலதேவென வாழும்
ஔவையை வெண்கயி லைக்கண்விட் டாய்என
தாபத்தொழித்தருளே. 740

## 75-ஆம் பத்து

மகரத்திர ளுடன்ஆ(டு)அலை வாரிக்கலை மங்கை
சுகமுற்றிட நாடென்உயிர் சோரச்செய லாமோ
சிகரக்கிரி களின்வன்சிறை சிந்துஇந்திரன் ஆளும்
ககனத்துறு தருவேநிகர் கைஐந்துடை யானே. 741

சுருதித்தலை மிசைநின்ற துணைத்தாள் விழை வேனை
ஒருதிக்கும் இலார்போல்இவண் உழலச்செயல் முறையோ
எருதுய்ப்பவ னேமெய்ப்பொருள் என்பார்முத லினர்தாம்
கருதத்தகு தொழில்ஐந்துறம் கைஐந்துடை யானே. 742

மணநாண்மலர் சிந்தித்தினம் வாழ்த்தும்பயன் இன்றிப்
பிணமாவிழ உலகுள்ளல் பிறங்கச்செய்தி டாதே
குணமாண்புறு நந்திப்பெயர்க் கோமான்முத லினராம்
கணநாயகர் பலர்மெச்சிய கைஐந்துடை யானே. 743

அனமென்றமென் நடையார்பலர் ஆசைக்கடல் வீழ்வேன்
சனனத்தொடு மரணம்தவிர் தவமும்செயல் தவறோ
மனமும்திரு வருளும்சுரர் மரபும்கரி யாகக்
கனஒன்றில்எ னிடைவந்தவிர் கைஐந்துடை யானே. 744

ஆணாவது பெண்ணாகிடல் அதுமாறிடல் முதலாம்
ஏணார்பல சித்தும்தமி யேன்எய்துவ தென்றோ
மாணார்சுரு தியின்முற்றிகழ் வண்மைப்பொருள் உண்மை
காணாதவர் கருதாதவிர் கைஐந்துடை யானே. 745

மயிலைப்புரை சாயற்பெறு மடமங்கையர் சூழக்
குயில்முற்றொனி தருவேள்சமர் குன்றப்பெறல் என்றோ
வெயில்வெட்குற நிலவைப்பொழி வெள்ளிக்கிரி யாய
கயிலைப்பரா தவமாவரு கைஐந்துடை யானே. 746

புவியின்புற வானோர்வளர் பொன்னூரிடர் முற்றும்
தவிரக்கரு திடுமாதவர் தம்மோடெனை வைப்பாய்
செவிதந்திடு காற்றாமல்மலி செகமாவன செய்து
கவினங்குச முதல்ஐந்தணி கைஐந்துடை யானே. 747

மூவேடணை யுந்தீர்ந்தருள் மோகத்திடை மூழ்கித்
தூவேடம தற்கேற்றன தொடரும்படி அருள்வாய்
மாவேறின்ன் மலயாதிபன் வாழப்பொரு நையுடன்
காவேரிஅ நாள்நலிகிய கைஐந்துடை யானே. 748

இந்தக்கலி நோய்வேருடன் இன்னே அழி வெய்தி
எந்தக்கக மும்தோய்தர என்னசித் தருளாயோ
அந்தப்புன மதில்வேலவன் ஆர்வம்பெறு மாறுஓர்
கந்தக்கட கரியாகிய கைஐந்துடை யானே. 749

புவியிற்பலர் இகழத்நகு புண்பாடயில் வேனுக்கு
அவிதுய்ப்ப வரினமும்புகழ் ஆர்வம்தரு வாயோ
செவிபத்துறு கனல்வெற்புறழ் சிவன்வாழ்கயி லையினில்
கவிதைக்கி ழவிபைவிட்டருள் கைஐந்துடை யானே. 750

## 76-ஆம் பத்து

அண்டார்தம் புரமூன்றும் எரித்தபிரான்
தவப்பயனா அங்கே தோன்றி
வண்டாரும் இதழியொடு மதியமுஞ்சூ
டியசடையும் வாய்ந்த மூர்த்தி
கண்டாரும் கேட்டாரும் நடுநடுங்கும்
உயிர்க்கொலையாற் களிக்கும் பொல்லாச்
சண்டாளற் றடுப்பதற்கும் சம்மதியா
ஞாயமென்னோ சாற்றுவாயே. 751

சிமிழ்முலைப்பார்ப் பதிமகிழத் திருநடம்செய்
வான்அருமைச் சேயாய்த் தோன்றி
அமிழ்தனைய மொழிவலவை களிகூரத்
தினம்தினம்கூத் தாடு வானே
இமிழருவிப் புனற்கனக வரைப்பெருந்துண்டு
ஒன்றிரந்தாங்கு ஈகின் றில்லாய்
தமிழ்விலைப் பொன் னானாலும் தாராத
ஞாயமென்னோ சாற்று வாயே. 752

குஞ்சரமா முகமும்அநிற் படர்ந்துளசெம்
புதர்ச்சிரும் குலவத் தோன்றி
அஞ்சலினி தருளினனக் கரியதிரு
வெண்ணீறும் அணிந்த அப்பா
பஞ்சமறக் களைந்துநினைத் துள்ளபடி
ஆடும்நலம் பாலிக் கில்லாய்
சஞ்சலத்தை ஒருங்கொழியத் தவிராத
ஞாயமென்னோ சாற்று வாயே. 753

இதுமேலாம் அதுமேலாம் எனப்போர்செய்
மதவாதர் எண்ணி லார்க்கும்
பொதுவாய பிரணவமே பீடமாய்க்
குடியிருக்கும் புகர்ப்பொற் குன்றே
மதுவார்பன் மலர்த்துணரும் ஆத்தியினை
ஆதியாவும் வழங்குயான் வாழச்
சதுர்வேதச் சென்னியில்மெய்ந் நிலையுதவா
ஞாயமென்னோ சாற்று வாயே. 754

புண்டரிகப் பிரமாவும் புயல்நிறத்து
நெடுமாலும் புரம்சுட் டானும்
அண்டர்களும் முனிவோரும் முதற்போற்றும்
ஆனைமுகத் தமல மூர்த்தீ
வண்டர்வசைக் கனல்சூழப் பரதவிக்கும்
தமியேனை வலிந்தாட் கொண்டு
சண்டன்முத லோர்பகையும் தணவாத
ஞாயமென்னோ சாற்று வாயே. 755

மஞ்சாய நெடுமேனித் திருமால்ஓர்
பாம்புருவா மாழ்குங் காலம்
நெஞ்சாரக் கருணைபுரிந் தருள்பெருமை
ஒருபோதும் நினைத்தி லேனோ
அஞ்சாய கரதலத்தா ரமுதேஎவ்
வுலகிடத்தும் அஞ்சு றாதுயான்
சஞ்சாரம் செயும்திறந்தந் தருளாத
ஞாயமென்னோ சாற்று வாயே 756

அங்கடந்ர் அருவிசொரி பவளமலை
அனையபெரி யப்பா வெள்ளைத்
திங்கள்தறு கியசடையா தியகோலம்
நினைந்தபயன் சிறிதும் இன்றோ
வெங்கடன்கொண்டு ஊன்அரக்கு விற்பார்க்கும்
எளியபொருள் விரும்பித் தேடிச்
சங்கடம்துய்த் திடஎனைநீ படுத்துகின்ற
ஞாயமென்னோ சாற்று வாயே. 757

வண்ணளிர்மைக் குறுமுனிக்கும் மகவாற்கும்
இரண்டுநதி வழங்கி ஆண்ட
தெண்ணளிர்மைச் சிந்துரமா முகத்தரசே
தினமும்உனைச்சிந் திக்கி லேனோ

கண்ணீர்வார் தரத்துயர்ப்பட்டு யான்தொடும்கற்
பாறையினிற் கங்கை போலும்
கண்ணீர்ப்பே ராறுஉதிக்கச் செய்யாத
ஞாயமென்னோ செப்பு வாயே. 758

நஞ்சனைய விழிக்குறத்தி தருமயல்தீர்
கரக்கருதும் ஞாங்கர் வேள்பால்
குஞ்சரமா முகமாச்சென் றருள்புரிநின்
றிருவருளே குறிக்கும் என்னுள்
வஞ்சமறச் சொல்லியசொல் மறந்தனையோ
சகிக்கரும்பாழ் வறுமை நோயால்
சஞ்சலத்தார் போற்றமியேன் தயங்கவிடும்
ஞாயமென்னோ சாற்று வாயே. 759

கொவ்வைநறுங் கனியிதழ்வாய்க் குயிலனையார்
பலர்க்கும்ஒரு குலதே வான
அவ்வையைத்தன் துதிக்கையால் கயிலைமலை
மிசைவிடும்பே ரருள்உள் ளானே
கவ்வைதவிர்ந் தெனைச்சார்ந்தோர் தமக்கும்அது
செயல்வேண்டென் கலிகண்டு ஈனத்
தவ்வைமுகத் தாரிகழல் சகித்திருக்கும்
ஞாயமென்னோ சாற்று வாயே. 760

## 77-ஆம் பத்து

அத்தம யக்கம தால்எனக் குத்துயர் அளவின்றிய படிதந்து
இத்தனை காலம்க டத்துகின் றாய்உனக் கிதுவும்புகழ் தானோ
பத்தரும் பாவல ரும்பல மன்னரும் படைப்பூதரும் பழிதீர்
சித்தரு முத்தரும் முற்பணி யத்திகழ் தெய்வக்கணபதியே. 761

பங்கய வேதியன் என்றலை யிற்பிழை பலவாவரை யினும்நீ
அங்கண்அ ருட்டுளி ஒன்றுபெய் தால்அவை அகலாஎன லாமோ
சங்கரன் மேனியில் பாதிகொண் டின்புறு தாயார்களி கூரச்
செங்கரத் தங்குச மும்கயி றும்புனை தெய்வக்கண பதியே. 762

கும்பமுலைத்துணை மங்கையர்மையலிற் குலையும்கொடி
யேனுக்கு
அம்பர முற்றனு ரும்புகழும் திறம் அருள்றிலையாயோ
எம்பரில் யாவர்மிக் குண்பன விட்டிறைஞ் சினுமங்கவர்
கண்முன்
செம்பவ ளக்கிரி யேயெனக் காண்டரு தெய்வக்கண பதியே. 763

ஆனினம் கொன்றருந் தும்கொடி யோர்களை அழிக்கும்திறம்
பெறுமுன்
வானினட் பேறுவ முங்கினும் கைக்கொள மாட்டேனெனல்
வம்போ
மானினம் போல்பவர் சூழ்தர வேள்சிலை வலிக்கோர்பெருந்
துணையாம்
தேனின மிக்கிசைக் கும்கருக் கைத்தெனாடைத் தெய்வக்கண
பதியே. 764

பன்னிரண் டாம்நெறிக் கும்துணை நின்னருட் பாங்கேயெனத்
தேறும்
என்னினைப் பத்தனை யும்பழு தாய்விடில் எவ்வாறுலகு உய்யுமோ
வன்னியும் கொன்றையும் கூவிளமும்பனி மதியும்புனை யானைச்
சென்னியிற் கங்கையும் வைத்துநின் றாடிய தெய்வக்கண
பதியே. 765

நாறும லர்த்துணர் இட்டவர்க் கும்கதி நல்கத்தகும் நீயென்
தேறுத!மிழ்த்துதி கொண்டிக சாதனச் சீரும்தரும் இலையே
நீறுமண் சிந்துரம் இட்டவர் யாவரும் நேசித்திட நின்று
சீறும்அ ராஅரைக் கும்புனைந் தின்புறு தெய்வக்கண பதியே. 766
அற்பர்த லைக்கடை தோறும்உற் றுப்பெரிது அயராநலம் அருளிக்
கற்பமு டன்கண மாறும்இன் பப்பெருங் கடலும்தரு வாயோ
பொற்பண மேதுணை யாமெனக் கொள்பவர் பொருந்தற்கரி
தாய்
சிற்பர யோகமு யன்றவ ரேயுணர் தெய்வக்கண பதியே. 767

ஏலுமு யற்சியும் செய்கலர் கைப்பொருள் ஈட்டம்பெற வேண்டிப்
பாலுறழ் சிந்தைக றுத்துழல் என்றனைப் பார்த்தறிகை யாயோ
ஆலுடை யானிகர் கும்பனொடு இந்திரற்கு ஆறுஓரிரண் டீந்து
சேலுறழ் கண்வல வைப்பிடி யோடமர் தெய்வக்கண பதியே.768

முந்தும றைக்கிடர் செய்பவர் யாரையும் முருக்கும்திறல்
வேட்டுயான்
நொந்துபு லம்புறக் கண்டுள நீஅருள் நோக்கம்செய்யொ
ணாதோ
கந்துகக் கொங்கைம றந்திகண் ணாலயர் கந்தன்களி கூரச்
சிந்துர மாத்தினைக் காவிடை போய்வரு தெய்வக்கண பதியே.
769

மாய்ந்தவர் சிற்சிலர் மீளவும் செய்திறம் வாஞ்சித்துழைப் பேபவப்
பாய்ந்தபு லிக்கெதிர் மானென வாடுறும் படியேன்உலைக் கின்றாய்
ஆய்ந்தத மிழ்க்கிழ விக்கெளி யாய்அடல் அவுணேசரை அட்டாய்
தேய்ந்தம திக்கிணை யாம்ஒரு கொம்புடைத் தெய்வக்கண பதியே. 770

## 78-ஆம் பத்து

பாழதே பரமென்று ஏகதே சத்திற்
பணிதரு புலைமதத் தினரே
ஆழ நீர்ப்புவி முழுமையும் புரக்கும்
அதுசெயும் கடவுள்மற்று ஆரோ
தாழ வல்லவர்தம் இலக்கிய முழுதாய்த்
தயங்கிய தாரகப் பொருளே
வேழமா முகத்து விநாயகா எனைச்சூழ்
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 771

செவ்வழற் கிரிநேர் திருவுருக் காட்டித்
திறல்மிகும் அவுணர்சீ ரழித்துப்
பொய்வழக் கொழித்து முனிவரோடு அமரர்ப
புரந்தருள் பூட்கைமா முகவா
மெய்வழக் குணர்ந்தும் உணர்கிலார் உரைக்கும்
மிகுவசைக் கனல்சுட மெலிந்தேன்
வெவ்வழற் றிரளே அனையபுன் மிடியாம்
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 772

பாதிவாண் மதியும் கொன்றையும் அறுகும்
பாந்தளும் புனைமதிச் சடையால்
ஆதிநா யகனே தானெனத் தெரிக்கும்
ஆனைமா முகத்தனி அரசே
காதிஉண் பவரைத் திருத்திநீங் கரிய
கருணைநீர் பெறச்செயல் கருதி
மேதினித் தலைமா தவம்செயும் எனைச்சூழ்
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 773

கண்ணகல் ஞாலத்து உளநகர்தோறும்
கவின்தரு கணபதி யப்பா
எண்ணரும் புகழ்ச்சீர் பெறுவது விழைந்திண்டு
யான்படும் துயர்உணர் கிலையோ

தண்ணமு தருந்தும் வாழ்க்கையும் வெறுத்த
தமியனேற்கு இதுசெயத் தகுமோ
விண்ணவர் தமையும் வருத்துபொற் பேய்செய்
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 774

பஞ்சபா தகம்செய் வார்களே எனினும்
பணிந்துபோற் றிடிற்பரிந்து ஆளும்
குஞ்சர முகத்துக் கடவுளே உனைநான்
குறித்துநா டுதல்கொடாய் கொல்லோ
வஞ்சர்பால் இரந்தும் பரதவிக் கின்றேன்
மலிதரு தவப்பயன் வழங்கி
வெஞ்சளம் பலவா விளைக்கும்வல் வினையாம்
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 775

கண்டுநேர் மொழிப்பெண் வலவைதோள் புணர்ந்து
கழியநம் பொழிதரு களிறே
பண்டுநீ எனது கனவினிற் பலவாப்
பகர்ந்தசொல் முழுமையும் படிறோ
தொண்டுசெய் திடற்கு வேண்டிய பொருளும்
தொகுத்தளிக் கிலைமிகச் சுழன்றேன்
விண்டுஆ தியரும் வியப்புற இன்னே
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 776

சாருஎன் றென்னைத் தொடர்ந்தநின் துணைவன்
சாற்றிய பேறுதந் தில்லான்
மாருதி முதலோர் பகர்ந்தசொற் பயனும்
வயங்குறக் காண்கிலேன் மலைந்தேன்
பாரும்வா னகமும் முதற்றொழத் திகழும்
பகட்டுமா முகங்கொளும் பரனே
மேருவிற் றுண்டொன்று இக்கணம் கொடுத்தென்
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 777

கயல்விழிக் கலப மயில்புரை மடவார்
கலவியே காரண மாக
பயன்முந்நீர்க் கடல்சூழ் பாரிடைத் தமியேன்
படுந்துயர் உணர்கிலாய் கொல்லோ
இயன்முனி வரற்கும் இமைப்பிலார் நகரத்து
இறையவன் றனக்கும்முன் இரண்டு
வியனதி யளித்த வேழமே எனது
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 778

நாடவர் பலரும் கொலைபுலை தவிர,
நலங்கிளர் பசுவெலாம் வாழப்
பாடல்பற் பலசொற்று இறைஞ்சுகின் றேனும்
பருவரல் படுவது முறையோ
கோடவிர் கருமா முகில்புரை கயமாக்
குறுகிவேற் குமரவேள் தனைஓர்
வேடமின் புணரப் புரிந்துளாய் எனது
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 779

எள்ளிடற் கரிய பயன்பெறக் குறிக்கும்
எனையிவண் இருதலை வாய்ந்த
கொள்ளியின் நாப்பண் குலைவுறும் எறும்பில்
கொடுந்துயர் உறச்செயல் குணமோ
கள்ளினும் இனித்த கவிபகர் கிழவி
களிப்புறக் கறைமிடற் றிறைவர்
வெள்ளிவெற் பதன்மேல் விடுத்துளாய் எனது
விக்கினம் தீர்த்தருள் விரைந்தே. 780

## 79-ஆம் பத்து

மைம்மலி பேருடற் றானவன் வேரற மாய்த்தாய் எனை வாட்டும்
மும்மலப் பேயைவென் றின்புறச் செய்தி முன்னாவிதும் யாதோ
செம்மல ரும்தளி ரும்சொரி பூசனைத் திறம்வேண்டு கிலாயோ
கைம்மலர் ஐந்துறு சிந்துர வெற்புறழ் கவினார்கண பதியே. 781

நங்கையர் மையல்எ னும்கடல் மத்தியில் நலிவெய்தினும் நான்நின்
செங்கைதொட் டுப்புனை யுந்திரு நீற்றணி சேரப்பெறல் பொய்யோ
கொங்கைவ னப்புயர் மங்கைஓர் பங்குடைக் கோனாமெனக் குலவிக்
கங்கையும் கொன்றையும் திங்களும் சென்னியிற் காட்டும்கண பதியே. 782

போர்மலி வேழுயல் புன்றொழிற் குண்டர்கள் புகல்பொய்வகை போற்றும்
பார்மடந் தைக்கிதம் செய்திறம் வேட்டுழல் பண்பேன்எனக் கீந்தாய்
வார்மரு வுந்துணைக் கொங்கையும் கண்ணிணை வாளுங்கொடு வாழும்
கார்மயி லேநிகர் வல்லவை கண்டுளம் களிக்கும்கண பதியே. 783

ஆரணக் கூட்டமும் ஆகம சாத்திரம் அனைத்தும்சொல ஆன்ற
பூரணம் மின்னருட் டாரக மாம்தனிப் பொறியேயெனல்
பொய்யோ
நாரணன் றன்செய லிற்சிறி தாயினும் நல்கற்கிசை யாயோ
காரண காரியம் ஆதியென் றுத்தமர் கருதும்கண பதியே. 784

இங்குன் அருட்செய லிற்சிறிது எய்தலின் ஈனர்க்கிக வாகிச்
செங்குணத் தார்பணி யாவையும் அன்பொடு செய்யப்பெறு
வேனோ
மங்குல்இ வர்ந்தவ லாரிதன் வாழ்வையும் மதியாதம னத்தோர்
கங்குலு டன்பகல் அற்றத லந்தனிற் காணும்கண பதியே. 785

நோய்கலி என்னும்இ-ரண்டையும் வெல்லநின் நோக்கம்கரு
தென்னைப்
பேய்கடுக் கும்கொடி யோர்தொடர் பால்இருட் பிணக்கேன்உறச்
செய்தாய்
தாய்கவின் தோய்தரு வல்லவை பங்குறச் சடைமாமுடி காட்டிக்
காய்கனல் வெற்பெனச் சந்திகள் தோறமர் காவற்கண பதியே.
786

நிற்பழிச் சிக்கொடை நல்கெனக் கெஞ்சியும் நெஞ்சொஞ்சில
னாகி
அற்பர்தம் பாலும்இ ரக்குமென் னைக்கடிது அருளற்கிசை
யாயோ
நற்பழ வர்க்கமும் பற்பல உண்டியும் நல்கிப்பணி யாமுன்
கற்பகப் பொன்னகர் வானர்தம் சிந்தையும் காணாக்கண
பதியே. 787

பாவிகள் சொல்வசைக் கஞ்சுபு நின்றிநப் பதமேகருது யான்நின்
கோவில்கள் தோறுமெய்ப் பதி கத்துதி கூறப்பெறு வேனோ
தாவில்பொன் னூர்இறை யும்குறு மாமுனி தானும்களி கூர
காவிரி யோடுசெப் பாறுத வுந்தனிக் கருணைக்கண பதியே. 788

வானவர் தம்பெரு வாழ்வையும் எள்ளிநின் மலர்த்தாள்விழை
வேனை
ஈனமி டிக்கொடு நோயிடை வாதனை ஏன்தான்செய்கின்
றனையோ
தேனவிழ் செச்சைம லர்த்தொடைச் சேந்தனைத் தினைத்தண்
புனத் தருகுஉள்
கானம றக்கொடி தோய்தரக் குஞ்சரக் களிறாம்கணபதியே. 789

பொய்கொளும் நாவுடை யார்உல கிற்பெரும் பூரிப்புறக் கண்டு
மெய்கொளும் நெஞ்சுடை யார்தவிக் கும்துயர் விலக்கற்கிசை
யாயோ
நெய்கொளுமென் பூஅருச் சித்தொரு பாடலும் நிகழ்த்தும்பெரி
யானைக்
கைகொடு வெள்ளிவ ரை த்தலை விட்டருள் காதற்கண
பதியே. 790

## 80-ஆம் பத்து

பத்தியுடைத் தொண்டரெலாம் பரவுமுதற் றனையாகி
நத்தியபல் மனைதோறும் நகர்தொறும்வாழ் நால்வாயே
எத்திசையும் போற்றிசைக்கும் இசைவிழையும் எளியேனுள்
சித்திநவம் எய்துமெனத் தேற்றியதேன் மறந்தாயே. 791

ஒண்கனக வரைஏட்டில் ஒருமுனிசொல் கதையாவும்
விண்களிப்ப மண்களிப்ப விரைந்தெழுதும் விறலோனே
எண்கைநிகர் ஆகுமனத்து எனைச்சிறிதும் இகழாமல்
திண்கைநறும் புனலாட்டித் தேற்றியதேன் மறந்தாயே. 792

ஒருநாளும் மறவாதார் உள்ளம்விரும் புவளல்லாம்
தரும்நீர்மை யதுகுன்றாத் தந்திமுகத் தம்மானே
பெருநோன்புற் றிடமாட்டாப் பேதையார் பெறலரிய
திருநீறென் நுதற்கணிந்து தேற்றியதேன் மறந்தாயே. 793

மறுவில்பெருங் கற்புடைய வல்லவைச்சத் தியைத்தாங்கி
அறுவரும்சொல் பிரணவத்தில் ஆடல்செயும் அருளாளா
கறுவுசினம் பொலிநெஞ்சக் கள்வனேன் றனைஅன்பால்
சிறுபருவத் தாட்கொண்டு தேற்றியதேன் மறந்தாயே. 794

வஞ்சமனத் தானவர்தம் வாழ்வனைத்தும் அறமாற்றித்
தஞ்சமெனத் தொழும்தேவர் தமைப்புரக்கும் தார்க்களிறே
எஞ்சலில்சீர் பெறவேண்டி யாவருக்கும் முதலாம்நின்
செஞ்சரண்போற் றிடஎன்னைத் தேற்றியதேன் மறந்தாயே.
795

அம்பொனகர்த் தேவர்பணி அளவறக்கொள் வான்ஒருவற்
கொம்பொன்றால் வதைத்தருளும் கோமளச்செங் குஞ்சரமே
வெம்பொனார்க்கு அஞ்சஎனை விடலாமோ வெட்கமின்றிச்
செம்பொன்வரைத் துண்டிரக்கத் தேற்றியதேன் மறந்தாயே.
796

நிந்தைநபகர் சந்திரனை நீசமுறச் சபித்தப்பால்
தந்தையைப்போல் தானதுஆனைத் தலைமீதும் சுமப்பானே
பந்தைநிகர் முலைமாதர் பலர்வாஞ்சை படும்என்பாழ்
சிந்தையறி சாட்சியதாத் தேற்றியதேன் மறந்தாயே. 797

பம்புதமிழ்க் குறுமுனிக்கும் பருப்பதத்தின் பகைவனுக்கும்
அம்புநதி யிரண்டீந்த ஐந்துகரத்து ஆரமுதே
செம்புள்உகைத்து உலகுஆளும் திருமால்போற் செயல்வேண்டும்
தெம்புறுமாறு எனையன்றே தேற்றியதேன் மறந்தாயே. 798

கந்தன்மனம் களிகூரக் கருங்குறத்தி கானகத்தில்
வந்தணையும் படிசெய்த வாரணமா முகவள்ளல்
பைந்தமிழ்ப்பா சுரம்வேட்டுப் பலகாலும் படிறுஆர்என்
சிந்தையி னிடைதோற்றித் தேற்றியதேன் மறந்தாயே. 799

கொவ்வையிதழ்ச் சிலைபாகன் குலவியவெண் குன்றின்மிசை
ஔவைஅந்நாள் உறச்சேர்க்கும் அடற்றுதிக்கை அணியோனே
இவ்வையத் துடன்அவ்வான் ஏங்குறத்தீங் கியற்றுசனத்
தெவ்வைவெல்சீர் வேண்டஎனைத் தேற்றியதேன் மறந்தாயே. 800

## 81-ஆம் பத்து

நெடுங்கரத் தால்அம்பொன் வரைச்சிறு துண்டுஇந்
நேரம்நல் கௌஉனை நிதம்இரக் கின்றேன்
அடுங்கன வேபுரை நிந்தைமிக் களித்தாய்
அறமொடு சரதமும் அழிந்ததென் கொல்லோ
விடுங்கட மால்வரை அனையபி ரானே
வேதமொடு ஆகமம் வெருவுற உறுக்கும்
கொடுங்கலி யிடைமுன்னை யுகப்பயன் காட்டாய்
கோடையிற் கார்காலம் குலவிய வாறே. 801

என்றுசொற் றிங்களைச் சபித்துவிண் ணவர்க்கா
ஈனமுற் றுயர்செயும் யானையப் பாநீ
அன்றும்வெண் [illegible]றென்புன் நுதற்கணிந் திலையோ
அப்பயன் சிறிதும்இங் கலிரஒண் ணாதோ
கன்றும்வன் மனத்தொடு புன்மையும் தோயும்
காரிகை யாரது கருங்கண்மென் முலைக்கும்
கொள்ளுமென் காமத்தில் தவப்பயன் காட்டாய்
கோடையிற் கார்காலம் குலவிய வாறே. 802

ஆரணம் ஆகமம் ஆதிய நூல்கள்
அனைத்தும்முற் பரவிய ஐங்கரத் தரசே
நாரதன் அறியநின் தம்பிசொல் மாற்றம்
நழுவியது ஒத்தது, நான்மெலி கின்றேன்
பூரம்ஒன்று இவர்தரு பாவையும் வஞ்சம்
புரியலுற் றாள்இனிப் புகலறி யேன்,என்
கோரவெங் குணத்தில்இன் னருட்டிறம் காட்டாய்
கோடையிற் கார்காலம் குலவிய வாறே. 803

பிறையணி சடைமுடிப் பிஞ்ஞக னே போல்
பேதையொ டாடிய பிள்ளைமுன் னவனே
கறையடிக் கன்றுரு வாகிஅன் றருணைக்
கண்எனக் குரைத்தசொல் கருதிலை கொல்லோ
மறைநெறி வாழ்வுற ஏனைய தாழ
வாஞ்சையுற் றுழைத்தும்நன் மகிழ்ச்சிஎய் தாமல்
குறைவுறு மனத்தில்உன் நிறைவினைக் காட்டாய்
கோடையிற் கார்காலம் குலவிய வாறே. 804

தவளம தாம்பிறைக் கோடுகொண் டன்றோர்
தானவ மால்கரி தடிந்துயர் தந்தாய்
பவளவெற் பாயநின் திருவுரு நாடும்
பய னருளாடுதனைப் படுத்துதல் முறையோ
அவன்அவள் அதுஎனும் மூன்றும்நின் ஆட்டென்று
அறிந்துகொண் டேன்நிசம் அதுவும்நின் செயலே
குவலய மாயையில் அருட்டிறம் காட்டாய்
கோடையிற் கார்காலம் குலவிய வாறே. 805

தள்ளையும் தந்தையும் ஆயமெய்க் கோலம்
சமைந்தினி தாடிய தாரகத் தலைவா
என்னைஒப் பாம்அருள் செய்குவை யானால்
இகம்பரம் இரண்டினும் ஏற்றம்எய் தேனோ
வள்ளைவெட் குஞ்செவிக் குறமகள் கோனும்
மாயனும் ஈசனும் மற்றைய ரும்செய்
கொள்ளைஉ லோபத்துன் கொடைத்திறம் காட்டாய்
கோடையிற் கார்காலம் குலவிய வாறே. 806

பேழைஒப் பாம்பெரு வயிற்றுணவு ஓதும்
பெற்றியுற் றாரையும் பேணிய பிள்ளாய்
மாழைம யக்குடைச் சிறியவ ரேபோல்
வாடுகின் றேற்குன் மனமிரங் காதோ

தாழைமுள் மலர்கொளும் வாளுடை யவனால்
 தவம்குலைந் தளவறத் தளர்வுறும் தமியேன்
கோழைமென் மனத்தருட் சொற்றமும் காட்டாய்
 கோடையிற் கார்காலம் குலவிய வாறே. 807

ஆபத்துத் தீர்த்திரு தொண்டருக் கந்நாள்
 ஆறிரண் டருளிய ஐங்கரத் தமுதே
கோபத்திற் சிரிய தானவர் போல்வார்
 கொடும்பகை விளைத்துளம் குலைந்துழன் றேன்காண்
நீபத்தி சோதனை செய்திடல் முறையோ
 நினைப்பவை முடித்தருள் நீர்மையன் அலையோ
கூபத்தென் விருப்பத்து ஆறொன்று காட்டாய்
 கோடையிற் கார்காலம் குலவிய வாறே. 808

ஏதிலப் பாம்விழிக் குறமகள் போகம்
 இளையனுக் கருளிய எந்தைபி ரானே
நீதிரு வாய்திறந்து ஓதிய மாற்றம்
 நிசப்படின் அல்லதுஇந் நீணிலத் துய்யேன்
சாதியும் சமயமும் கடந்தமெய் வேடம்
 தலைக்கொடுஇல் லறம்புகும் வழக்குடை யேற்கும்
கோதில்மெய் யடியவர் கூட்டமும் காட்டாய்
 கோடையிற் கார்காலம் குலவிய வாறே. 809

நடுத்தெரு வார்முதற் போற்றிட எல்லா
 நகர்தொறும் வாழ்வுறும் ஞானக்குஞ் சரமே
எடுத்தொரு கிழவியைக் கயிலையில் விட்டாய்
 என்னையிங் ஙனம்துயர் ஏன்செய்கின் றாயோ
கடுத்தவன் குணத்நின்என் மனவெளி யூடும்
 கருணையிற் சிரியர் கைக்கோள மேனாள
கொடுத்தமெய் யருட்பயன் முழுதுறக் காட்டாய்
 கோடையிற் கார்காலம் குலவிய வாறே. 810

## 82-ஆம் பத்து

உந்திபூத் தவனே போலும் உரன்பெற உன்னா நின்றேன்
மந்திநேர் மனத்துப் பொல்லார் வாதினும் வருத்த
 வேண்டாம்
சந்திகள் எங்கு மேவித் தவமுளார் தம்மையாளும்
தந்திமா முகப்பி ரானே சற்றெனக் கருள்செய் வாயே. 811

அவனவள் அதுஎன் றுள்ள அனைத்தும்நீ ஆவ தோர்ந்தும்
குவலய மாயை யாலே கோடிவா தனைப்பட்டு எய்த்தேன்
பவளமால் வரைநேர் மேனிப் பகட்டுமா முகத்தின் ஓர்பால்
தவளவாண் மருப்பொன் றுள்ளாய் சற்றெனக்
கருள்செய்வாயே. 812

வஞ்சக மின்றி நானும் மனத்தினாற் கருது வாரைக்
குஞ்சரக் களிறாத் தோன்றிக் கோதில்சீர் கொடுத்தாள்
வானே
பஞ்சபா தகம்செய் பொலலார் பலரையும் அடக்கல்
வேட்டுத்
தஞ்சமென் றுனைநம் புற்றேன் சற்றெனக்
கருள்செய்வாயே. 813

அரதனங் களும்செம் பொன்னும் அரவமும் அணிந்து நாளும்
புரதக னன்போ லாடும் புகர்முகப் புனித மூர்த்தி
கரதலத்து ஒன்றால் அன்றோர் கனவில்நீறணிந்த காட்சி
சரதமே யாகுமாறு சற்றெனக் கருள்செய்வாயே. 814

பழையநால் மறைசொற் றேவர் பலரையும் பரவி நின்றேன்
உழையணி கரப்பி ரானும் ஒருபயன் உதவு கில்லான்
மழைபுரை மதங்கள் மூன்றும் வார்தர மனத்துள் வந்த
தழைசெவிப் பெருமான் நீஓர் சற்றெனக் கருள்செய் வாயே.
815

பொங்கரவு அனைய சீற்றம் பொலிதரு பொல்லார் பாலும்
செங்கரம் விரித்து நாளும் தியக்கமுற் றிடைந்தேன் கண்டாய்
ஐங்கரம் கொளும்என் அப்பா அவுணராம் அவர்க்கும் நல்கும்
சங்கரன் மகன்நீ யானால் சற்றெனக் கருள்செய் வாயே. 816

வண்ணவாய் மடவார் பாலும் மறுபிறப் பில்லா வீட்டும்
எண்ணமுற் றிடையச் செய்தோன் யாவனோ அறிகின் றில்லேன்
விண்ணவர் முனிவர் போற்றும் வேழமா முகப்பி ரான்நின்
தண்ணருள் கடலி னூடோர் சற்றெனக் கருள்செய் வாயே. 817

பொருளையும் பொன்னி யாறும் புவிஉயும் படிஅன் றீந்தாய்
ஒருநதி நாயேற் கீந்தால் உம்பர்நிற் பழிப்பார் கொல்லோ
திருமலி யானைச் சென்னிச் செயவிநா யகனேநல்ல
தருணம்ஈ தறிதி அந்தோ சற்றெனக் கருள்செய் வாயே. 818

கந்தவேள் குறத்தி ஆசைக் கடற்படக் கடத்தி ஆண்டாய்
இந்தவன் கலிநோய் தீர்த்தாண் டிடில்உனக் கிளப்பம் ஆமோ
அந்தமில் பிரண வத்தால் அதுதினம் கருதுவா ருள்
தந்தவா ரணமாம் அப்பா சற்றெனக் கருள்செய் வாயே. 819

கொவ்வைவாய் மடவார்க் கெல்லாம் குலப்பெருங் கடவுளாகும்
அவ்வையைக் கயிலைக் குன்றில் அன்றுவிட் டருள்அம் மானே
இவ்வையத் துடன்அவ் வானும் இன்புறச் செயச்வேட்
டெய்த்தேன்
தவ்வைவந் தணுகா வாறு சற்றெனக் கருள்செய் வாயே. 820

## 83-ஆம் பத்து

சிவத்துடன் அருட்பரை சேர்ந்த ஆதிநாள்
நவத்தலை மதலையா நண்ணும் நாகமே
கவத்தினுக்கு அஞ்சிநின் கழல்கள் நாடுமென்
தவத்திடை நேர்பல தடையும் தீர்த்தியே. 821
நாகம் - யானை

எஞ்சலில் உணர்வுளார் எவரும் போற்றிடக்
குஞ்சர முகத்தொடு குலவும் கொற்றவா
கஞ்சனை வெலும்திறம் கருதுஎன் நெஞ்சிடை
சஞ்சலம் தரும்பல தடையும் தீர்த்தியே. 822

வானவர் மானிடர் மிருகம் வன்குறள்
ஆனநாற் கோலமும் அமைந்த அப்பனே
ஞானமும் சித்தியும் நாடும் என்னெதிர்
தானவர் செயும்பல தடையும் தீர்த்தியே. 823

மனிதரா கியபல கணத்தும் மாசறு
புனிதயோ கியர்உணர் பூட்கை வானவா
பனிஇக லவன்முதற் பகர்பல கோள்களுட்
சனிசெயத் தகும்பல தடையும் தீர்த்தியே. 834

அரித்திரள் வழிபட அருள்செய் தாட்கொளும்
கரித்திரு வுருவுடைக் கருணை கண்ணுதல்
எரித்திடும் கனலினும் ஈடு மிக்குறும்
தரித்திரம் செயும்பல தடையும் தீர்த்தியே. 825

பிழைமிகத் தினம்செயும் பேதை யேனுளம்
மழைமதக் களிற்றுரு வாகி வந்துளாய்
பழையபல் பிறப்பினும் பரிந்து தேடலில்
தழையும்ஊழ் வினைப்பல தடையும் தீர்த்தியே. 826

கணப்படை யோடுபோய்க் கரிய தானவர்
நிணப்பருப் பதம்செயும் நிமல வேழமே
மணப்பது மாதனன் வரைந்த வண்மையால்
தணப்பரி தாம்பல தடையும் தீர்த்தியே. 827

விண்ணவர் கோன்தமிழ் வெற்பன் இன்புறத்
தெண்ணதி யிரண்டுஅருள் சிந்து ரானனா
எண்ணமிக்கு ஏங்கும்எற்கு இரங்கி நின்பெருந்
தண்ணளி யாற்பல தடையும் தீர்த்தியே. 828

செயங்கொள்வா னவர்தொழச் செக்கர் மேனியில்
கயங்குலாம் முகங்கொடு கவின்ற காரணா
மயங்கும்வேள் உயத்தினை வனத்திற் காத்ததில்
தயங்களற் சூழ்பல தடையும் தீர்த்தியே. 829

செவ்வையாம் தமிழ்க்கடல் திளைத்த சீரருள்
ஔவையைக் கயிலைமீ தன்று சேர்த்தவா
தெவ்வைவென் றுவக்குமெய்த் திருவின் வாஞ்சையேன்
தவ்வைசெய் திடும்பல தடையும் தீர்த்திமே. 830

## 84-ஆம் பத்து

மோலியிற் றிங்களும் கொன்றையும் முடித்துத் தன்தாதை
போலிடத்து ஓர்மக ளுங்கொடு நாடகம் புரியும் புங்கவனே
பாலினும் வெண்ணெயி லும்தயிர் நெய்யினும் பருத்தஆவ
ஊற்றும்
காலியுங் கொல்பவர்க் காண்பத னால்வரும் கண்ணோய் தீர்த்
தருளே. 831

தண்டுகொண் டச்சுறுத் துங்கொடுங் காலனைத் தடிந்த தாள்
இறைபால்
பண்டுதித் துக்கம லன்கயன் ஆதியர்ப் படுத்த புண்ணியனே
மண்டும்இ ரக்கமி கும்பல மாதவர் வருந்து றும்கொடுமை
கண்டுகண டுள்ளம்வெ தும்புவ தால்வரும் கண்ணோய் தீர்த்
தருளே. 832

ஆதவன் மண்டலம் உந்தியிற் றோய்தர அகன்று நீள்உருவாய்ப்
பாதம்வ ணங்குநர் தம்கன வூடுஅடற் பகட தாவருவாய்
வேதமும் ஆகம கோடிக ளும்தினம் விளம்பும்
சொல்விழையாக்
காதகர் தீக்குடைக் கீழ்ப்படும் தீட்டுறழ் கண்ணோய
தீர்த்தருளே. 833

நாமகள் பாடிடப் பூமகள் கைப்பணி நண்ணும்
அம்மைசொல்லால்
தாமரைக் கண்அரி பாம்புரு வாதனை தவிர்க்கும்
தந்தியப்பா
நேமமுற் றுப்பெரு மாதவ மாம்பொது நெறிச்செல்
கின்றேற்குக்
காமன்அம் பைந்தின் நடுப்பெறல் நல்கியகண்ணோய
தீர்த்தருளே. 834

சினக்கும் ஊடலில் வல்லவை யன்றியும் சித்தி புத்தியுமாம்
இனக்கொம் பன்னவர் தாமும்வி ரும்பிட எங்கணும்
வாழிறைவா
தனக்கும் தன்னுயிர்க் கும்துணை போல்பவர் தம்மை
மறந்திகழும்
கனற்சொற் சூடெனத் துன்புறுத் தத்தகு கண்ணோய்
தீர்த்தருளே. 835

மலியும் மும்மதத்து ஆறுகள் பாய்தரு மலையென்று
ஓர்கனவில்
தெலிதத் தப்புறம் தன்துதிக் கைப்புனல் கிருபை
யால்நனைத்தாய்
பலியுண் பார்திரட்டு அன்னமிட் டுப்பதம் பணியும்
ஆசைவிடார்
கலியி னும்பெரு வாதனை செய்திடும் கண்ணோய்
தீர்த்தருளே. 836

நாற்றிசை யும்பல ஊர்ப்பெரும் சந்தியும் நண்ணுத
லுடத்தவிரச்
சேற்றில வேர்ப்பவர் செக்கடி யாதியும் தினங்கொள்
சிந்துரமே
தூற்றி மண்கொடு போய்இமை யார்வளர் சுவர்க்க
மும்கெடுக்கும்
காற்றின் ஆதர வால்பல ரைத்தொடர் கண்ணோய்
தீர்த்தருளே. 837

கும்பமு னிக்கும்விண் ணோர்இறைக் கும்பெருங்
கொற்றமெய்திடவே
செம்பவ ளக்கிரி போலவிர்ந்து ஆறருள் சீர்த்தி வாரணமே
மொய்ம்படற் செய்கையும் குன்றிடல் மென்கசும் மொய்த்துப்
பிய்த்திடலுட்
கம்பலை நீடிடல் ஆதிய இன்னல்செய் கண்ணோய்
தீர்த்தருளே. 838

ஆதவன் சந்திரன் ஆதிய தேவரும் அசுர ரும்தொழல்போல்
பூதக ணங்களும் போற்றிய ஆற்றல்கொள் புகர்ப்பொன்
வாரணமே
மாதர சாம்எழில் வள்ளிமுன் எனலில் மறுகும் வேலனுக்குக்
காதல்வெம் நோய்தவிர்த் தாங்கெனக் கின்றிந்தக் கண்ணோய்
தீர்த்தருளே. 839

ஆணவ மாதிய மும்மல வாதனை அழிக்கு மும்மதநீர்
வேணமட் டும்சொ ரியத்தகு செம்புகர் வேழவி நாயகனே
பாணர்செய் மாதவ மாவளர் ஔவைசொல் பாடல்நல்கார்
காணவி ழைந்துமு யன்றுவ ருந்தும்என் கண்ணோய்
தீர்த்தருளே. 840

## 85-ஆம் பத்து

வெந்துக ளேகுண மாகமு யன்றுள வினைரு மிகஏச
நொந்துபு லம்புறு மென்மிசை நின்னருள் நோக்கம
தின்றேயோ
இந்துமு டித்தவன் முற்றரு புத்திரன் என்பது நிசமானல்
ஐந்துக ரத்தொரு கணபதி யப்பா அருள்சிறி தருள்வாயே. 841

பைந்தோ கைப்பரி மிசையிவர் நின்துணை பற்பல
மொழிகூறி
வெந்தோ டக்கட லிற்படி வித்தான் வேறொரு
துணைகாணேன்
நந்தோங் குங்கர நாரண னுக்கருள் ஞானவி நாயகனே
அந்தோ இன்னமும் நான்மெலி வடையா தருள்சிறி
தருள்வாயே. 842

சப்பா ணிக்கால் என்றுப கர்ந்துள சரசக் கவியோரும்
துப்பா ரத்தகு, மிவ்வுலகத்துயான் சோர்வது முறைதானோ
ஒப்பா ருந்தவிர் வாய்அடி முலத்து ஓங்கா ரப்பொருளாம்.
அப்பா இன்னமும் என்னை எவ ருத்தா தருள்சிறி தருள்வாயே
843

சங்கர னும்திரு மா லும்நி கர்க்கும் தகைபெற விழைவேனைப்
பொங்கமி குங்கலி, யால்வெருளப்புரி புல்லிய தேஅயலோ
இங்கரு ளேகதி யென்றுறும் என்மிசை இன்னமும், அஞ்சாமே
அங்கச வேள்எதி ராதுக ணேசநின் அருள்சிறி தருள்வாயே.
844

பாறுபு சிப்பஅ ருந்துநர், பற்பலர் பாக்கியம் உறல்கண்டு
கிறுமு கக்கிளி உண்பஅ ருந்துநர் கேடுப டத்தகுமோ
நீறுமி ருந்தியல் சந்தன குங்கும நேயம்வெ றுக்கலவாம்
ஆறுநெ றிப்பொது வாயவிர் வாய்நாயக அருள்சிறி
தருள்வாயே. 845

கந்தமி குத்திரு ஆத்திமி லைத்திரள் கைக்கொடு,
பூசைசெய்துயான்
இந்தஉ ணர்ச்சி யடைந்தது மெய்ப்பட ஏனரு ளாதுறலோ
கந்தந றுந்தமிழ் பாடுநர் கூலித ரும்தொழில் விட்டனையோ
அந்தரர் சூழ்கண நாதனே உன தருள்சிறி தருள்வாயே. 846

இல்லா மைக்கொடி தால்வெகு வாதனை எய்தும்
கடையேனுக்கு
எல்லா நன்மையும் உண்டா கச்செயும் ஈடின்றி டத்திலையோ
கொல்லா மெய்த்தவர் நல்லார் வத்தினர் கொள்ளா
ரைக்கணியார்
அல்லார் முற்பெரிது ஒல்கா மற்றிரு அருள்சிறி தருள்வாயே.
847

கூறரி தாகிய ஞானவி னோதகு ணாலமு றும்பெரியோரா
பேறசையப்புரி வாய்அர னார்தரு பிள்ளைப் பெருமானே
ஏறவிரி கேதனன் நேர்குறு மாமுனி இந்திரன் இன்புறநீர்
ஆறருள் ஐங்கர னேஅடி யேற்குன தருள்சிறி தருள்வாயே. 848

குயில்புரை வல்லவை ஆதிய சத்திகள் கூடுமர் ஆகுவில்வந்து
எயிலின்முன், உற்றவர் போலிருக லோர்களை யான்வெலும்
ஈடருள்வாய்
மயில்புரை சாயல்ம றந்திற ருத்தி மயற்கட விற்படும்நாள்
அயிலவன் வாமுஅ ளித்தனை யான்உய அருள்சிறி
தருள்வாயே. 849

மசகம தேநுகர் வுல்லரை யும்கரி மானுந ராவிழையும்
பிசருடை யாரொடு மாழ்கினும் என்னது பெற்றிய
றிந்திலையோ
கசமுக வானவ னேமுதி யாள்பகர் கவியின் சுவாமிகையால்
அசலம நன்தலை விட்டனை ஏற்கிவண அருள்சிறி
தருள்வாயே. 850

## 86-ஆம் பத்து

ஞானவி னோதவி ளக்கமே நாடிய சிலர்த மக்கெலாம்
ஆனபல் வேலைசெ யற்குநான் ஆசைகொள் பான்மை
அளித்ததுயார்?
தேனவிழ் பூமிக இட்டுளார் தேவையெ லாம்விரை
விற்செய்ஓர்
மோனம யேசர் தலத்தில்நேர் மூவயின் யானைமு கத்தனே. 851

பாதக மேபுரி துட்டர்கள் பாழ்பட மோதுப டைக்கையார்
ஆதரம் நீயென மொய்க்கும்வாழ்வு ஆரள நாள்அரு
ளிச்செய்வாய்
பூதக ணாதிபர் முற்பலோர் பூசைசெய் போது படைப்பவாம்
மோதகம் ஆதிய மொக்குசீர் மூவலில் ஆனைமு கத்தனே. 852

காவிகள் நேர்விழி கட்கொடே காமவி லாசம்வி ளைக்கும்மா
பாவிகள் ஏவல்செ யற்குஒல்கார் பாலும்என் ஆசைஉ
ரைக்கைதிர்
பூவில்உ ளான்மறை உச்சிநோய் பூரண போதவி ருப்புளார்
மூவிரு பேரும் வழுத்துமாண் மூவலில் ஆனை முகத்தனே 853

மேருவி னூடொரு கட்டியான் வீழ்தரு போதரு ளிற்பொரேர்
யாருமி வாறிசூழ் கிற்பரோ? எனது கூறினை பொய்சொலோ
மாருதம் நாளும ளிப்பவாம் வார்செவி யீடுப டைத்துளாய்
மோருவ தானது திக்கையாய், மூவலில் ஆனைமு கத்தனே.
வீழ்தருபோது—விரும்புமசமயம் மாருகம்-காற்று
மோருவதான-முகரிதற்குரிய துதிக்கை நாசியென்பது. 854

நாகமெ லாமும்வ முத்துகோ நாணொடு சோர்வுறும்
அற்றைநாள்
நீகரு ணாலயம் ஒத்துநேர் நீர்பகர் வேணைவெ றுத்திடேல்
பாகம்வி டாவல வைப்பெணாள் பாலவண் நேர்சிலர்
பக்கல்மா
மோகச லாபம்வி ளைப்பவா மூவலில் ஆனைமு கத்தனே. 855

பாசம தால்இறு குற்றவர் பாசம றாதஎ னக்குள்நீ
நேசம தாநுவல் சொற் பொயேல் நீடுமுன் நூல்விதி
மெய்ச்சொலோ
பூசனை ஆசைமி குத்துளார் போகமும் வீடும்வி ளைப்பவா
மூசளி யாரும்ம தத்தெண்நீர் மூவலில ஆனைமு கத்தனே
மூசுஅளியாரும்—மூச்சு வாற்கான நாசிவழி வரும்
அன்புள்ளது தும்பிக்கை. 856

ஆடகம் நீதரும் இச்சையால் ஆயிரம் ஓதிஇ ணைத்துளேன்
ஏடலர் தாமரை யுற்றகோ வேபர மாக விடுத்திடேல்
கோடத னால்இகல் பட்டவர் கோலம்அ னேகம்எ டுப்பவா
மூடர்சொல், பாடல்வி ருப்பிலாய் மூவலில் ஆனைமு
கத்தனே. 857

ஏதமில் சீர்மல யத்துளான் ஏழ்முகில் வாகனன் அற்றைநாள்
சீதநன் நீர்நதி பெற்றவா தேடும்என் ஆவல்கு றிக்கையோ
ஆதவன் மேயவ யிற்றைஓர் ஆடர வாலும் இறுக்குவாய்
மூதருள் வாரிப டைத்தவா மூவலில் ஆனைமு கத்தனே. 858

வேலவன் நீலம றத்திதோள் மீதுறு மோகம் ஒழித்தநீ
ஆலம தாயநி ரப்பில்யான்ஆய்துயர் போகஅ ருட்செய்வாய்
சீலர்க ளாம்உயர் சித்தரே தேறிய தாரக வித்துள்வாழ்
மூலவி நாயக வித்தகா மூவலில் ஆனைமு கத்தனே. 859

நாரியர் சேகரம் ஒத்துளாள் நாசமி லாஅரன் வெற்பின்மேல்
ஈரியல் நாவலர் வெட்கவே(கு) ஈடுசெய் தாய்எனை எற்றிடேல்
சீரிய பாசதொ றட்டியாய் தேவரெ லோரும்வெ ருக்கொள்ஓர்
மூரிவல் ஆகுஉ கைப்பவா மூவலில் ஆனைமு கத்தனே. 860

## 87-ஆம் பத்து

புவியினர் இகழ்வகை போதப் பெறும்நான்
அவிநுகர் பலர்புகழ் அடல்பெறு வேனோ
செவியசை தரமினிர் செம்பொற் கிரிநேர்
கவினுறு கணபதி கைஅங் குசமே. 861

அயனெழு தியவிதி அதுதீ தெனினும்
செயமுற உனதருள் சிறிதெற் கருள்வாய்
புயல்நிற முரகரி போற்றப் பொலியும்
கயமுகன் அணிதரு கைஅங் குசமே. 862

பொருள்மய விற்பல புண்பட் டுளநான்
அருணையில் எய்துசொல் அவிர்நாள் எதுவோ
தருணம றிந்தருள் தந்திப் பெருமான்
கருணையி னாலணி கையங் குசமே. 863

மான்முத லோர்பெறும் வலியே விழைவேன்
ஆன்முறை கேட்டுளம் அயரத் தகுமோ
பான்மதி நீறணி பரமன் தலைமைக்
கான்முளை பற்றிய கையங் குசமே. 864

சாதன மோடலிர் தவமெய் தியநான்
மாதர் மயக்கிடை மருளத் தகுமோ
போதக மூர்த்திபல் புனிதத் தினரைக்
காதலின் ஈர்த்தருள் கையங் குசமே. 865

மணமலர் தூவும்நின் வழிபா டும்எனக்கு
அணவிய வாறிவண் அடைகின் றிலனே
பணகண மோடவிர் பைம்பொன் புரையும்
கணபதி யப்பனொர் கையங் குசமே. 866

தடமுலை மங்கையர் தருமால் கொளும்என்
இடர்களை யிற்பிழை எனஎண் ணுதியோ
அடல்கொள்வி நாயகன் அரமா தருடைக்
கடவுள ராலருள் கையங் குசமே. 867

நதியிரு வர்க்கருள் நலம்ஓ துமெனைப்
பதிதர்கள் ளாவிசை பாலித் தருள்வாய்
மதிபுனை வார்சடை மதமா முகனே
கதியெனும் நஞ்சுணர் கையங் குசமே. 868

மாமயி லோன்மனம் மகிழக் களிறாய்ப்
போமருள் கூறுதல் புகழன் றுகொலோ
கோமள வல்லவை கொழுநன் புனையும்
காமர்மி கப்பெறு கையங் குசமே. 869

தவ்வைமு கத்தினர் சமயம் தளரச்
செவ்வைநி றத்தொரு செயமென் றருள்வாய்
ஔவையு ணர்ந்தகை ஐந்தூடு அடியார்
கவ்வைஅ றச்செறு கையங் குசமே. 870

## 88-ஆம் பத்து

தக்க நான்மறைச் சம்பம்ஓ ராறும்நின்
தாரகத் திடை தோய்ந்த
மிக்க ஞாயம்நன் குணர்ந்தும்நான் இங்ஙனம்
வெருளுற விடலாமோ
செக்கர் மேனியும் சிறுபிறைக் கோடும்நற்
செவித்துணை களும்சேர்த்த
கைக்க ளிற்றுமா முகமும் வாய்ந் தவிர்தரு
கணபதி யப்பாவே. 871

அனக மாதவ முனிவரும் புலவரும்
அகம்களிப் பதுவேண்டும்
எனது நெஞ்சகத் துயர்முழு தொழிப்பதற்கு
இரங்கிடா துறலாமோ
பனக பூடணத் தாதைமுன் முனிபகர்
பனிக்கதிர் குலக்காதை
கனக மால்வரைப் புறததினில் வரைந்தருள்
கணபதி யப்பாவே. 872

கொங்கை யாதிய மகளிர்தம் அவயவம்
குறித்துளம் குலைவேற்கும்
சங்கை தீர்பல ஞானமும் சித்தியும்
தரில்உனைத் தடுப்பார்ஆர்?
மங்கை பாகனார் செயும்தவம் தருந்தலை
மகனெனும் புகழ்தோன்றக்
கங்கை வான்மதி கடுக்கையோ டணிசடைக்
கணபதி யப்பாவே. 873

பற்ற வார்செயும் ஆணவக் கொடுமைகள்
பலவும்எற் றொடராமுன்
குற்ற மின்றிய திருவருட் கடற்றுளி
கொடுத்திடற் கிசையாயோ
நற்றவம்பல பிறப்பினிற் செய்ததால்
நான்மறை யதன்மூலம்
கற்ற மாதவர் அனைவரும் முதற்றொழும்
கணபதி யப்பாவே. 874

அஞ்ச லென்றுரைத் துளஒரு துதிக்கைநீர்
ஆட்டிவெண் பொடியிட்டும்
சஞ்ச லம்தவிர் கின்றிலன் எனையினும்
தளர்வுறச் செயல்ஏனோ
பஞ்ச கிர்த்தியச் சிவன்பகர் ஆகமப்
பகுதியும் பரந்தாமன்
கஞ்ச நாபியிற் கடவுள்நூல் களும்புகழ்
கணபதி யப்பாவே. 875

இன்ன மென்றனைச் சோதனை செய்திடேல்
இரங்கும் நெஞ் சில்லாயோ
பொன்ன வாமுதல் ஏடணை மூன்றையும்
புறக்கழித் தினிதாள்வாய்

வன்ன மென்முலை மோகினி தரும்பெரு
மயல்கொள்வான் மகவாயும்
கன்னல் வார்சிலை மதனனுக்கு அஞ்சுருக்
கணபதி யப்பாவே. 876

தாம தக்குணப் புலைநெறிப் பதிதரகள்
தமையெலாம் சுடல்வேண்டும்
நேமம் உற்றுளோர்க்கு ஒரு பயனாயினும்
நீதர நினையாயோ
கோம ளக்குயி லோ,மயி லோஇளங்
குஞ்சரப் பிடியோபோல்
காமரி வல்லவை யாதிய மூவர்தோய்
கணபதி யப்பாவே. 877

சலச மங்கையர் இருவரில் என்மிசை
தவளமின் எனச்செம்மை
குலவும் நங்கைசற் றருள் செயா திருப்பதென
கொடுமையோ அறிகில்லேன்
அலகில் காலமட் டழிவுருது ஒழுகும்நல்
ஆறிரண் டருள்செய்வான்
கலச யோனியும் மகபதி யும்தொழும்
கணபதி யப்பாவே. 878

இந்த மாநிலத் துறும்நலம் இனிதென
எண்ணும்ஏ ழைமைதன்னால்
பந்த மாம்பெருங் கடற்படிந் துழல்எனைப்
பாதுகாத் தருளாயோ
தந்த மால்களி றாவடி வெடுத்தொரு
தடம்புனத் திடைஅந்நாள்
கந்தன் இன்புறக் குறத்தின் திகழ்தரு
கணபதி யப்பாவே. 879

சனியும் தவ்வையும் தரவரும் பெருந்துயர்
சகத்திடை அயில்வேற்குப்
புனித விண்ணவர் போற்றிசைத் திடுந்திறம்
பொருத்தவும் வல்லாயோ
இனிய மங்கைதன் மணமுடித்து அதன்பொருட்டு
இறைவர்மூ வருக்கந்நாள்
கனியோர் மூன்றளித்து அவனுணர் பெரும்புகழ்க்
கணபதி யப்பாவே. 880

## 89-ஆம் பத்து

பெரும்பயன் அனந்தம் வேட்டுன் பெய்கழல் குறிக்கின்றேனைத்
துரும்பனார் தாமும் எள்ளத் துயர்க்கடற் சுழற்ற வேனோ
கரும்பனால் விளையும் பொல்லாக் காமமே முதலாக் காணும்
அரும்பிணி முழுதும் தீர்த்தாள் ஆனைமா முகப்பிரானே. 881

துய்யநீ றுனது செம்பொற் றுதிக்கையின் துனியாற் றீட்டும்
செய்யபே றடைந்தும் நான்இத் தியக்கம்உற் றிடையலாமோ
பொய்யர்செய் அறியா யங்கள் பொறுத்திட லல்லேனல்லேன்
ஐயகோ இனியென் செய்வேன் ஆனைமா முகப்பிரானே. 882

பந்துநேர் முலையார் மோகப் படுகுழி யிடைப்பட்டாலும்
முந்தும்நான் மறைசொல் நீதி முழுமையும் விழைந்திலேனோ
நொந்துநான் தவியா துன்கண் நோக்கம்ஓர் சிறிதுநல்காய்
ஐந்துகைதுத் துவரக் குன்றே ஆனைமா முகப்பிரானே. 883

சித்தியும் முத்திப் பேறும் தினந்தினம் பணிவார் உண்மைப்
பத்திகண் டருளும் நீஎன் பரிவுணர்ந் திரங்கொண் ணாதோ
சத்திஓர் பாகம் உற்றும் தனதுடற் போர்வைக் காக
அத்திஒன் றுரித்தார் ஈன்ற ஆனைமா முகப்பிரானே. 884

பங்குபட் டிகலிப் போர்செய் பலமதக் குறும்பும் நீத்த
செங்குண மடைந்தும் நான்இத் தீவினைப் பயன்துய்ப் பேனோ
கங்குலின் கனவிற் சொன்ன காரணப் பலிதம் காட்டாய்
அங்குச பாசம் ஏந்தும் ஆனைமா முகப்பிரானே. 885

நாரணன் முதலி னோரும் நணுகரும் நிலைமைத் தாய
பூரண பதம்வேட் டுள்ளேன் பொருள்மயக் குறலாம் கொல்லோ
சீரண மடையா வண்ணம் திருவருட் பயன்தந் தாள்வாய்
ஆரண முகந்தோ றாடும் ஆனைமா முகப்பி ரானே. 886

புற்புதம் அனைய வாழ்க்கை பொருளெனக் குறித்துள் ளார்பால்
சொற்புதன் நிகர்வார் ஏற்கும் துயரறக் களைதல் வேட்டேன்
எற்புறம் கழிக்க வேண்டாம் இணையடித் தொழும்பீந் தாள்வாய்
அற்புத முனிவர் போற்றும் ஆனை மா முகப்பி ரானே. 887

பொருனையும் பொன்னி ஆறும் போற்றூர் இருவர்க் கீந்தாய்
ஒருபெருங் கற்க பத்தில் ஊற்றும்எற் குத வொண்ணாதோ
கருணையால் அடிய னேனுட் கனவினிற் கவின்றிட் டந்நாள்
அருணையில் ஒருசொல் சொன்ன ஆனைமா முகப்பிரானே. 888

இறப்பொடு பிறப்பும் தீர்க்கும் இருங்கதி விழைகின் றேற்கு
மறப்புடன் நினைப்பும் தோயா வான்பதம் வழங்கல்என்றோ
குறப்பெணாள் கலவி ஆர்வம் குகன்பெறக் கொடுத்தன்
றாண்டாய்
அறப்பயிர் வளர்ப்பாள் சேயாம் ஆனைமா முகப்பிரானே. 889

கொவ்வைவாய் மகளிர் முன்னாக் குலவுமா டணைமுன்றாலும்
கவ்வையுற் றிடையும் என்சொற் கவித்தொடை அணியாய்
கொல்லோ
தெவ்வைவென்று ஒளிர்வேல் வேந்தர் திரள்தொடிச் சிறக்கும்
தீஞ்சொல்
அவ்வையன் னவரே தேறும் ஆனைமா முகப்பி ரானே. 890

## 90-ஆம் பத்து

சாருஎன்றுன் தம்பிஎன்னைச் சாற்றி ஏமாற்றிப்
பாரும் விண்ணும் உள்ள மட்டும் பழியும்கைக்கொண்டான்
ஆரும் கொன்றைப் பூவும்சூடும் ஆனைத் தலையப்பா
மேரு வெற்பிற் பொன்னுருண்டை விரைந்து நல்குதியே. 891

அல்லும் மற்றைப் பகலும் தாண்டும் அறிவிற் சீரியரே
சொல்லும் வண்மைப் பிரண வத்தின் தும்பிக் கையானே
கொல்லும் ஊனும் தின்னும் பொல்லார் கூட்டங் களையெல்
லாம்
வெல்லு மார்வம் கருதி நொந்தேன் விரைந்து நல்குதியே. 892

பாட்ட னந்தம் பாடித் தொண்டர் பலரும் கொண்டாட
நீட்ட டிற்கைக் குஞ்சரமாகி நிலவும் நித்தியனே
கேட்ட யர்ந்து நன்றும் தீதும் கிளர்பா குலகத்துயான்
வேட்ட போகம் யாவுமின்னே விரைந்து நல்குதியே. 893

பாலும் வண்மைப் புகழும் போலும் பற்பம் புனைகின்றோர்
நாலு பேதக் கிரியை யூடும் நண்ணும் நால்வாயே
மாலும் மற்றைத் தேவர் யாரும் வாழ்த்தப் பெறவேண்டி
வேலும் தண்டும் ஆதிய பேறு விரைந்து நல்குதியே. 894

சேலோ டுறழ்கண் வல்லவையன்றிச் சித்தி புத்தியும்நிமய்
மாலோ டென்றும் புணரச் குலவும் வாரண மாமுகனே
நூலோர் பலரும் ஓத்துசொல்லும் நுண்ணிமை நன்குணரும்
மேலோர் தம்மோ டுறும்நலம் வேட்டேன் விரைந்துநல்குதியே.
89

கோதறு சிந்தை மாதவராவார் குட்டிக் கொளல்கண்டு
மேதம்அ பேதம் தீர்கதி நல்கும் பிள்ளைப் பெருமானே
ஏதம லர்க்கை ஏந்தித் தூவித் தெண்ட னிடச்சலியேன்
வேதன்ன னைச்சிட் டிக்கள னார்சீர் விரைந்து நல்குதியே. 896

ஆதிமு தற்றேவு என்றுண ரா தார் ஆரா நித்தாலும்
நீதில் பெரும்பேறு ஈந்தருள் செய்யும் சிந்துர வானவனே
கோதினர் தம்மைக் கொன்றா னாலும் குணமே செயல்கண்டு
மேதினி யெங்கும் போற்றிடு மாட்சி விரைந்து நல்குதியே. 897

அருமறை நூலோன் புதல்வரில் முன்னோற்கு அம்பொன் நகர்த்தலைவற்கு
இருநதி நல்கும் பெருமைசொல் வாருக்கு இரங்கும் எம்மானே
ஒருகிணறு இங்குயான் தொடுதல் உணர்ந்துஓர் ஊற்றேன் அருள்கில்லாய்
விருதுகள் தாமும் கருதிய வாறே விரைந்து நல்குதியே. 898

வேடம கட்கண் டுள்ளம கிழ்ந்தே விரும்பும் வேள்மகிழக்
கோடவிர் செம்பொற் புகர்முக வேழக் கோலம் கொள்வானே
நாடறி யத்துய்ப் பனமிக இட்டே நண்ணிக் கைதொழுவேன்
வீடடை தற்காக் கருதுபல் சீரும் விரைந்து நல்குதியே. 899

செவ்வழி பாட்டிற் சிறிய ஒளவை சிலர்முன் கதிசேர
அவ்வரை மட்டும் நீடுது திக்கை அமைதரும் அருளாளா
நவ்வல் நிழற்றீவு அளவினி லேனும் நான்போய்ப் போய்வென்று
வெவ்வசு ரர்க்குத் துயர்செயும் ஆண்மை விரைந்து நல்குதியே. 900

## 91-ஆம் பத்து

நாடொ றுங்கும் நலம்பெற நாடிநின்
தாடொ ழும்தமி யேனைத் தணந்திடேல்
பீடொ ழிக்கும் பெரும்பக டைத்தன்ஓர்
கோடொ டித்தடும் குஞ்சர மூர்த்தியே. 901

தொண்டர் பாதத் துகள்புனை சென்னியேன்
வண்டர் பாவிரக் கச்செயல் வண்மையோ
அண்டர் இன்புற அம்மைகை ஆயுதம்
கொண்ட விர்ந்தருள் குஞ்சர மூர்த்தியே. 902

என்ற லைக்கண் இருபதம் சூட்டியான்
நன்ற னந்தம் பெறச்செயல் நண்ணினேன்
தென்றல் வெற்பன்அன் னார்தரும் சிற்றுண்டிக்
குன்றம் மொக்கிய குஞ்சர மூர்த்தியே. 903

ஒன்றை யேபல என்பது ணர்ந்துளேற்கு
என்றை நேர்உணர்வு என்றருள் வாய்கொலோ
மன்றை வாழ்இட மாக்கொளும் வள்ளல்போல்
கொன்றை வார்சடைக் குஞ்சர மூர்த்தியே. 904

ஒஞ்சு றாதெலும் பூண்உண்கின் றார்க்குநான்
அஞ்சு தீமை அகற்றலென் று ஐயகோ
நஞ்சு ணும்திருத் தாதை நயம்பெறக்
கொஞ்சு சொற்பகர் குஞ்சர மூர்த்தியே. 905

அற்றம் ஈதென் றறிந்தும்என் ஆசையில்
சற்ற ளிக்கிலை தன்மமி தாங்கொலோ
மற்ற வானவர் வாய்மொழிச் சூடுறும்
குற்ற மின்றிய குஞ்சர மூர்த்தியே. 906

ஏறு மூடிகம் சேவல் எழுதுசீர்
வீறு கேதனம் போற்றுநல் வீண்கொலோ
மாறு தீர்பனி மால்வரை மங்கைஓர்
கூறு ளார்தரும் குஞ்சர மூர்த்தியே. 907

தொடுக்கும் என்கற் கிணற்றொரு தூநதி
இடுக்கண் தீர்த்தெழச் செய்திடல் எற்றையோ
அடுக்கும் தொண்டருக்கு ஆறிரண் டற்றைநாள்
கொடுக்கு மெய்ப்புகழ்க்குஞ்சர மூர்த்தியே. 908

கேட்டில் நொந்துனைக் கெஞ்சுகின் றேற்கினித்
தாட்டி கக்கொடைத் தன்மையென்று ஈவையோ
கோட்டில் நீவக் குறத்தியைத் தம்பிபாற்
கூட்டி வைத்தருள் குஞ்சர மூர்த்தியே. 909

போத நீள்புகழ் போற்றிசைக் கின்றஎன்
காதல் தீரக் கருணைசெய் தாட்கொள்வாய்
ஈத லேஅறம் என்றவள் அன்னவர்
கோத றுத்தருள் குஞ்சர மூர்த்தியே. 910

## 92-ஆம் பத்து

பொன்னில்ஆசை கொண்டுமாழ்கு புல்லறிவிற் புழுங்கும்நான்
நன்னினைப்பு டைப்பல்சித்தர் நடுவிருக்கும் நாளஏதோ
பன்னிரண்டு சமயமும்ப ராவுசத்தி முழுதுமாம்
கன்னிவல்ல வைப்பெண்மேய கடகளிற்று முகவனே. 911

தருணம்யாது கொல்எனத் தவிக்கும்என்ற னக்குநீ
அருணையூரில் அற்றைநாள் அறைந்தசொல்பொய் ஆகுமோ
இருண்மலங்கள் மூன்றும்வேரொடு இற்றிடச்செய் கின்றவாம்
கருணைமும்ம தம்பொழிந்த கடகளிற்று முகவனே. 912

பாமரச்ச னங்கள்வாய் பகர்ந்தநிந்தை யாவும்அற்று
ஏமவாத னைத்தொடக்கும் இன்றிவாழ எற்செய்வாய்
தாமவாளி ஐந்துகொண்டு தந்தைமுன்னும் அன்றும்நேர்
காமவேள் தனைச்செயித்த கடகளிற்று முகவனே. 913

செவியிரட்டும் வாயுவால் செகம்படைத்த தெய்வம்நீ
குவியும்எனம னத்தினுட்கு வாவியும் கொதிப்பனோ
புவியசைந்தி டாதமைந்த பொன்வரைத்து கட்போரும்
கவினிலங்கு புகர்மலிந்த கடகளிற்று முகவனே. 914
இரட்டுதல்—அசைத்தல்

மங்கையர்க்க வாமலிந்த வஞ்சநெஞ்ச னேற்கநாள்
அங்கைநீ றளித்தநீ அருள்செயா திருப்பதேன்!
செங்கைமான்ம ழுப்புனைந்த சித்தனாகும் அத்தனில்
கங்கையும்ச டைக்கணித்த கடகளிற்று முகவனே. 915

ஆறுகோடி பேதமென் றறிந்துளார் அறைந்தமால்
ஈறுகண்டுன் மெய்யருட்கண் என்று மூழ்கி டச்செய்வாய்
நீறுபோர்த்து ளார்எவர்க்கும் நித்தியப் பெரும்பதங்
காறும்நல்கும் வண்மைதோய்ந்த கடகளிற்று முகவனே. 916

காறும்-வரையும்

சுருதிநிச்ச யம்தெரிந்த தூயரோடு கூட்டியே
மருதிறத்த டிந்த மாலில் வாழஎன்னை வாழ்வியாய்
வருதிவாக ரன்புரைந்த வடிவம்நாடு வார்களுள்
கருதிடும்பல் பேறும்நல்கு கடகளிற்று முகவனே. 917

மைகவின்ற மலயவேந்தும் வானமன்னும் மகிழமுன்
செய்களிப்பு எனக்கும்நல்கு தினம்விழைந்து தேம்பினேன்
மெய்களன்றி ஏனையற்ற வித்தகத்தர் நத்துசீர்க்
கைகள் ஐந்து டன்குலாவு கடகளிற்று முகவனே. 918

எந்தவேளை யும்புவிக்கு இதம்செயக்கு றித்துளேற்கு
இந்தவேத னைப்பெருக்கம் ஏனளித்து ளாய் கொலோ
கொந்தவர்ந்த செச்சைமென் குழற் குறத்தி போகம்முன்
கந்தவேள் பெறப்புரிந்த கடகளிற்று முகவனே. 919

மயிலையன்ன சாயலார்ம யற்பெருக்கம் ஆதியால்
வெயிலினிற் புழுப்புரைந்த வெப்பம்என்ற கற்றுவாய்
பயிலுமுத்த மிழ்த்திறம் பலித்தபாட்டி தன்னைமுன்
கயிலைவெற்பி டத்தில் உற்ற கடகளிற்று முகவனே. 920

## 93-ஆம் பத்து

அஞ்சொல் மடவார்தம் ஆசைக்கடல் மூழ்கி
வெஞ்சொல் வசைகேட்டு மெலியச்செயல் முறையோ
நஞ்சொல் கவிஅஞ்ச நாயேனிடை நவில்வார்
செஞ்சொல் மறந்தனையோ தெய்வக்கண பதியே. 921

பத்தித்துறை மூழ்கிப் பலபுன்னெறி யோர்தம்
புத்திக்கிடை யூறு புகலுந்துணி வுற்றேன்
எத்திக்கில்உள் ளாரும் என்னைப்பெரி தேத்தச்
சித்தித்திறம் நல்காய் தெய்வக்கண பதியே. 922

இக்கோன்மலர் பெயலால் ஈனப்படும் என்னை
மிக்கோர்பல ரிடையே மேவச்செய வலையோ
கைக்கோல்கொடு வேர்க்கும் கருமாமலை போல்வாய்
செக்கோரமும் வாழும் தெய்வக்கண பதியே. 923

காரார்நெடு மேனிக் காகுத்தன் நிகர்க்கும்
சீரார்தர வேண்டும் சிறியேனை வெறுக்கேல்
ஆராதனம் நனிசெய்து அயில்கின்றன படைக்கில்
தீராவினை தீர்க்கும் தெய்வக்கண பதியே. 924

எத்தத்தும் ஒழித்தாண் டிடுவாய்என நம்பிச்
சுத்தத்துதி செய்வேன் துயர்வாரியிற் றள்ளேல்
அத்தற்கரு மகவாய் அசலம்சிதாறும் வாழ்பல்
சித்தர்க்கொரு தாயாம் தெய்வக்கண பதியே 925

பொருவாமிடி நோயாற் புலரும்தமி யேற்கோர்
குருவாகிமுன் நின்றுஆட் கொண்டால்வசை வருமோ
தருவாணரும் நாடித் தாமேவழி படுமோர்
திருவாரண வதனக் தெய்வக்கண பதியே. 926

கருத்திற்சலிப் பின்றிக் காதற்பெரலி வுறுவேன்
திருத்திக்கொளத் தக்க திறம்நின்னருட்கு இன்றோ
மருத்துஊர்தர வெயில்காய் மயில்திகழ் தரும்ஊர்த்
தெருத்தோறும்வ சிக்கும் தெய்வக்கண பதியே 927

பொய்ப்பாச மலிந்து புண்பட்டுழல் வேனுக்கு
இப்பாரொடு வானும் ஏத்தின்னிசை யீவாய்
முப்பாற்றமிழ் முனியால் மூவாமக வானால்
செப்பாடக நதிசெய் தெய்வக்கண பதியே. 928

செப்பு ஆடகநதி செம்பாறு தாமிரபரணியும்
ஆடகநதி பொன்னி என்ற காவிரியும் -

வேந்தற்குஅற நீதி மிகஊட்டுதல் வேட்டேன்
சாந்தக்குணம் நீடும் தவவாழ்வுறல் என்றோ
நீந்தற்கழி மையல் நெடும்சாரலில் எய்தும்
சேந்தற்கருள் செம்த தெய்வச்கண பதியே. 929

குவடேநிகர் திண்டோட் கொலைவாளவு ணரையும்
கவலாதடும் வண்மை கடையேன்உறக் காண்பாய்
தவமோடுயர் தீஞ்சொற் றமிழ்தேர்கிழ வியைமுன்
சிவன்வாழ்வரை சேர்க்கும் தெய்வக்கண பதியே. 930

## 94-ஆம் பத்து

சுக்கி ரன்சொல் தொழும்புடை யாரைவென்று
அக்கி ரப்புகழ் எய்தஎன்று ஆட்கொள்வாய்
இக்கில் மிக்கினிக் கும்துதி யேசெய்வார்
விக்கி னந்தெறும் வித்தக வேழமே. 931

நானி லத்தில் நலம்குலைந் தேங்கெனக்கு
ஆனி யற்றப தம்அளிப்பாய் கொலோ
பானி லாமதிப் பிஞ்சணி பான்மையால்
வேனில் வேள்வெருள் வித்தக வேழமே. 932

ஆய்ந்த நான்மறை அந்தணர் ஆதியர்க்கு
ஈந்த கம்களிக் கும்தகை யீவையோ
தேய்ந்த திங்களும் செம்பொற் கடுக்கையும்
வேய்ந்த வார்சடை வித்தக வேழமே. 933

உண்ணி லாவும் உனதருள் உன்னியும்
கண்ணி லாரிற் கலங்கல் கழித்திடாய்
தண்ணி லாமுடித் தந்தையைப் போலவே
விண்ணில் ஆடல்செய் வித்தக வேழமே. 934

சகடம் ஒன்றுதைத் தான்நிகர் தன்மைதோய்ந்து
அகட ளந்தலை யாதரு ளாய்கொலோ
முகட ளாவு முடித்தலை ஒன்றுடை
விகட மங்கள வித்தக வேழமே. 935

கொன்றி டுங்கொடி யோர்குல காலனா
நின்றி கம்புரப் பேன்னனை நீக்கிடேல்
அன்றி பத்தலை யான்முத லோரைவெல
வென்றி துன்றிய வித்தக வேழமே. 936

பொன்ன வாமுத வாஞ்சில புன்மையால்
இன்னல் எய்தெனை இன்னமும் சோதியேல்
வன்ன மேகலை வல்லவை யாதிய
மின்ன னார்புணர் வித்தக வேழமே. 937

பொதியை நாதற்கும் பொன்னகர் மன்னற்கும்
நதியி ரண்டளித் தாங்குஎனை நண்ணுவாய்
மதிய ணிச்சிவன் மார்பணி பூண்தரும்
விதிம றைத்தலை வித்தக வேழமே. 938

பால லோசனப் பண்ணவன் ஆதியோர்
போல வாழும் புகழ்எனக் கீவையோ
மால ளித்த மறக்குல வள்ளியை
வேல னுக்கருள் வித்தக வேழமே. 939

கொள்ளி கண்டு குலையும் எறும்பனேன்
நள்ளி டும்பயன் எய்தநல் காய்கொலோ
தெள்ளி யோர்புகழ் கீரவ்வைக் குச்சிவன்
வெள்ளி வெற்பருள் வித்தக வேழமே 940

## 95-ஆம் பத்து

சாயாசம் திருநீறு *கண்டிகை கவினப் பூண்டுளநான்
ஆயா சம்படத் தொடரும் பாழ்மிடி அனைத்தும்
தீர்த்தருள்வாய்
பாயா சம்பழ வருக்கம் ஆதிய பருகு மால்களிறே
மாயா சத்தியை ஏவி நாடொறும் வம்பு செய்யேலே. 941

ஐந்து கைக்களிறு ஆனனத்திறை அலதொன் றில்லையெனா
முந்து வார்களைச் சூழும்ஊழ்வினை முழுதும் தீர்ப்போனே
வெந்து யர்க்கடற் படியும் என்னுள்வி ளாம்பட்டுரிலநாள்
வந்து சொல்லிய சொல்லைமறந்து வம்புசெய்யேலே. 942

ஆக வப்புலை மத்தகர் யாரையும் அடக்கும் ஆசையுளார்க்கு
ஏக தத்துவ மாகிக் காண்டரும் இபமு கத்திறைவா
தாக மிக் றன்கண மூன்பெருச் சாளிஎன்றுளதோர்
வாக னத்தினில் வந் திடாமல்இவ் வம்புசெய்யேலே. 943

ஊழ்க மிக்கவும் வல்லை நீயென உன்னுகின்றவராடு
ஆழ்க ருத்தினர்க் கருளும் ஐங்கரத்து ஆதிவானவனே
ஏழ்க டற்புரை வினையி னால்இளைத்து ஏங்கி எப்பொழுதும்
மாழ்கல் உற்றுனை வணங்கும் என்னிடம் வம்புசெய்யேலே.
944

அருந்த வத்தின்வித் தாயதாரகத் துஆடல்செய்து, அகிலம்
பொருந்து பல்லுயிர் களுக்கும் நன்மைசெய் பூட்கைமாமுகவா
திருந்து பூண்முலை மாதராதிய தீய ஏடணையால்
வருந்த விட்டனை இன்னம் என்னிடம் வம்புசெய்யேலே. 945

கான கத்துறும் வேடரும்கொலைக் காதல்நீங்கிடவே
யான கத்திடை நாடல்ஓர்கிலை என்றி டத்தகுமோ
போன கத்திரள் அளிக்கின்றூர்க்கருள் புகர்மு கத்திறைவா
வான கத்தரும் வெருளு றக்கொடும் வம்புசெய்யேலே. 946

ஆயி லங்குச பாசம்ஏந்திய அருமை ஓர்ந்தறைவார்
சேயிலின்புற வல்லவைப்பெருந் தேவியோடவிர்வாய்
நாயி னும்கடைப் பட்டநெஞ்சோடு நான்சென்றூர்மனைப்பல்
வாயில் தோறும் நின்றுஇரக்கவிட்டிடும் வம்புசெய்யேலே. 947

பொதிய மால்வறை நாதற்கும்பொலம் பூமிகாவலற்கும்
நதியி ரண்டளித் தாண்டுகொண்டதொர் ஞானச்சிந்துரமே
விதிசெய் வல்லபம் கருங்கற் பாறையில்
வெட்டும்கூபம்ஒன்றால்
மதிம ருண்டுழல் வேனுக்கின்னமும் வம்பு செய்யேலே. 948

ஆலகொண் டானருள் புதல்வனாகிவந்து அனலன்ஆதியரைக்
கோல் கொண்டமர்செய் யாஉபாயத்திற் கொன்றகுஞ்சரமே
வேல்கொண் டாற்கருள் புனத்திற் செய்தனை
வெறுக்குமங்கையர்மேல்
மால்கொண் டேங்குறும் படிஎன்றன்னிடம் வம்புசெய்யேலே.
949

பரைகண் டின்புற நடிக்கும் தந்தையிற் பாம்பும்
பூண்டுகொண்டே
குரைக முற்பதம் தூக்கிஆடல்செய் கோலமால்களிறே
உரைசெய் பாடல்வல் லார்க்குட்சீரிய ஒருத்தியைக்கயிலை
வரையில விட்டதுண் டாகில் இங்ஙனம் வம்புசெய்யேலே.
950

## 96-ஆம் பத்து

வெந்துயர்க் கடலில் மூழ்கி மெய்யுணர் விடிந்து சால
நொந்துடில் சிறியேற் குன்கண் நோக்கமென் றருள்வாய்
கொல்லோ
பைந்துணர் இதழி யாத்திப் பனிமதி பழகும் சென்னி
ஐந்துகைத் துவர்க்குன் றேய்க்கும் ஆனைஆ னைத்தம் மானே.
951

இருள்நெறிப் பதிதர்க் கெல்லாம் எமனென இயங்கும் ஏற்றத்து
தெருள்நெறிப் புலவர் கூட்டம் சேர்தரு தினம்எற் கின்றோ
பொருள்நெறிக் களிகொண் டாடும் புல்லரைச் சிறிதும் எண்ணா
அருள்நெறி யினர்முன் போற்றும் ஆனைஆ னனத்தம் மானே.
952

இடருழந் திளைக்கின் றேனுக்கு இகபரம் முழுதும் கைக்கும்
திடமன முதவி நின்பொற் சேவடி சூட்டொண் ணாதோ
விடமுறழ் மறலி யாதி வீரர்மெய் யடியர்ச் சீறில்
அடல்மலி கயிற்றாற் கட்டும் ஆனைஆ னனத்தம் மானே. 953

கங்குலும் பகலும் தீர்ந்த களிப்பெருங் கடல்வேட் டுள்ளேற்கு
இங்குபல் மதத்தோர் தாழும் இகழ்வசை இசைக்கலாமோ
நங்குல தேவென் றேத்தும் நரர்மனக் கமலங்கள் ஈர்க்கும்
அங்குசப் படைஒன் றேத்தும் ஆனைஆ னனத்தம் மானே. 954

பாகுநேர் தமிழ்ச்சொற் பாடல் பயன்பல ரடைதல் தேர்ந்து
வேகுமென் மனத்தும் ஆர்வம் வேலைதோய் தரச்செய் வாயோ
யோகுளார் மனப்பூத் தோறும் ஒருங்குபோய் உலவச் சோம்பாம்
ஆகுவா கனத்தி லேறும் ஆனைஆ னனத்தம் மானே. 955

தேறுமின் புதவுமையற் சேயிழை மடவார் சூழும்
வீறுளான் தொடுக்கும் அம்பால் மெலிவுரு விறலென் றிவாய்
நீறுபோர்த் தாடும் தாதை நெறிமுறை பிறழா வண்ணம்
ஆறும்வார் சடையிற் சூடும் ஆனைஆ னனத்தம் மானே. 956

கற்றணற் றிடையிந் நாளிற் கங்கைபோல் ஆறொன் றுண்டாய்
எற்கிசை வழங்கி ஆழி யிடைபுகச் செயஒண் ணாதோ
சொற்கிளி யனைய பான்மை துலங்கும்வல் லவைமுன்னாகும்
அற்கிளர் குழலார் நாடும் ஆனைஆ னனத்தம் மானே. 957

திருவருட் டுளிபெற் றோரிற் சேர்த்தெனைச் செகத்தோர்
சொல்ல
ஒருநல்ஆறு அளிக்கி னல்லால் உளமகிழ் வடையேன் கண்டாய்
பொருவில்கும் பனுக்கும் விண்ணூர்ப் புரவலன் றனக்கு மந்நாள்
அருநதி யிரண்டீந் தாண்ட ஆனைஆ னனத்தம் மானே. 958

மனங்கனிந் துனதாள் போற்றா வம்பரிற் றலையாம் எற்கோர்
இனங்கன வினில்நீ சொன்ன திருமொழி பழுதாம் சொல்லோ
கனங்கவின் றிடுமென் கூந்தற் கருங்குறக் கொடியாற் கந்தன்
அனங்கவேட்கு உடையா தாண்ட ஆனைஆ னனத்தம் மானே.
959

பொக்கணைத் திருநீ றன்பர் புடைமிகப் பொலியும் கீர்த்தி
இக்கணம் அடியேற் கீந்தால் இளப்பம்நிற் றொடரும் கொல்லோ
முக்கண்வா னவன்றன் குன்றில் முதிர்தமிழ்க் கிழவிதன்னை
அக்கணம் விடுத்துக் காத்த ஆனைஆ னனத்தம் மானே. 960

## 97-ஆம் பத்து

நங்கையர் மையலெ னுங்கட லூடு நலிந்துழ லுந்தமியேன்
அங்கையின் நெல்லியில் நின்னரு ளார்வம் அடைந்திடும்
நாளுளதோ
செங்கையில் மான்மழு வும்கன கச்சிலை ஆதிய வும்சிரசில்
கங்கையும் வைத்தபி ரான்முன் அளித்தருள் கணபதிஅப்பாவே.
961

பனகவி டத்தினி லும்கொடி தாநிகழ் பாழ்மிடி நீர்தரவே
உனதுகை மேருவில் உண்டைபெ றும்படி உன்னுவ
தோர்கிலையோ
மனதில்நி னைப்பினும் வானவர் அச்சுறு வன்குணம் உற்றவனாம்
கனலவு ணன்றனை உண்டுசெ யம்பெறு கணபதி அப்பாவே.
962

தோய்கலி வாதனை தீர்ந்தள வற்ற சுகம்பெற நாடும்எனைப்
பேய்களி னும்கொடி யாரவை யூடு பிதற்றவி டத்தகுமோ
நோய்கள் முழுக்க ஒழித்துவ ணங்குநர் நோன்புமு டித்தருளும்
காய்கதி ரன்னநி றத்தொடு நீடிய கணபதி யப்பாவே. 963

தொன்னிலை நான்மறை யாதிய வாம்பல சுருதிக ளும்பிழையே
என்னிருள் மூடினர் யாவரை யும்செறும் ஏற்றமெ னக்கருள்வாய்
பன்னிரு பேதம தங்களும் நன்குப ராவிய சத்திகளாம்
கன்னியர் மூவர்ம ணம்புண ரத்திகழ் கணபதி அப்பாவே. 964

சிற்பர்செய் விக்கிர கத்தில்இ ருந்தொரு சிறுவன்உ வப்புறவே
முற்படும் உண்டிஅ ருந்திய தோர்கதை முத்தமிழ் ஓர்செயலோ
சற்பம்நி கர்த்தகு ணத்தினர் வேண்டுவ தாமும் வழங்கிடுவாய்
கற்பக வர்க்கமெ னத்திகழ் அங்கைகொள் கணபதி அப்பாவே.
965

கூறுப டுத்திநின் ஆடலை யேயிகழ் கொள்கையி னோர்சிலரும்
பேறுபொ ருந்தஅ நாள்உத வத்தகு பெற்றியி நாள்இலையோ
நூறும தத்தரும் ஒப்பிய தாரகம் நோற்பவர் தன்கழல்சேர்
காறும்வி ருப்பம்அ ணைத்தும ளித்தருள் கணபதி அப்பாவே. 966
காறும்—வரையும். இதுகாறும் என்பது இதுவரையும்
என்றாற்போல.

தேனனை யார்பலர் நிந்தனை கொண்டு இயங்கும் எனோடு அவண்ஞர்
நாளறையும் சொல் மறைந்தொழி யாத நலம்புரி தற்கிசைவாய்
தூளன மாகவி பூதிய ணிந்து துதிபபவர் கண் காணக்
காளமுகிற்புரை ஆகுவின் மேல்வரு கணபதி அப்பாவே. 967

பாதியை முனிக்கும் விணோர்பவர் நண்ணிய பொன்னகா மன்னற்கும்
நதிகள் இரண்டுமுன் ஈந்தமை மெய்ப்பட நான்விழை ஆறருள் வாய்
பதிபசு பாசம்எ னத்திகழ் மூன்றின் பாரச மட்டியும்மெய்க்
கதியும் வயங்கிய பிரணவ மாகிகழ் கணபதி யப்பாவே. 968

ஐந்தரு வான்இரு நதிமணி ஆதிய அத்தனை யும்புரையத்
தந்தளி கூர்பவர் தம்மிசை நண்ணிய தன்மைஓர் புன்மையதோ
வெந்தறு கட்சிலை வேடுவர் தம்இதண் மேயதொர் மெல்லியலைக்
கந்தனு வப்பம ணம்புரி வித்தருள் கணபதி யப்பாவே. 969

சயிலமு ழுக்கவி ழைந்துந டம்புரி தம்பியை நம்பியநான்
'வெயிலிடை' மென்புழு விற்றள ராதருள் வென்றித ரிற்பிழையோ
பயிலுறு முத்தமி ழால்அள வின்றிய பற்பல ஆடல்செய்தாள்
கயிலை மலைத்தலை மீதுவி ருத்தருள் கணபதி அப்பாவே. 970

## 98-ஆம் பத்து

இந்து சேகரன் அன்றொரு நால்வர்க்கு
ஈந்தமெய் யருட்பெரும் பேறே
தந்து காத்திடின் அல்லதென் மனத்தகச்
சஞ்சலம் தவிரேன்காண்
பந்து நேர்முலை அணங்கினர், களும்புல
பண்ணவர் களும்ஏற்கும்
ஐந்து கற்பகத் தருக்களும் நாணுற
அவிரும் ஐங்கரத் தானே. 971

நாடல் தோறும்நின் திருவுரு என்மனம்
நடுக்குல விடப்பெற்றுப்
பாட லால்விழை வனவெலாம் முடித்திடும்
பரிசெனக் கருளாயோ

கோடல் தீர்தர லின்றிய வெண்ணிறக்
கோடுமாங் கனிகும்பம்
ஆட லங்குசம் பாசமென் றிவைதிகழ்
அணிகொள்ஐங் கரத்தானே. 972

திலக வாணுதற் கவுரிதன் புதல்வரிற்
சீரியனாம்நின்சீர்
குலவும் என்மன வெளியில்அன் றுனதுவாய்
கூறுசொல் பலியாதோ
நிலம சைந்திடாது அதனடுச் சந்ததம்
நிகழ்பொலங் கிரிமீதே
அலவன் றன்குலத் தினர்கதை முழுமையும்
அமைக்கும்ஐங் கரத்தானே. 973

பாரும் வானமும் உய்வுறும் படிமிகப்
பரிந்துழைத்திடும் என்னைச்
சோரும் நெஞ்சொடு கயவர்தம் மனைதொறும்
துயர்ப்பட விடலாமோ
மேரு விற்புல வரும் அதிற் செல்லொணா
விறலவு ளரும்மற்றோர்
ஆரும் எப்பொழு தினும் முதற்றொழுதெழ
அருள்செய்ஐங் கரத்தானே. 974

கனந்த னைப்பொரும் குழலியர் மோகமாம்
கடலிடைப் படிந்தாலும்
மனந்த னிற்றினம் உனதருள் நாடுழ
வருந்துவ தறியாயோ
சினந் தரன் பிடித் தடித்தெறிந்திட்டஅத்
தினமிகச் சிந்தித்த
அனந்த னாம்பெரும் பாம்பையும் கருணையால்
ஆண்டஐங் கரத்தானே. 975

பைய ராஅணைப் பசும்புயல் உய்வுறப்
பலவிதத் தருள்செய்தாய்
செய்ய தீந்தமிழ்க் கவிகளாற் றுதிசெயும்
சிறியனேற் கிரங்காயோ
வைய வேதியர் வபைத் தசை யருந்தவும்
மயக்குபே ரெழிலார்ந்த
ஐயர் வாழ்வையும் அருவருத்திடவலார்
அறியும்ஐங் கரத்தானே. 976

விழும் வாழ்வனைத் தும்பெறி னல்லது
மெய்க்கதி வந்தாலும்
ஏழு பேதமாம் பிறப்பினும் தாழ்வதென்று
எண்ணும்நீர் ஏன்தந்தாய்
தாழும் நீர்மையில் தவறிய விண்ணவர்
தவிப்புறத் தவளச்சீர்
ஆழும் வாரியில் கருவிடம் உதித்தல்செய்து
அடக்கும்ஐங் கரனாரே. 977

பேறு றாதருள் முழுதடைந் தாளனப்
பெரிதிறு மாக்கின்றோர்
கூறும் நிந்தையும் கொடுதளர் வுறும்எனுட்
குறித்தவா றறியாயோ
நீறு போர்த்தினிது அம்பலத் தாடினன்
நெடுஞ்சடைப் புனல்போலும்
ஆறு கும்பமா முனியொடு மகபதிக்கு
அருளும்ஐங் கரத்தானே. 978

மோனை யாதிய பிறழ்கவி முன்னைநாள்
மொழிந்தவா பெறும்பேறும்
ஏனை யோரும்இக் காலம்எய் தாவிதம்
என்னைகொல் அறிகில்லேன்
மானை நேர்விழிக் குறமகள் கிழமுனி
வடிவுடைக் குகற்சேர
ஆனை யாஉருக் கொண்டுசென்று அடவியில்
அதட்டும்ஐங் கரத்தானே. 979

கமல வேதியன் எனக்கெழு தியவிதி
கடைத்தகை யினதேனும்
நிமலன் தேரின்அச் சிறுத்தநிற் கதன்பிழை
நீப்பரி தெனலாமோ
முமல வாதனை ஒழிக்குமா தவரெலாம்
முன்னுமெய் முதியானை
அமல ஞானமே அணையவெண் கயிலைமீது
ஆக்கும்ஐங் கரத்தானே. 980

## 99-ஆம் பத்து

கற்புறு சிந்தையி னாலுன் கழல்க ளேமிகநாடி
நிற்புகழ் கின்றஎன் றன்னை நீசரும் ஏசிட லாமோ
அற்புதச் சித்திகள் கோடி ஆடிநின் அன்பரொடு ஆர்க்கும்
பொற்புற என்றனை ஆள்வாய் புகர்மு கப்பெருமானே. 981

வேதமொடு ஆகமம் போற்றும் மெய்யருட் சீர்மிக வேட்கு
நீதமில் லார்குடைக் கீழ்யான் நெட்டுயிர்க் கச்செயல் ஏனோ
ஆதவன் சந்திரன் அங்கி அம்பக மாதல்கண்டு அன்பார்
பூதக ணப்படை சூழும் புகர்மு கப்பெருமானே. 982

திண்ணிய நெஞ்சுடைப் பொல்லார் சீரழி யும்படி செற்றுக்
கண்ணியம் ஆயிரம் பெற்றுக் கதியும் சேராற்காப்பாய்
தண்ணிய கங்கைநி லாவும்சடையும் பிறையும்நாடிப்
புண்ணியர் யாரும்முற் போற்றும் புகர்மு கப்பெரு மானே. 983

வேட்கை முற்றும் தருவாய்நீ மெய்யென நம்பும் என்பாடல்
கேட்கை எய்தாததுஒத் திருந்தாய் கிருபை வாரிவற் றியதோ
நாட்கை குன்றச்ச பித்தாண்ட நலம்சொல்வாரிடர் தீர்க்கும்
பூட்கைஒன் றோடுகு லாவும் புகர்முகப் பெருமானே. 984

கன்மமுன் னாம்மல மூன்றும் கழிந்த மெய்க்கதி நாடும்
நின்மல சித்தரொடு யானும் நிலவக் காண்பதென் றுஒதாய்
தன்மமெல் லாம்வளர் கின்ற தடங்கைத் தாய்வயி றீன்ற
பொன்மலை போலுருக் காட்டும் புகர்மு கப்பெருமானே. 985

கருப்பு வில்மத வேள்செய் கலகத் தால்மிகக் கலங்கி
இருப்பு நெஞ்சகம் சோர்வேன் என்றருள் செய்யஎண்
ணுவையோ
மருப்பொன் றால்மதிக்குலத்தோர் வாழ்ந்த பலகதை வரையப்
பொருட்பொன் றேந்திய திண்கைப் புகர்மு கப்பெருமானே. 986

சீத வெண்கடற் பாம்பிற் றினமும் பொய்த்துயில் செய்யும்
மாத வன்செயல் வேட்டு வருந்த என்செய்கின் றாயோ
காதல் வல்லவை முதலாம் கன்னி மார்சிலர் கண்டு
போத லநக்குலநக் குருகும் புகர்மு கப்பெருமானே. 987

ஒருபே ராகுவின் மேற்கொண்டு உம்பர் யாவரும்சூழ
வருபே றென்றருள் வாயோவலிதன் றோதலும் வம்போ
புருகூ தன்களி கூரப் பொன்னி தந்துஅதத் தியற்காட்
பொருணா நதியும் ஈந்த புகர்மு கப்பெருமானே. 988

சினத்தில் மிக்கவெந் தருவர்ச் செறுத்த லேவிழை கின்றேற்கு
அனத்த மாமிடி யீந்தாய் அதுவும் நின்னருட் கடிகோ
மனத்து நோய்குகற்கு ஈந்த மறப்பெண் ணேவலி தணையம்
பனத்திற் போய்உறுத் தியதோர் புகர்மு கப்பெருமானே. 989

அகழும் கார்கட லொடுதீ அன்று கொண்டஎன் தமிழ்ப்பா
நிகழும் பூதல மிசையே நிலவச் செய்யவும் வலையோ
திகழும் வெள்ளியங் கிரிமேல் செஞ்சொற் பாடல்கொண்
டன்பால்
புகழும் ஔவையை விட்ட புகர்மு கப்பெருமானே. 990

கள்ளை நேர்தமிழ்ப் பாடல்க ளால்உனைச்
காதலித்துக் களிந்து ஏத்தும்நான்
அள்ளை போலும் குணத்தினர் பால்இரந்து
ஆர்வம் குன்றி அலமர லாகுமோ
பிள்ளை யாமவர் யாவர்க்கும் மூத்துளாய்
பேழை போலும் பெருவயிற் றப்பனே
வெள்ளை வாணிம ணாளன்முன் சொன்னநால்
வேதம் ஏத்தும் விநாயக மூர்த்தியே. 991

அள்ளை - சேற்றினை

ஆத வன்பனி மாமதி அங்கியே
ஆய்நிலாவும்நின் அம்பகத்து யாதும்நான்
போத வன்மிடி யாற்றளர் வெய்தும்இப்
புண்ஒ ழித்தருள் பொற்பின தல்லவோ
மாத வன்திரு உந்தியென் றுள்ளநாண்
மலரில் நாளும் வசிப்பவன் வாய்பகர்
வேதி நூற்சம யத்தினர் யாருமுன்
விரும்பிப் போற்றும் விநாயக மூர்த்தியே. 992

கார ணம்சிறி தும்குறி யாதுபல்
காரி யங்கள் கருதி மயங்குபுன்
நீர ரோடெனைக் கொல்லாதுஉனைத்தினம்
நேடு மன்பர் நெறிச்செல் உய்ப்பையோ
சோர நெஞ்சகத் தக்கனும் தேவரும்
சூழ வேதிய ரும்துயர் எய்தஓர்
வீர னாகித தடிந்த பிரான்புரை
வெள்ள வேணி விநாயக மூர்த்தியே. 993

அடலை யாலமுழுக் காடிக்கல் லாடையோடு
அக்க மாலை அணிதரும் அன்பரை
நடலைத் தியவர் கூடிஎள் ளத்தரும்
நாளி லென்னையிந் நானிலத்து ஏன்விட்டாய்

கடலை யாடிய புங்கவன் செய்தவத
தோற்ற மாகித் தொழும்பினர் கைஎறி
விடலை முப்புடைக் காய்முத வாநுவல்
மிக்க உண்டி விநாயக மூர்த்தியே. 994
அட்டை-திருநீறு

சுக்கி ரன்பணித் தொண்டரும் கண்டிகழ்
தூர்த்த நீசத் தொழிற்கொடி யோர்எதிர்
உக்கி ரக்குணம் காட்டிவெல் வார்களோடு
ஒன்றும் வாழ்வெனக்கு என்றருள் வாய்சொலோ
முக்கி யத்தவத் தோர்முதல் யாவரும்
முன்னிச் செய்வன முற்றறக் காத்திடம்
விக்கி னங்கள்எல் லாம்தணப் பாவென
வேண்டத் தக்க விநாயக மூர்த்தியே. 995

செல்வர் போல்பவர் கைக்கொடை யேமிகச்
சிந்திக் கின்றஇத் தீவினை தீர்த்திலாய்
நல்வ ரத்துள்ஒன்று உன்மனச் சாட்சியா
நான்பெ றும்படி நல்கியது இல்லையோ
கல்வ ரைப்பிடி முன்தனைப் பெற்றிடக்
கருணை செய்த கயிலைப்பி ரான்என
வில்வம் ஆத்தி கடுக்கைபுற் கொத்து அரா
வேய்ந்த சென்னி விநாயக மூர்த்தியே. 996

சாக ரத்தொடு தீயினும் இட்டஎன்
தமிழ்வந்து இந்தத்தரை யிற்குலாவினே
நீக னாவினிற் சொன்னசொல் மெய்யெனா
நினையும் என்சிறு நெஞ்சறி யாய்கொலோ
பாக சாதனன் ஊர்பரிக் கூட்டமாய்ப்
படியும் வானும் பராவருட் பண்புதோய்
மேகம் ஏழும்வெட் கும்படி மும்மதம்
மிகப்பொ ழிந்த விநாயக மூர்த்தியே. 997

பாதி வாண்மதி சூடிய தாதிய
பலபல் கோலமும் பைந்தகை ஆகுமேல்
கோதில் வானவர் காணுறக் கொண்டவா
கொண்டென் முன்னும் குலாஷவது எற்றையோ
ஆதி நாயக னேநிகர் சீர்பெறும்
அகத்தி யற்கும்விண் ஆளும்வ லாரிக்கும்
மேதி னித்தலை ஆறுஇரண் டந்தநாள்
விரைந்து நல்கும் விநாயக மூர்த்தியே. 998

நாடச் செந்தமி ழாற்றுதிக் கத்,தொழ
ஞானம் நல்கினை நானிலத்து ஈனர்போல்
வீடச் செய்துஒழி யேல்அரு ளானந்த
வேலை யின்றுளி, மேவத்தந் தாட்கொள்வாய்
ஆடற் செஞ்சிகப் புள்இனர் கள்வன்ஓர்
அமல மாமுனி யாம்புனத்து அன்றொரு
வேடப் பெண்வலி திற்புண ரச்செய
வேழ மான விநாயக மூர்ர்த்தியே. 999

மறுகடிதம்

இங்கி ருந்த கிழவியைத் திண்கையால்
இரசி தக்கிரி யின்றலை ஏற்றும்நீ
அங்கி லங்குபொன் வெற்பில்ஓர் துண்டுபேர்த்து
அடிய னேனுக் களித்திடல் பாரமோ
கொங்கி சைந்தபல் பூச்சொரிந்து உண்டிகள்
குவித்துத் தோத்திரம் கூறிக்குட் டிக்கொள்வார்
வெங்கி லேசமும் விக்கின மும்தெறும்
விகிர்த சீல விநாயக மூர்த்தியே. 1000

# வேண்டுகோள்

**உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்** **பதிவு எண் 290 / 84**

1. கல்வி நிலை, பொதுவாக, படிப்புக்கும் அறிவுக்கும் வாழ்க்கைக்கும் பண்பாட்டிற்கும் தொடர்புடையதாக அமைய வேண்டும். ஆனால் தற்காலத்தில் கல்வி நிலை அவ்வாறு அமையவில்லையோ என்று தோன்றுகிறது. அந்தக் குறையைப் போக்க கல்விக்கும், வாழ்க்கைக்கும் தொடர்புடையதாகக் கல்வியை நிறுவுவதற்கு இந்த இயக்கம் தொடங்கப்பட்டுள்ளது.
2. இவ்வாய்வு இயக்கம் நாடு, மொழி, இனம், சமயம், நிறம், போன்றவற்றைக் கடந்து, மனித சமுதாய முன்னேற்றத் திற்கு வேண்டியதைச் செய்யும்.
3. இதில் முதல் வகுப்பு முதல் ஆய்வுப் பட்டம் பெறும் வரை எல்லாவகையான கல்வியும் அமையும்.
4. வாழ்க்கைக்குத் தேவையான தொழில் கல்வியும், வளமாக வாழ்வதற்காக மருத்துவக் கல்வியும், மன அமைதிக்காக இலக்கியக் கல்வியும் இந்த இயக்கம் கற்பித்து வரும்.
5. தமிழில் இதுவரை வெளிவராத நூல்கள் அனைத்தையும் வெளியிட இவ்வியக்கம் முயலும்.
6. தமிழ் நூல்கள் அனைத்தையும் ஒரு சேரத்தொகுத்து வெளியிட இவ்வியக்கம் திட்டமிட்டுள்ளது.
7. தமிழைப் பற்றி உலகினர்க்குணர்த்த ஆங்கில நூல்கள் பலவற்றை வெளியிட இவ்வியக்கம் எண்ணியுள்ளது.
8. இவ்வியக்கம் வளர 'பல துளி பெரு வெள்ளம்' என்ற நிலையில் தங்களால் இயன்ற பொருள் உதவியினைத் தருமாறு இவ்வியக்கத்தில் சார்ந்த அனைவரும் வேண்டு கின்றனர்.
9. தாங்கள் தருகின்ற பொருள் சிறிய அளவாயினும் பொன் போல் போற்றப்பட்டு மனித சமுதாய வளர்ச்சிக்குப் பயன் படுத்தப்படும்.
10. மனித சமுதாய வளர்ச்சிக்குத் தங்களால் இயன்ற பங்கினை தருக என வேண்டுகிறோம்.

முகவரி
**உலகத்தமிழ்க் கல்வி இயக்கம்**
**33, திருமலை நகர் இணைப்பு,**
**பெருங்குடி,**
**சென்னை-600096**

---

Designed by P. N. Anandan
Wrapper printed at Eskay Art Printers, Madras-5 Phone : 841478